# தமிழ் அகராதியியல் வளர்ச்சி வரலாறு



வ. ஜெயதேவன்

# தமிழ் அகராதியியல்
# வளர்ச்சி வரலாறு

**வ. ஜெயதேவன்**
*இணைப் பேராசிரியர்*
*தமிழ் மொழித்துறை*
*சென்னைப் பல்கலைக்கழகம்*
*சென்னை 600 005*




விற்பனை உரிமை
*ஐந்திணைப் பதிப்பகம்*
*282 பாரதி சாலை*
*திருவல்லிக்கேணி சென்னை-600005*
*தொலைபேசி 84 57 12*

# BIBLIOGRAPHICAL DATA


| | | |
|---|---|---|
| Title of the book | : | தமிழ் அகராதியியல் வளர்ச்சி வரலாறு (History and Development of Tamil Lexicography) [Ph.D. thesis, University of Madras, 1979] |
| Language | : | Tamil |
| Edition | : | First ; 1985 |
| Author | : | Dr. V. Jayadevan |
| Copyright | : | Author |
| Paper used | : | Amaravathi 14.2kg & 14.4kg. |
| Size of the book | : | 21 × 14 cm |
| Printing Points | : | 10, 12, 14 |
| No. of pages | : | viii + 328 |
| No. of copies | : | 1000 |
| Printers | : | Devaneyen Achchakam Madras 600 005 |
| Binding | : | Limp |
| Price | : | Rs.40/- (Forty) |
| Subject | : | Lexicography |
| Call Number | : | P 31 : 4k v N 85 |

# உள்ளுறை

# முன்னுரை

மொழிப் பயிற்சிக்கு நிகண்டுகளும் அகராதிகளும், அறிவு வளர்ச்சிக்குக் கலைக்களஞ்சியங்களும் உதவுகின்றன. தமிழில் இக்கருவி நூல்களின் வரலாறு மிகவும் பரந்து பட்டதாகும். தொல்காப்பியம் தொடங்கி இன்றுவரை தமிழ் அகராதியியல் வளர்ச்சி வரலாற்றை ஆய்வு நெறியில் விளக்குவது இவ்வாய்வின் நோக்கமாகும்.

தமிழ் அகராதியியல் ஆய்வின் முன்னோடி பேராசிரியர் எஸ். வையாபுரிப் பிள்ளை ஆவர். சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேரகராதியில் இவர் தமிழ் அகராதியியல் வரலாற்றை ஆங்கிலத்தில் எழுதியுள்ளார். இக்கட்டுரையும் இவர் பதிப்பித்த நிகண்டுகளில் அமைந்த இவரது ஆராய்ச்சி முன்னுரைகளும், கலைக்களஞ்சியத்தில் 'அகராதி' குறித்து இவர் வரைந்துள்ள கட்டுரையும், இவரது வேறு சில கட்டுரைகளும் குறிப்பிடத்தக்கவை. புலவர் மணி மு. சண்முகம் பிள்ளை கலைக்களஞ்சியத்தில் 'நிகண்டு' பற்றி எழுதியுள்ள கட்டுரையும், வேறு சிலவும் கருதத்தக்கவை. புலவர் சுந்தர சண்முகனார் தமிழ் அகராதிக் கலை என்னும் விரிவான நூலை எழுதியுள்ளார். இதன் ஆங்கிலச் சுருக்கம் ஒன்றையும் இவர் தனிநூலாக வெளியிட்டுள்ளார். மு. அருணாசலம் அவர்கள் தமது இலக்கிய வரலாற்றில் நிகண்டுகள் குறித்து விரிவாக விளக்கியுள்ளார். ஞானப்பிரகாச அடிகள், திருவாளர்கள் கா. மீனாட்சிசுந்தரம், சூ. இன்னாசி ஆகியோரது ஆய்வேடுகள் குறிப்பிடத்தக்கவை. இவை தவிர சிற்சில கட்டுரைகளும் வெளிவந்துள்ளன. இவை அனைத்தும் தமிழ் அகராதியியல் வளர்ச்சி வரலாற்றை முழுமையாக விளக்கும் நோக்கில் தோன்றியவை அல்ல. எனவே, இந்த நோக்கில் இவ்வாய்வு எழுந்தது.

இவ்வாய்வு ஐந்து இயல்களைக் கொண்டதாகும். முதல் இயல், தமிழ் அகராதியியல் வரலாற்றைச் சுருக்கமாக அறிமுகம் செய்கிறது. இரண்டாவது இயல் நிகண்டுகளுக்கு முற்பட்ட கால அடைவில் தமிழ் அகராதியியலை ஆராய்கிறது. மூன்றாவது இயல், நிகண்டுகளின் பொது அமைப்பை விளக்கி நிகண்டுக் காலத்தில் அகராதியியல் எவ்வாறு இருந்தது என்பதைத் தெளிவாக்குகிறது. நான்காவது இயல் அகராதிகள்,

கலைக்களஞ்சியங்கள் ஆகியவற்றின் பல்வேறு வகைகளைச் சுட்டுவதோடு அகராதியியல் எவ்வெவ்வாறு வளர்ந்து வந்துள்ளது என்பதையும் காட்டுகிறது. ஐந்தாவது இயல் இவ்வாய்வினால் விளைந்த பயன்களைத் தொகுத்து உரைக்கிறது. அடுத்துக் 'குறிப்புகள்' அமைந்துள்ளன. இப்பகுதியில் ஒவ்வோர் இயலுக்கும் உரிய அடிக்குறிப்பு எண், இதனையடுத்து ஆசிரியர் அல்லது நூற்பெயர், இதனையடுத்து ஆதாரம் காட்டப் பெறும் பகுதிக்குரிய பக்க எண் அல்லது பா எண் அமைந்துள்ளன. எடுத்துக்காட்டுகள் :

12. சுந்தரசண்முகனார் 73

34. ***நீலகேசி*** 666

ஒரே ஆசிரியரது ஒன்றுக்கும் மேற்பட்ட நூல்கள் அல்லது கட்டுரைகளிலிருந்து ஆதாரம் காட்டுகையில் அவை 'மேற்கோள் நூல்கள்' என்னும் பகுதியில் முறையாக வரிசைப் படுத்தப்பட்டு உரிய வரிசை எண் ஆசிரியர் நூற்பெயருக்கு முன் மேற்குறியீடாக அமைக்கப்பட்டுள்ளன. எடுத்துக்காட்டு: 28 [1] வையாபுரிப் பிள்ளை 158. மேற்கோள் காட்டப்பட்டுள்ள கட்டுரை நூல்களைப் பற்றிய முழுத் தகவல்களும் 'குறிப்புகள்' பகுதியை அடுத்த 'மேற்கோள் நூல்கள்' பகுதியில் தரப்பட்டுள்ளன. அடுத்து 'இணைப்புகள்' அமைந்துள்ளன. தமிழ் அகராதியியல் நூற்றொகையும் இந்நூலின் அடைவும் நூலின் இறுதியில் அமைந்துள்ளன. தமிழ் அகராதியியல் வளர்ச்சி வரலாற்றை அறிந்து கொள்ள இந்நூல் நன்கு உதவும் என நம்புகின்றேன்.

அகராதியியல் குறித்த அடிப்படைக் கல்வியை எனக்கு ஊட்டியவர் டாக்டர் சுகுஸ்தா (இல்லினாய்சு பல்கலைக்கழக மொழியியல் துறைப் பேராசிரியர்) அவர்கள் ஆவர். அகராதியியல் துறையில் நான் அனுபவ அறிவு பெறச் சென்னைப் பல்கலைக்கழகம் உதவியது. இந்த ஆய்வு தொடர்பாகப் பல்லாற்றானும் திருவாளர்கள் சுந்தர சண்முகனார், மு. சண்முகம் பிள்ளை, அ.அ. மணவாளன், இ.சுந்தரமூர்த்தி, கோ. கிருட்டிணமூர்த்தி முதலியோர் உதவினர். பின்வரும் நூலகங்கள் எனக்குப் பெரிதும் துணை நின்றன : 1. மறைமலையடிகள் நூலகம், சென்னை, 2. சென்னைப் பல்கலைக் கழக நூலகம், சென்னை, 3. கன்னிமரா நூலகம், சென்னை, 4. டாக்டர் உ. வே. சா. நூலகம், சென்னை, 5. உலகத் தமிழாராய்ச்சி நிறுவன நூலகம், சென்னை, 6. அமெரிக்கன் நூலகம், சென்னை, 7. பிரிட்டிசு கவுன்சில் நூலகம், சென்னை 8. மாவட்ட மைய நூலகம், சென்னை, 9. அரசினர் சுவடி

நூலகம், சென்னை, 10. பிரெஞ்சு இந்தியக் கலைக்கழகம், புதுவை, 11. அரசினர் நூலகம், புதுவை, 12. அண்ணாமலைப் பல்கலைக்கழக நூலகம், அண்ணாமலை நகர், 13 சரபோசி மன்னர் சரசுவதி மகால் நூலகம், தஞ்சை, 14. இந்திய நூலக நற்பணி மன்றம், கோட்டையூர், 15. தமிழ்ச் சங்க நூலகம், மதுரை, 16. தேசிய நூலகம், கல்கத்தா, 17. ஆங்கிலம் மற்றும் அன்னிய மொழிகளின் மைய நிறுவன நூலகம், ஐதரா பாத், 18. இந்திய மொழிகளின் மைய நிறுவன நூலகம், மைசூர், 19. கேரளப் பல்கலைக்கழக நூலகம், திருவனந்த புரம், 20. கேரளப் பல்கலைக்கழகத்தமிழ்த்துறை, மொழியியல் துறை நூலகங்கள், காரியவட்டம்.

இவ்வாய்வுக்கு அடிகோலியவர் டாக்டர் ந. சஞ்சீவி ஆவர். ஊக்கமும் ஆக்கமும் அளித்து இவ்வாய்வு நிறைவேறத் துணை புரிந்தவர் டாக்டர் சி. பாலசுப்பிரமணியன் ஆவர்.

இவ்வாய்வுக்குச் சென்னைப் பல்கலைக்கழகம் எனக்குப் பிஎச்.டி. பட்டம் வழங்கியது; இவ்வாய்வினை நூலாக வெளியிடவும் இசைவு அளித்தது .தமிழக அரசின் நிதியுதவியால் இவ்வாய்வு இப்போது நூல்வடிவம் பெற்றுள்ளது. இந் நூலுக்கு அடைவு தயாரித்தும் அச்சுப்படி திருத்தியும் என் அன்பு மாணவர்கள் திரு.சிவ. மாதவன், திரு.பா. கார்த்தி கேயன், திரு. அ. பாலு ஆகியோர் உதவினர்.

மேற்குறித்த அனைவருக்கும், நிறுவனங்களுக்கும் என் நெஞ்சார்ந்த நன்றி உரியது.

சென்னை-5<br>19-8-1985

**வ. ஜெயதேவன்**

# தமிழ் அகராதியியல் வரலாறு : அறிமுகம்

தமிழ் அகராதியியல் வரலாறு பரந்து விரிந்ததாக உள்ளது. இதனை அறிமுகம் செய்யும் நோக்கில், (1) நிகண்டுகளுக்கு முற்பட்ட காலம், (2) நிகண்டுக் காலம், (3) அகராதிக் காலம் எனப் பகுத்துக் கொண்டு இவ்வியலில் சுருக்கமாக விளக்கப்படுகிறது.

## நிகண்டுகளுக்கு முற்பட்ட காலம்

### தொல்காப்பியம்

தொல்காப்பியம் கிறித்து பிறப்புக்கு முற்பட்ட நூலாகக் கருதப்படுகிறது. இன்றுள்ள தமிழ் நூல்களுள் தொன்மையானதாகவும் கொள்ளப்படுகிறது[1]. இந்நூலில் உரியியல், இடையியல், மரபியல் முதலிய பகுதிகளில் அருஞ்சொற்களுக்குத் தொல்காப்பியர் பொருள் விளக்கியுள்ளார்[2]. இவருக்கு முற்பட்ட இலக்கியப் பரப்பில் கண்ட சொல்லாட்சிகளுக்கும் தம் காலத்துச் சொல்லாட்சிகளுக்கும் வேறுபாடு மிகுதியும் இருந்திருக்கக் கூடும். முந்திய இலக்கியத்தின் அருஞ் சொற்களைத் தம் காலத்தவருக்கு உணர்த்தக் கருதித் தம் நூலுள் தொல்காப்பியர் ஆங்காங்கே பொருள் விளக்கம் செய்திருக்கலாம்[3]. தொல்காப்பியத்தில் அகராதியியலுக்கு இன்றியமையாத் துணையாக விளங்கும் மொழிப் பொருளியல் (Semantics) கூறுகள் சில உள்ளன. அன்றியும், இதில் அகராதியியல் கூறுகள் சிலவும் இடம் பெற்றுள்ளன[4]. தொல்காப்பியத்தில் சொற்பொருள் கூறும் பகுதியை அடியொற்றிப் பிற்காலத்தில் சொற்பொருள் விளக்கும் தனி நூல்கள் தோன்றலாயின. இவை ‘ நிகண்டு ’ என்னும் பொதுப் பெயரால் வழங்கப்படுகின்றன.

### நிகண்டுக் குறிப்புகள்

இன்றுள்ள நிகண்டுகளைத் தவிர வேறு நிகண்டு(கள்) இருந்திருக்கலாம் எனக் கருதுவதற்கு அடிப்படையாகச் சில

குறிப்புகள் கிடைத்துள்ளன. இளம்பூரணர் உரை[5], யாப்பருங் கலவிருத்தி உரை[6] போன்றவற்றில் மேற்கோள் காட்டப்படும் சில பகுதிகள் நிகண்டுக்கு உரியனவாகத் தோன்றுகின்றன. எனி னும், இவற்றின் வரலாற்றை அறிய இயலவில்லை.

## நிகண்டுக் காலம்

தொலகாப்பியரது காலத்திற்குப் பின் தமிழ் இலக்கியப் பரப்பில் பல மாறுதல்கள் நிகழ்ந்தன. செய்யுள் நடையிலும் கவிதைப் பண்பிலும் சொற்களின் தன்மையிலும் வடிவங்களி லும் பொருளிலும் நேர்ந்த மாற்றங்கள் நிகண்டு போன்ற கருவி நூல்களின் தேவைக்கும், இவற்றின் தோற்றத்திற்கும் வழிவகுத்தன எனலாம்.

### திவாகரம்

நிலைத்த நிகண்டுகளுள் தொன்மையானது திவாகரம் ஆகும். இதன் ஆசிரியர் திவாகரர். இவரை ஆதரித்த வள்ளலின் பெயரையும் சேர்த்துச் சேந்தன் திவாகரம் என இந்நிகண்டு வழங்கப் பெறுகிறது. இதற்கும் முற்பட்டு ஆதி திவாகரம் என்று ஒரு நிகண்டு இருந்ததாகச் சிலர் கருதுவர். இக்கருத்து அடிப்படை அற்றது ஆகும்[7]. இதன் காலம் கி. பி. 8 ஆம் நூற் றாண்டுஎன்பர்[8]; 9ஆம் நூற்றாண்டுஎன்பாரும்உளர்[9]. திவா கர நிகண்டு தெய்வப் பெயர் முதலாகப் பன்னிரு தொகுதிகளை உடையது; ஒருபொருள் பல் பெயர்த் தொகுதி, ஒருசொல் பல் பொருள் பெயர்த் தொகுதி, பல்பொருள் கூட்டத்து ஒரு பெயர்த் தொகுதி ஆகிய முப்பெரும் பிரிவுகளையும் கொண்டு இது 'பூரண நிகண்ட'ாக விளங்குகிறது[10]. இது நூற்பா நடை யில் அமைந்த நிகண்டு ஆகும். இதனை முதன் முதலாக 1839 இல் தாண்டவராய முதலியார் என்பவர் பதிப்பித்தார். இப் பதிப்பில் இந்நிகண்டின் முதல் பத்துத் தொகுதிகள் மட்டுமே இடம் பெற்றுள்ளன. இப்பதிப்பாசிரியர் தாமே புதுவதாகப் புனைந்து சேர்த்த நூற்பாக்களை உடுக்குறியிட்டுக் காட்டியுள் ளார். முதற்பதிப்புக்கும் முன்னரே சுவடிகளில் இத்தகு இடைச் செருகல்கள் நிகழ்ந்திருக்க வேண்டும் எனத் தெரிகிறது[11]. எனவே, இந்நூலின் சொற்றொகையை அறுதியிடுவது அரிது. எனினும், தொல்காப்பியத்தினின்று விரிந்த சொற்பரப்பைக் கொண்டது திவாகரம் எனக் கருதலாம். இதில் பன்னிரு தொகுதிகளிலும் ஏறத்தாழ 9500 சொற்கள் இடம் பெற்றுள் ளன எனச் சுந்தர சண்முகனார் குறித்துள்ளார்[12].

**பிங்கலந்தை**

இது பிங்கல நிகண்டு எனவும் பிங்கலம் எனவும் வழங்கப் பெறுகிறது. இதன் ஆசிரியர் பிங்கல முனிவர். செய்தோ னாற் பெயர் பெற்றது இந்நிகண்டு. இதன் சிறப்புப் பாயிரத்தில்,

'செங்கதிர் வரத்தால் திவாகரன் பயந்த
பிங்கல முனிவன் எனத்தன் பெயர்நிறீஇ'

என்னும் அடிகள் உள்ளன. இதனால் பிங்கல முனிவர் திவாகரரின் மைந்தர் எனத் தெரிகிறது. சேந்தன் திவாகரம் படைத்த திவாகரரின் மைந்தரா அல்லது வேறு திவாகரரின் மைந்தரா எனத் துணிய இயலவில்லை. நன்னூல் (460) நூற்பாவில் பிங்கலம் பற்றிய குறிப்பு வருகிறது. எனவே, இது நன்னூலுக்கும் முற்பட்டது எனக் கொள்ளலாம். இதன் காலம் 8ஆம் நூற்றாண்டு எனச் சிலரும்[13], 10ஆம் நூற்றாண்டு எனச் சிலரும்[14] கருதுவர். திவாகரம் போல நூற்பா நடையினதாகிய இந்நிகண்டு 4121 நூற்பாக்களில் ஏறத்தாழ 15, 800 சொற்களுக்கு விளக்கம் தந்துள்ளது. இதனைச் சிவன் பிள்ளை என்பவர் முதன் முதலில் 1890 இல் பதிப்பித்தார். பிங்கலத்தில் பல்பொருள் கூட்டத்து ஒரு பெயர்த் தொகுதி இடம் பெறவில்லை. ஏனைய இரண்டும் 10 தொகுதிகளில் அமைந்துள்ளன. இத்தொகுதி ஒவ்வொன்றும் 'வகை' என வழங்கப்பட்டுள்ளது.

**சூடாமணி நிகண்டு**

இதனை இயற்றியவர் மண்டல புருடர். இது நிகண்டுகளுள் மிகுதியாகப் போற்றப் பெறும் சிறப்பினது. இதன் காலம் 16 ஆம் நூற்றாண்டு. இது திவாகரம் போலவே பன்னிரு தொகுதிகளைக் கொண்டுள்ளது. மேலும், இது தொகுதிகளின் பெயரிலும் திவாகரத்தை ஒத்துள்ளது. இது விருத்தப்பாவால் அமைந்த நூல். ஆறுமுக நாவலர் முதலியோர் பலரும் இந் நிகண்டினைப் பதிப்பித்து உள்ளனர். நிகண்டுகளுள் இதுவே மிகுதியான பதிப்புகளைக் கண்டுள்ளது. இதில் 1197 விருத்தப் பாக்களில் 11, 000 சொற்கள் விளக்கப்பட்டுள்ளன. இதன் பதினோராவது தொகுதியில் 'ககர எதுகை' முதலாக 'னகர எதுகை' ஈறாகப் பதினெட்டு எதுகைகளில் அமைத்து ஆசிரியர் பொருள் விளக்கியுள்ளார். மனப்பாடம் செய்வதற்குப் பெரிதும் உதவும் வகையில் இந்நிகண்டு அமைந்துள்ளது.

### அகராதி நிகண்டு

இதன் ஆசிரியர் புலியூர்ச் சிதம்பர ரேவண சித்தர் ஆவர். முதல் எழுத்தை அகராதி வரிசையில் அமைத்துப் பொருள் கூறும் நிகண்டு ஆதலால் இது அகராதி நிகண்டு என்னும் பெயர் பெற்றது. இது, சூத்திர (நூற்பா) நடையில் எழுதப் பட்டுள்ளது. இது 'இரேவண சூத்திரம்' எனவும் 'ரேவணாத் திரியார் சூத்திரம்' எனவும், 'சூத்திரவகராதி' எனவும் வழங்கப் பெறும். இந்நிகண்டின் காலம் கி. பி. 1594 ஆகும். தமிழ் அகராதியியலுக்கு முதன் முதலாக அகர நிரலை இந் நிகண்டே அறிமுகம் செய்தது. இது அகராதிப் பேர்த் தொகுதி முதலாக வகராதிப் பேர்த் தொகுதி ஈறாகப் பத்துத் தொகுதி களை உடையது. இதில் அ - ஔ, க - கௌ, ச - சௌ, ஞ - ஞௌ, த - தௌ, ந - நௌ, ப - பௌ, ம - மௌ, ய- யௌ, வ - வௌ எனப் பத்துத் தொகுதிகளிலும் முதல் எழுத் தளவில் அகர நிரலில் சொற்கள் அமைக்கப் பட்டுள்ளன. மேலை நாடுகளிலும் அகராதியியலில் அகர நிரல் முதன் முதலில் எழுத்தளவில் மட்டுமே நடைமுறைக்கு வந்தது ஒப்புநோக்கத் தகுவதாகும்[15].

அகராதி நிகண்டில் அகர நிரல் இடம் பெற்றதற்கான காரணங்களை அறுதியிடல் அரிது. என்னும், பின்வருவன கருதத்தக்கவை:

1. மனப்பாடத்திற்கு உரிய போக்கினின்றும் நிகண் டினைக் குறிப்பு நோக்கீட்டுக்குச் செலுத்தும் முயற்சி யின் விளைவு.
2. ஆத்தி சூடி, கொன்றை வேந்தன் முதலிய முதல் எழுத் தளவில் அகர நிரலைக் கொண்ட இலக்கியங்களின் தூண்டுகோல்.
3. நாவுக்கரசர் தேவாரத்தின் சித்தத் தொகைத் திருக் குறுந்தொகையின் தாக்கம்.
4. வருக்கக் கோவை முதலிய இலக்கியச் செய்யுள்களின் செல்வாக்கு.
5. பன்னிரண்டாம் நூற்றாண்டில் தோன்றிய 'நாநார்த் தார்ணவ சங்க்ஷேபம்', 'நாநார்த்த சங்கிரகம்' போன்ற அகர நிரல் வனப்புக் கொண்ட வடமொழி நிகண்டுகளின் வழிகாட்டல்.

அகராதி நிகண்டில் ஒரு பொருளுடைய சொல், இரு பொருளுடைய சொல் என 46 பொருளுடைய சொல் வரை

பொருள் தொகை அடிப்படையிலும் பகுத்து 3368 நூற்பாக்களில் ஆசிரியர் பொருள் விளக்கியுள்ளார். இந்நிகண்டில் ஒருசொல் பல்பொருள் பெயர்த் தொகுதிமட்டுமே இடம் பெற்றுள்ளது. மதுரைத் தமிழ்ச் சங்கம் இதனை 1921 இல் பதிப்பித்தது.

### உரிச்சொல் நிகண்டு

இதன் ஆசிரியர் காங்கேயர். வெண்பா யாப்பில் இயன்றுள்ள இந்நிகண்டின் காலம் 17 ஆம் நூற்றாண்டு ஆகும்[16]. 14 ஆம் நூற்றாண்டு[17] எனச் சிலரும் கருதுவர். 287 வெண்பாக்களால் ஆன இந்நிகண்டில் 3, 200 சொற்கள் பன்னிரு தொகுதிகளிலும் விளக்கம் பெற்றுள்ளன. 1840 இல் புதுவை அரசினர் அச்சுக் கூடத்தில் முதற்பதிப்பைக் கண்ட இந்நிகண்டு, பின்னர் 1858 இல் யாழ்ப்பாணம் ரா. ரா. அருணாசலம் சதாசிவம் பிள்ளை வழி இரண்டாம் பதிப்பையும், 1890 இல் சிவன் பிள்ளை வழியும், 1905 இல் சுன்னாகம் அ. குமாரசாமிப் புலவரின் வழியும் பதிப்புகள் பல கண்டுள்ளது.

### கயாதர நிகண்டு

கயாதரரால் இயற்றப்பெற்ற இந்நிகண்டின் காலம் 17 ஆம் நூற்றாண்டு[18] ஆகும். 15 ஆம் நூற்றாண்டு[19] எனச் சிலர் கருதுவர். பல் பொருள் கூட்டத்து ஒருபெயர்த் தொகுதி நீங்கலாக ஏனைய கயாதரத்தில் உள்ளன. 566 கட்டளைக் கலித்துறைப் பாடல்களை அந்தாதித்தொடையில் கொண்ட இந்நிகண்டில் 11, 350 சொற்கள் விளக்கப் பட்டுள்ளன. இதனை வையாபுரிப் பிள்ளை 1939 இல் பதிப்பித்துள்ளார்.

### பல்பொருள் சூடாமணி நிகண்டு

இதன் ஆசிரியர் வடமலை நிகண்டை இயற்றிய ஈசுர பாரதியார். இவர் திருநெல்வேலியில் உள்ள மடவை நகரில் வாழ்ந்த சிதம்பரபாரதியின் மைந்தர். ஒரு பொருட் பல்பெயர்த் தொகுதி தவிர ஏனைய இதில் இடம் பெற்றுள்ளன. இது விருத்தப்பாவால் இயன்றது. இது 1700 இல் இயற்றி முடிக்கப் பெற்றது. வடமொழி நிகண்டாகிய அமரகோசத்தைப் பின்பற்றி இந்நிகண்டு பின்வரும் மூன்று காண்டங்களாக வகுக்கப்பட்டுள்ளன. (1) ஒரு சொல் ஒரு பெயர்க் காண்டம், (2) ஒரு சொல் பல்பொருட் காண்டம், (3) பல்பெயர்க் கூட்டத்து ஒரு பெயர்க் காண்டம்.

இவற்றுள் முதல் காண்டத்தில் 2800 சொற்களும் இரண்டாவது காண்டத்தில் 1465 சொற்களும் இடம் பெற்றுள்ளன. இவ்விரு காண்டங்களும் சொற்களுக்குப் பொருள் கூறும் ஒரு சொல் பல்பொருட் பெயர்த் தொகுதியைச் சார்ந்தவை. மூன்றாம் காண்டம் 'பல்பொருள் கூட்டத்து ஒரு பெயர்த் தொகுதி என்னும் பிரிவைச் சார்ந்தது. இந்நிகண்டு வடமலை நிகண்டை ஒத்துள்ளது.

இந்நிகண்டு அகராதி நிகண்டைப் போலவே முதல் எழுத்தளவில் அகர நிரலைக் கொண்டுள்ளது. ஆனால், அகராதி நிகண்டைப் போலச் சொற்களைப் பொருள் தொகை அடிப்படையில் இந்நிகண்டு பகுக்கவில்லை. இதனால் அகராதி நிகண்டினும் சொல்லைக் காணல் இந் நிகண்டில் எளிது. இந்நிகண்டு இன்னும் அச்சேறவில்லை.

**வடமலை நிகண்டு**

திருவான்மியூர் டாக்டர் உ. வே. சா. நூலகச் சுவடிகளுள் 755 எண்ணிடப்பட்டுள்ள இச்சுவடியில் ஒருபொருள் பல் பெயரோதுங் காண்டம் ஆகிய இரண்டாவது காண்டத்தின் ஒரு பகுதி மட்டும் உள்ளது. இந்நூல் இக்காண்டம் தவிர ஒரு பெயர் ஒருபொருளுரைக்கும் காண்டம், பலபெயர்க் கூட்டத்து ஒரு பெயர்க் காண்டம் ஆகிய இரு காண்டங் களையும் உடையது என இச்சுவடியிற் கண்ட பாயிரத்தால் தெரிய வருகிறது. இதன் காலம் கி. பி. 1700 எனப் பாயி ரத்தால் புலனாகிறது. இந்நிகண்டில் எழுத்து வரிசையாகப் பத்துத் தொகுதிகள் உள்ளன. காட்டு:

வகர ஐகார வருக்கம்

**வைக லெனும்பெயர் தங்கலுந் தனமும்**
**புலரிக் காலமும் புகன்றனர் புலவர். 1**

**வையெனும் பெயரே நெல்லின் றாளுங்**
**கூர்மையும் புல்லுங் கூறப் பெறுமே. 2**

**வைய மெனும்பெய ருரோகணி நாளும்**
**ஆனேறுஞ் சகட வூர்தியுஞ் சிவிகையும்**
**பாருந் தேரும் பகரப் பெறுமே. 3**

இதன் ஆசிரியர் ஈசுர பாரதி. இவரே மேற்குறித்த பல் பொருள் சூடாமணியின் ஆசிரியரும் ஆவர். வடமலை நிகண்டும் பல்பொருள் சூடாமணி நிகண்டும் வெவ்வேறு

நூல்களாகத் தோன்றவில்லை. இரண்டும் ஒரு நூல் போலவே தெரிகிறது. ஒரு சில இடங்களில் மட்டும் பல் பொருள் சூடாமணியைக் காட்டிலும் வடமலை நிகண்டு சற்று விரிவாக உள்ளது.

ஆசிரியர் முதலில் பல்பொருள் சூடாமணியை இயற்றி யிருக்க வேண்டும். பின்னர் அதனை அவர் சற்று விரிவாக்கியும் திருத்தியும் வடமலை நிகண்டை இயற்றியிருக்க வேண்டும். இரையூர் வடமலைக் குடும்பத்தினரது ஆதரவால் திருத் தப்பணி நிகழ்ந்திருக்க வேண்டும். இதன் காரணமாக 'வடமலை நிகண்டு', 'இரையூர்வடமலை நிகண்டு' என்னும் பெயர்கள் இந்நூலுக்கு ஏற்பட்டிருக்க வேண்டும் எனக் கருதத் தோன்றுகிறது. இது 1983இல் பாலசாரநாதன் உரையுடன் நாகசாமியால் பதிப்பிக்கப்பட்டுள்ளது.

**கைலாச நிகண்டு சூடாமணி**

இதன் ஆசிரியர் கைலாசர். காலம் 17ஆம் நூற்றாண்டு. இது நூற்பா நடையில அமைந்தது. பல்பொருள் கூட்டத்து ஒருபெயர்த் தொகுதி இதில் இடம்பெறவில்லை. பிற தொகுதிகள் உள்ளன. பிங்கலத்தை ஓரளவு பின்பற்றி இது விண்ணவர் வகை, விண்ணின் வகை எனப் பாகுபாடு செய்துள்ளது. இதில் உள்ள 56 பிரிவுகளில் முதல் 49 பிரிவுகள் திவாகரத்தில உள்ள முதல் பத்துத் தொகுதிகளின் வகை களாகும். இவற்றில் மட்டும் 15,000 சொற்கள் விளக்கம் பெற்றுள்ளன. இறுதியில் உள்ள பின்வரும் 7 பிரிவுகள் பதினோராவது தொகுதியின் வகைப்பட்டது: (1) ஓரெழுத் தொரு மொழி, (2) ஓரெழுத்தொற்றொரு மொழி, (3) ஈரெழுத்தொரு மொழி, (4) ஈரெழுத்தொற்றொரு மொழி, (5) மூவெழுத்தொரு மொழி, (6) மூவெழுத் தொற்றொரு மொழி, (7) நாலெழுத்தொரு மொழி. இவ் ஏழு பிரிவுகளுள் முதல் பிரிவு மட்டும் அகர நிரலில் உள்ளது. இந்நிகண்டு இன்னும அச்சேறவில்லை.

**பாரதி தீபம்**

திருவேங்கட பாரதியால் இயற்றப்பட்டதால் இது பாரதி தீபம் என்னும் பெயர் பெற்றது. 17 ஆம் நூற்றாண்டைச் சார்ந்த இது கலித்துறையால் ஆனது. நிகண்டுகளுக்குரிய முப்பெரும் பிரிவுகளையும இது கொண்டு விளங்குகிறது. 737 பாடல்கள் இதில் உள்ளன. முதல் 10 தொகுதிகளில் மட்டும் 13,000 சொற்கள் இடம் பெற்றுள்ளன. இது

மு. சண்முகம் பிள்ளையால் பதிப்பிக்கப்பட்டுச் சென்னைப் பல்கலைக் கழகத்தால் 1980 இல் வெளியிடப்பட்டுள்ளது.

### ஆசிரிய நிகண்டு

ஆசிரிய விருத்தத்தால் செய்யப் பெற்றதால் இது ஆசிரிய நிகண்டு எனப் பெயர் பெற்றது. ஆண்டிப் புலவர் இதனை இயற்றினார். காலம் 17 ஆம் நூற்றாண்டு. பல்பொருள் கூட்டத்து ஒரு பெயர்த் தொகுதி இதில் இடம் பெறவில்லை. 263 பாடல்களைக் கொண்ட இந்நிகண்டில் முதல் 10 தொகுதிகளில் 12,000 சொற்கள் விளக்கப்பட்டுள்ளன. 1975இல் வீ. சொக்கலிங்கம் இதனைப் பதிப்பித்துள்ளார். சொற்பொருளையடுத்துப் பொருள் தொகையின் எண்ணிக் கையும் இந்நிகண்டில் குறிக்கப் பெறுகிறது.

### அரும்பொருள் விளக்க நிகண்டு

இது பதினெட்டாம் நூற்றாண்டைச் சார்ந்தது. இந்நிகண்டினை அருமருந்தைய தேசிகர் 'ககர எதுகை' முதலாக 'னகர எதுகை' ஈறாகத் தொகுதிகளைப் பதினெட்டாகப் பகுத்துக்கொண்டு 700 விருத்தங்களில் பாடியுள்ளார். இதில் 3,200 சொற்கள் விளக்கம் பெறு கின்றன. ஒருசொல் பல்பொருள் பெயர்த் தொகுதியை மட்டும் இந்நிகண்டு கொண்டுள்ளது. முன்வந்த சூடாமணி, அகராதி, உரிச்சொல், கயாதர நிகண்டுகளில் கூறியவற்றை எல்லாம் தொகுத்து இந்நூலை ஆசிரியர் ஆக்கியுள்ளதாகப் பாயிரத்தில் கூறியுள்ளார். இதனை வையாபுரிப் பிள்ளை 1931இல் பதிப்பித்துள்ளார்.

### தொகை நிகண்டு

> **'எந்தை பொதிகை நிகண் டென்றோர்சொற் பல்பெயரே**
> **தந்தனன்காண் பல்கூட்டஞ் சாரொடுபேர் — முந்தியான்**
> **பன்னுந் தொகைநிகண்டிற் பார்க்கவிரி வாமவைக**
> **ளின்னசுருக் கத்தடங்கா வே'** (7)

என்னும் நாமதீப நிகண்டின் பாயிரத்தில் தொகை நிகண்டு பற்றிய குறிப்பு உள்ளது. இது தவிர இந்நிகண்டு பற்றி அறிய வேறு குறிப்பு ஏதும் இல்லை. திவாகரத்தில் தொகைப் பெயர்களை விளக்கும் பன்னிரண்டாவது தொகுதியை மட்டும் கொண்டு தோன்றியதே தொகை நிகண்டாகும். இதன் ஆசிரியர் சுப்பிரமணியக் கவிராயர். காலம் 18ஆம் நூற்றாண்டாக இருக்கலாம்.

**பொருள் தொகை நிகண்டு**

இதன் காலம் 18 ஆம் நூற்றண்டு. ஆசிரியர் சுப்பிரமணிய பாரதி (இவர் மகாகவி பாரதியார் அல்லர்). நிகண்டுகளின் முப்பெரும் பிரிவுகளுள் இது மூன்றாவது பிரிவை மட்டும் கொண்டுள்ளது. தொகைப் பெயர்களை விளக்கும் இந் நிகண்டு 1000 நூற் பாக்களால் ஆனது. இதனை மதுரைத் தமிழ்ச்சங்கம் 1920 இல் பதிப்பித்தது.

**பொதிகை நிகண்டு**

இதன் ஆசிரியர் சாமிநாதக் கவிராயர். காலம் 18 ஆம் நூற்றாண்டு. இது, பல்பொருள் கூட்டத்து ஒரு பெயர்த் தொகுதி ஒழித்துப் பிறவற்றைக் கொண்டுள்ளது. இந்நிகண்டு இரண்டு பகுதிகளை உடையது. முதற் பகுதி விருத்தத்தா லான பத்துத் தொகுதிகளையும், இரண்டாம்பகுதி நூற்பாவா லும் இயன்றுள்ளது. மொத்தம் 500 பாடல்களையுடைய இந் நிகண்டில் முதற்பகுதியிலும் இரண்டாம் பகுதியிலும்முறையே 14, 500; 2,288 சொற்கள் விளக்கப்பட்டுள்ளன. இந்நிகண்டில் முதலிரு எழுத்துகள் வரை அகர நிரல் உள்ளது. இந்நிலை மேற்கத்திய அகராதியியலோடு ஒப்புநோக்கத்தக்கது[20]. இந் நிகண்டினை வையாபுரிப் பிள்ளை 1934இல் பதிப்பித்தார்.

**உசித சூடாமணி நிகண்டு**

இதன் ஆசிரியர் சிதம்பரக் கவிராயர். காலம் 18ஆம் நூற் றாண்டு. 197 விருத்தத்தால் செய்யப் பெற்று ஒரு பொருள் பல் பெயர்த் தொகுதியினதாய் உள்ள இந்நிகண்டின் முதற் பதிப்பு 1903 இல் கோயம்புத்தூரில் வெளிவந்தது. மலையக் கவுண்டர் முதலியோர் இதனைப் பதிப்பித்தனர். 'தேவ சரித் திரத் தொகுப்பு' முதலாக 'உதாரண வொழிபென்ற உசிதப் பொருள் அலங்காரத் தொகுப்பு' ஈறாக இந்நிகண்டு 18 தொகுப்புகளைக் கொண்டது ஆகும்.

**நாமதீப நிகண்டு**

இதன் ஆசிரியர் சிவ சுப்பிரமணியக் கவிராயர். காலம் 19 ஆம் நூற்றாண்டு. இதில் 800 வெண்பாக்களில் 12, 000 சொற் கள் விளக்கப்பட்டுள்ளன. இது, ஒருபொருள் பல் பெயர்த் தொகுதியை மட்டும் கொண்டு விளங்குகிறது. இந் நிகண்டு உயர்திணைப் படலம் முதலாகிய 4 படலங்களில் தெய்வ வர்க்கம் முதலான 16 வர்க்கங்களாகச் சொற்களைப்

பகுத்துக் கொண்டு பொருள் விளக்குகிறது. இந்நிகண்டினை வையாபுரிப் பிள்ளை 1930 இல் பதிப்பித்தார்.

### ஒருசொற் பல்பொருட்டொகுதி உரைபாடம்

அச்சான் இந்நிகண்டின் முகப்புப் பக்கத்தில் 'இஃது கையெழுத்துப் புத்தகங்களிலெழுத்துஞ் சொல்லு மாறுபடு கின்றவற்றை விலக்கிச் சுத்த பாடமாக வழங்குவிக்கும் பொருட்டுத் திவாகரம் - பிங்கலம் - உரிச் சொல் நிகண்டு- அரும்பொருள் விளக்கத் தீபிகை - ஆசிரிய நிகண்டு - கயாகரம் - பொதிய நிகண்டு - சூத்திரவகராதி - இவை முதலிய நூல் களானும -ஆரிய மொழியானும் சென்னைக் கல்விச் சங்கத்துத் தமிழ்ப் புலவராகிய புதுவை - நயநப்ப முதலியாராற் பரிசோ தித்து - அதற்குரை செய்து - அவ்வுரைக்கு மேற்கோளுடன் மேற்படிச் சங்கத்துத் தமிழ்ப் புலவர் - திரு. வேங்கடாசல முதலியாரது சரஸ்வதி அச்சுக் கூடத்தில் 1836 இல் பதிப்பிக் கப்பட்டதாகக் குறிப்பு உள்ளது.

### வேதகிரியார் சூடாமணி நிகண்டு.

வேதகிரி முதலியார், சூடாமணி நிகண்டின் பதினோராம் தொகுதியில் இல்லாத பல புதிய சொற்களைத் தொகுத்து எதுகை முறையில் புதிதாக 290 விருத்தங்களை இயற்றி முன் னமேயே இருந்த 310 விருத்தப் பாக்களின் இடையிடையே செருகி மொத்தம் 600 பாக்கள் உடைய தனி நூலாக்கினார். இதற்குத் தாமே உரையும் வகுத்தார். 1843 இல் இதனை யாழ்ப்பாணச் சங்கத்தார் பதிப்பித்தனர்.

### கந்த சுவாமியம்

சுப்பிரமணிய தேசிகர் பழைய நிகண்டுச் சொற்களைத் தொகுத்து நூற்பா நடையில் கந்த சுவாமியம் என்னும் நிகண்டை ஆக்கியுள்ளார். இதன்காலம் 19 ஆம் நூற்றாண்டு. இந்நிகண்டு, 1844 இல் அச்சாகியது. இதன் முதல் இருதொகுதி கள் மட்டுமே அச்சாயின. இவற்றுள் முதல் தொகுதியில் 1,318 சொற்களும், இரண்டாம் தொகுதியில் 1, 425 சொற்களுமாக மொத்தம் 2,743 சொற்கள் விளக்கம் பெற்றுள்ளன.

### தொகைப் பெயர் விளக்கம்

இதன் ஆசிரியர் வேதகிரி முதலியார். காலம் 19 ஆம் நூற் றாண்டு. பல்பொருள் கூட்டத்து ஒரு பெயர்த் தொகுதி மட் டும் உடையது. இது அகர வரிசையில் அமைந்துள்ளது. இது 1849 இல் அச்சாகியது.

### இலக்கத் தொகுதி முறையின் திறவுகோல்

இது, பல்பொருள்கூட்டத்து ஒருபெயர்த் தொகுதியின் பாற்பட்டது. இது தொகைப் பெயர்களை ஒன்று, இரண்டு முதலிய எண் அடிப்படையில் பாகுபடுத்தாது அகரவரிசையில் அமைத்துப் பொருள் விளக்கும் நூல்[21]. இந்நூல் குறித்து வேறு எதுவும் அறிய இயலவில்லை.

### நாநார்த்த தீபிகை

இதன் ஆசிரியர் முத்துசுவாமிப் பிள்ளை. காலம் 19 ஆம் நூற்றாண்டு. இந்நிகண்டு அரும்பொருள் விளக்க நிகண்டைப் பெரிதும் ஒத்துள்ளது. இதில் 1110 விருத்தப் பாக்களால் 5, 432 சொற்கள் பொருள் விளக்கப்பட்டுள்ளன. ஒருசொல் பல்பெயர்த் தொகுதியை மட்டுமே இந்நிகண்டு கொண்டுள்ளது. இத் தொகுதி 'ககர எதுகை' முதல் 'னகர எதுகை' ஈறாக எதுகை முறையில் பாகு பாடு செய்யப்பட்டுள்ளது. இதில் அடைமொழியின்றிப் பொருள் விளக்கப்பட்டுள்ளது. இதற்கு முன் தோன்றிய நிகண்டுகளில் உள்ள சொற்களோடு பல வட மொழித் திரிபுச் சொற்களும் இதில் மிகுதியாக இடம் பெற்றுள்ளன. இதனை அனவரத விநாயகம் பிள்ளை 1936 இல் சென்னைப் பல்கலைக் கழகம் வாயிலாகப் பதிப்பித்துள்ளார்.

### சிந்தாமணி நிகண்டு

இதன் ஆசிரியர் வைத்தியலிங்கம் பிள்ளை. காலம் 19 ஆம் நூற்றாண்டு. அரும் பொருள் விளக்கம், நாநார்த்த தீபிகை போன்று ஒருசொற் பல்பொருட் பெயர்த் தொகுதிக்கு மட்டுமே இந்நிகண்டும் பொருள் கூறுகிறது. அவை போலவே இதுவும் எதுகை முறையில் அமைந்துள்ளது. அவை பல பொருளுடைய சொற்களுக்கும் விளக்கம் தருகின்றன. ஆனால், இது ஒரு பொருளையுடைய சொற்களுக்கு மட்டுமே விளக்கம் கூறுகிறது. 400 விருத்தங்களில் 3,000 சொற்களுக்கு 3,000 பொருள்கள் இந்நிகண்டில் கூறப்பட்டுள்ளன. இந்நிகண்டிற்கு ஆசிரியரே உரையும் வகுத்து 1874 இல் அச்சிட்டார்.

### அபிதானத் தனிச் செய்யுள் நிகண்டு

இதன் ஆசிரியர் கோபாலசாமி நாயகர். காலம் 19 ஆம் நூற்றாண்டு. இவர் பல்வேறு பாவகையால் இந்நூலைப் பாடியுள்ளார். இவர் வாழ்ந்த போதே 1878 ஆம் ஆண்டில் முதல் தொகுதி - தெய்வப் பெயர்த் தொகுதி - நாகப்பட்டினம் 'ஸ்காட்டிஷ் பிராஞ்சு பிரஸ்' வாயிலாக அச்சிடப் பட்டு வெளி

யிடப்பட்டது. விரைவில் பிற தொகுதிகளும் வெளிவரும் என்னும் குறிப்பு இந்நூலின் முகப்பில் உள்ளது. பன்னிரு தொகுதிகளையும் பகர்வதாய்ப் பாயிரப் பகுதியில் ஆசிரியர் வாக்கினால் தெரிய வருகிறது. எனினும், வேறு தொகுதிகள் வெளிவந்ததாகத் தெரியவில்லை.

### விரிவு நிகண்டு

இதன் ஆசிரியர் அருணாசல நாவலர். காலம் 19ஆம் நூற்றாண்டு. ஒரு சொல் பல்பொருள் தொகுதியை மட்டும் கொண்டுள்ளது. இத்தொகுதியைக் கொண்டுள்ள நிகண்டுகளுள் இதுவே விரிவானது, சூடாமணி நிகண்டின் பதினோராம் தொகுதியை முதல் நூலாகக் கொண்டு சொற்பொருள் விளக்கிச் செல்வதால் இந்நூல் 'பதினோராவது விரிவு நிகண்டு' என்றும் வழங்கப்படுகிறது[22]. எதுகை முறையில் இயன்ற இந்நிகண்டில் நெல்லை மாவட்டத்து வழக்குச் சொற்கள் மிகுதியாகக் காணப்படுகின்றன.

### பிற நிகண்டுகள்

வேதகிரியார் எழுதிய இலக்கியக் களஞ்சியம் என்னும் நூலில் 'பொதிய நிகண்டு', 'ஔவை நிகண்டு' என்னும் நிகண்டுகள் குறிப்பிடப்பட்டுள்ளன. இவ் வொவ்வொரு நிகண்டுக்கும் உரியதாக ஒவ்வொரு பாடலும் கொடுக்கப்பட்டுள்ளது[23]. இவை குறித்து வேறு எதுவும் அறிய இயலவில்லை.

சோழவந்தான் சண்முகம் பிள்ளை என்பார் ஓர் அந்தாதித் தொடை நிகண்டு இயற்றியுள்ளதாகத் தெரிகிறது[24]. இது குறித்து வேறு எதுவும் தெரியவில்லை.

திருவான்மியூர் டாக்டர் உ. வே. சா. நூலக ஏட்டுச் சுவடிகளுள் 47 என எண்ணிடப்பட்ட நிகண்டு ஒன்று உள்ளது. இதன் பெயர் 'அபிதான மணிமாலை'யாகும். சுவடியின் மேற்குறிப்பாகக் காணப்படும் ஒரு குறிப்பால் இதன் ஆசிரியர் பெயர் திருச்சிற்றம்பலம் இன்னமுதம் பிள்ளை எனக் கருத வேண்டியுள்ளது. இது திவாகரத்தைப் போல நூற்பா யாப்பில் அமைந்துள்ளது. இது 9 தொகுதிகளாகப் பகுக்கப்பட்டுள்ளது. (1) தெய்வப்பெயர், (2) மக்கட் பெயர், (3) விலங்குப் பெயர். (4) மரப் பெயர், (5) இடப் பெயர், (6) பொருட் பெயர், (7) செயற்கை வடிவப் பெயர், (8) எட்டாம் தொகுதி காணப்படவில்லை, (9) செயற்

பற்றிய பெயர். மொத்தம் 531 பாக்களை இது கொண்டுள்ளது. இதன் காலம் தெரியவில்லை.

திருவான்மியூர் டாக்டர் உ. வே. சா. நூலகச் சுவடிகளுள் 191 என எண்ணிடப்பட்ட நிகண்டு 'கயிலாய உரிச்சொல்' ஆகும். அகவற்பாவில் அமைந்த இந்நிகண்டைப் பாடியவர் தேவூர்க் கஞ்சமாலைக் கவிராயர் ஆவர். கயிலாயம் என்ற பெயருடைய மறையவர் பெயரால் இவர் இந்நூலை இயற்றினார் எனச் சுவடி விளக்கக் குறிப்பு கூறுகிறது. ஒவ்வொரு தொகுதியும் பிங்கல நிகண்டைப் போல 'வகை' எனப் பெயர் பெற்றுள்ளது. இந்நிகண்டு பற்றி வேறு எதுவும் அறிய இயலவில்லை.

உ. வே. சா. நூலகச் சுவடிகளுள் 421 என எண்ணிடப்பட்டுள்ள நிகண்டு 'சொற்சேர்வை பொருட்சேர்வை' என்னும் பெயருடையது. ஒருசொல் பல்பொருள் பெயர்த் தொகுதியைக் கொண்டுள்ள இந்நிகண்டு கடவுள் முதல் பாலை ஈறாக 20 தலைப்புகளில் அகராதி வரிசையில் சொற்றொடர்களாகிய 3441 ஒற்றை வரிகளையும் சில பகுதிகளில் இறுதியில் சில விருத்தங்களையும் கொண்டுள்ளது. ஆசிரியர், பெயர், காலம் போன்றவற்றை அறிந்து கொள்ள இயலவில்லை.

புலோலி சதாசிவம் பிள்ளை என்பவரால் 'நேர்ச்சொல் நிகண்டு' என ஒன்று இயற்றப்பட்டு 1889 இல் யாழ்ப்பாணத்தில் வெளியிடப்பட்டதாகத் தெரிகிறது[25]. இந் நிகண்டு குறித்த பிற செய்திகளை அறிய இயலவில்லை.

ஆசிரிய நிகண்டைப் பதிப்பித்த வீ. சொக்கலிங்கம் என்பார் இந்நிகண்டுப் பதிப்பில் 'இதுவரை கிடைக்கப் பெற்ற நிகண்டு நூல்களில் அகர வரிசைப் பட்டியல்' (பக். 6-8) ஒன்றைத் தந்துள்ளார். இப்பட்டியலில் மேற் காட்டிய நிகண்டுகளைத் தவிர வேறு சிலவும் இடம் பெற்றுள்ளன. அவை: (1) தாயவலம் தீர்த்த கவிராயர் இயற்றிய 'அகராதி நிகண்டு' (2) சாமிக் கவிராயர் இயற்றிய 'தொகை நிகண்டு', (3) கிருட்டிணசாமி சேனைநாட்டார் இயற்றிய 'தொகைப்பொருள் நிகண்டு' (4) அரசஞ் சண்முகனார் படைத்த 'நவமணிக் காரிகை நிகண்டு', (5) ஆனைகட்டி முனிசாமி முதலியார் எழுதிய 'பொருள் விளக்க நிகண்டு'. இந்த ஐந்து நிகண்டுகளின் வரலாற்றையும் அமைப்பையும் அறிந்து கொள்ள இயலவில்லை.

## அகராதிக் காலம்

எதையுமே செய்யுள் வடிவத்தில் எழுதும் வழக்கம் இருந்த காலத்தில் அகராதிகளும் அவ்வடிவத்தில் தோன்றி வளர்ந்தன; நிகண்டுகள் எனப் பெயர் பெற்று நிலவின. அக்காலத்து அவை மனப்பாடம் செய்து நினைவில் வைத்துப் பயன் படுவதற்கு உரிய வகையில் அமைந்தன[26]. ஐரோப்பியர் வருகைக்குப் பின் மொழியிலும் கல்வி முறையிலும் அறிவியலிலும் ஏற்பட்ட மாற்றங்களின் விளைவாக மனப் பாடம் செய்யும் பழக்கம் நெகிழ்ச்சியுறலாயிற்று. வேண்டிய போது உடனடியாக நோக்கி உணரத்தக்க வகையில் கருவி நூல்கள் தேவைப்பட்டன. இத்தேவையினை நிறைவு செய்யும் நோக்கில் அகராதிகள் எழுந்தன.

## பதினேழாம் நூற்றாண்டு அகராதிகள்

### அகராதி மோனைக் ககராதி எதுகை

இதன் ஆசிரியர் காலம் குறித்து உறுதியாக ஒன்றும் தெரியவில்லை. இது 17 ஆம் நூற்றாண்டின் இறுதியில் தோன் றியிருக்கலாம் எனக் கருதப்படுகிறது[27]. முதல் இரு எழுத்துகள் வரை அகர நிரலைக்கொண்டுள்ள இவ்வகராதியில் சொற்பொருள் விளக்கம் செய்யுளாயில்லாவிடினும் ஏறத்தாழ நிகண்டு நடையில் உள்ளது[28]. இவ்வகராதியில் 7,500 சொற்கள் பொருள் விளக்கம் பெற்று உள்ளன. அருஞ் சொற்களே மிகுதியாக இதில் இடம் பெற்றுள்ளன. 'அகல் வுற்று' போன்ற எச்சங்களும், 'செய்பொழில்' போன்ற தொடர்களும் 'காண்போதல் உற்றார்' போன்ற சொற்றொடர்களும், 'அஃதை' போன்ற சிறப்புப் பெயர்களும் இவ்வகராதியில் உள்ளன என்பது குறிப்பிடத் தக்கது. ஆனால், தெரு, கழுத்து போன்ற எளிய சொற்கள் இதில் இடம் பெறவில்லை. இவ்வகராதி இன்னும் அச்சேறவில்லை[29].

### பத்துச் சொல் அகராதி

சொற்களின் எழுத்து எண்ணிக்கை அடிப்படையில் பத்துத் தொகுதிகளாகப் பாகுபாடு செய்யப்பட்டுள்ள இவ்வகராதியில் திவாகரம், உரிச்சொல் நிகண்டு, சூடாமணி நிகண்டு, நாமதீப நிகண்டு முதலிய நிகண்டுகளில் உள்ள சொற்கள் அகரவரிசையில் நிறுத்தப்பட்டு விளக்கப்

பட்டுள்ளன. இவ்வகராதியின் முதல் தொகுதியில் ஓரெழுத்துச் சொற்களும் இரண்டாம தொகுதியில் ஈரெழுத்துச் சொற்களும் என இம்முறையில் பத்தெழுத்துச் சொற்கள் வரை தொகுக்கப்பட்டுள்ளன. இவ்வகராதி இன்னும் அச்சேறவில்லை[30].

## வைணவ விளக்கவுரை அருஞ்சொல் அகராதி

மணிப்பிரவாள நடையில் அமைந்த வைணவ உரைகளில் கண்ட அருஞ்சொற்களை அகர வரிசையில் அமைத்துப் பொருள் கூறும் இந்த அகராதியின் சுவடி சென்னை அரசினர் சுவடி நூலகத்தில் உள்ளது. 13, 14ஆம் நூற்றாண்டுகளில் வழங்கிய பேச்சு வழக்குச் சொற்களை அறிந்து கொள்ள இது பெரிதும் உதவும். பேச்சு வழக்குச் சொற்களைப் பெரும்பான்மையாகக் கொண்டுள்ள இவ்வகராதியில் பொருள் கூறுமிடத்து மிகுதியாக வடமொழி இடம் பெற்றுள்ளது. காட்டாக, 'அட' என்னும் சொல்லுக்கு 'ஸ்வச்சல ப்ரகாஷோக்தி' எனப் பொருள் கூறப்பட்டுள்ளது. இப்படிப் பொருள் கூறும் முறை மேற்கத்திய அகராதியிலி லும் இருந்து வந்தது[31].

அருஞ் சொற்களுக்கு மட்டும் பொருள் விளக்கம் செய்யும் மரபிலிருந்து படிப்படியாகத் தமிழ் அகராதியியல் விலகலாயிற்று. 'மனனம்' இருந்த இடத்தைக் 'குறிப்பு நோக்கீடு' பெற முனைந்தது. அகர நிரல் முறை மெதுவாக வளர்ச்சிபெறத் தொடங்கி இரண்டாவது எழுத்துவரை விரிந்தது. இந்தச் சூழலில் அயல் நாட்டினரின் செல்வாக்கு தமிழ் அகராதியியலில் படியத் தொடங்கியது. ஐரோப்பியர்கள் தமிழ் மக்களின் பண்பாடு, பழக்க வழக்கங்கள் முதலியவற்றை நன்கு அறிந்து கொண்டார்கள்; தமிழ் மொழியையும் இலக்கியத்தையும் கற்றார்கள். இவை இவர்களது சமயப் பணிகளுக்குப் பெரிதும் துணை நின்றன. அன்றியும், அச்சுக்கலையை அவர்கள் அறிமுகம் செய்தனர்; இது அவர்களது சமயப் பணிகளுக்கு மிகுதியாக உதவியது.

## தமிழ் - போர்ச்சுகீசிய அகராதி

புரோயன்சா தொகுத்த இவ்வகராதி 1679 இல் மலைநாட்டில் உள்ள அம்பலக்காடு என்னும் இடத்தில் அச்சாகியது. தமிழ்ப் புலத்தில் அச்சேறிய முதல் அகராதி இதுவேயாகும். 16, 546 தமிழ்ச் சொற்களுக்குப் போர்ச்சுகீசியம் அல்லது இலத்தீன் மொழியில் இவ்வகராதி பொருள் விளக்கி உள்ளது.

## பதினெட்டாம் நூற்றாண்டு அகராதிகள்

### சியகன் பால்க்கின் அகராதிகள்

தரங்கம்பாடியில் சமயப்பணிபுரிந்து வந்த சியகன் பால்க்கு பல அகராதிகளைத் தொகுத்துள்ளார். அவற்றைக் காணலாம்:

#### டிக்ஷனேரியம் தமுலிகம்

சியகன் பால்க்கு இத்தமிழகராதியை கி. பி. 1712 இல் தொகுத்தார். இதனை 18 ஆம் நூற்றாண்டில் தோன்றிய முதல் அகராதியாகக் கொள்ளலாம். இது இன்னும் அச்சேற வில்லை.

#### தமிழ்-இலத்தீன் அகராதி

சியகன் பால்க்கு தமிழ் - இலத்தீன் அகராதி ஒன்றையும் 1715-16 ஆண்டளவில் வெளியிட்டதாகத் தெரிகிறது [32].

#### தமிழ் உரைநடை அகராதி

சியகன் பால்க்கு தமிழ் உரைநடை அகராதி ஒன்றை 1726 இல் தொகுத்து இதற்குச் செருமானிய மொழியில் அடைவும் செய்துள்ளார். இவ்வகராதியின் பெயர் 'Prosaisch-Tamulisches Lexicon' என்பதாகும். இது இன்னும் அச்சில் ஏற வில்லை[33].

#### அகராதி பேர்சுவடி

சியகன் பால்க்கு 1732 இல் 'அகராதிபேர் சுவடி முதலாம் வகுப்பு, ரெண்டாம் வகுப்பு' என்னும் பெயரில் இரு பகுதி களைக் கொண்ட தமிழ் அகராதி ஒன்றைத் தொகுத்தார். இது இன்னும் அச்சேறவில்லை[34].

### பெஸ்கியின் அகராதிகள்

#### சதுர் அகராதி

இத்தாலி நாட்டிலிருந்து தமிழ்நாடு வந்து கி. பி. 1710 முதல் 1747 வரை சமயப் பணிகளில் ஈடுபட்டிருந்த பெஸ்கி அடிகள் (வீரமா முனிவர்) சதுர் அகராதியைத் தொகுத்தார். இது எழுதப்பட்ட காலம் கி. பி. 1732 ஆகும். இவ்வகராதி யினை முதன் முதல் ஜே. வின்சன் என்பவர் பதிப்பித்தார். இப்பதிப்பில் கண்ட இவ்வகராதியின் தலைப்பு புதுமையாக உள்ளது. இத்தலைப்பு வருமாறு:

Thesaurum linguae Tamulicae ad pleniorem planioremque scriptorum Tamulensium intelligentiam collegit ac quatuor in partes digessit Constantius Josephus Beschiuse Societate Jesu, in regno Madurensi Missionarius ad usum ejusdem Societatis Missionariorum A. D. MDCC XXXII.

தமிழ் நிகண்டுகளில் உள்ள சொற்களைப் பின்வரும் நான்கு பிரிவுகளுக்குள் இவ்வகராதி அடக்கிப் பொருள் கூறியுள்ளது: (1) பெயரகராதி, (2) பொருள் அகராதி, (3) தொகையகராதி, (4) தொடையகராதி. இந்நான்கு வகை அகராதிகளை உடைய தாக இருப்பதால் இது சதுர் அகராதி எனப்பட்டது. பெயரக ராதியினை ஒருசொல் பல்பொருள் பெயர்த் தொகுதி எனவும், பொருளகராதியினை ஒருபொருள் பல்பெயர்த் தொகுதி என வும், தொகையகராதியினைப் பல்பொருள் கூட்டத்து ஒரு பெயர்த் தொகுதி எனவும், தொடையகராதியினைச் செய்யு ளுக்கு உதவும் எதுகைத் தொடைச் சொற்களின் (Rhyming words) தொகுதி எனவும் கொள்ளலாம். இந்நான்கனுள் பொருளகராதியானது திருச்சிற்றம்பல ஐயரின் உதவியோடு 1819 இல் எல்லிஸ் என்பவரால் முதன் முதலாகப் பதிப்பிக்கப் பட்டது. சென்னைக் கல்லூரி இயக்குநராகிய ரிச்சர்டு கிளார்க் என்பவரின் ஆணைவழி, தாண்டவராய முதலியார், இராமச் சந்திரக் கவிராயர் ஆகியோரின் மேற்பார்வையில் 1824 இல் நான்கு பகுதிகளையும் கொண்ட முழுமையான சதுர் அகராதி முதன் முதலில் வெளியிடப்பட்டது. 1835 இல் ஸ்மித் என்ப வர் இதன் இரண்டாவது பதிப்பை வெளியிட்டார். விசாகப் பெருமாள் ஐயர், பொன்னம்பல முதலியார் ஆகியோரது உதவியோடும் பெர்சிவலின் மேற்பார்வையோடும் 1860 இல் இதன் மூன்றாவது பதிப்பு வெளி வந்தது. நான்காம் பதிப்பு 1928 இல் வெளிவந்தது [35]. இதனையடுத்துப் பல பதிப்புகள் வந்துள்ளன. இதுவரை இவ்வகராதிக்குப் பத்துப் பதிப்புகள் எழுந்துள்ளன[36]. இவ்வகராதியே இவரைத் ‘தமிழ் அகராதியின் தந்தை’ எனக் கொண்டாடச் செய்தது [37]. தமிழ் அகராதியி யல் வரலாற்றில் இவ்வகராதிக்குத் தனிச் சிறப்பு உண்டு. தமிழ் அகராதிகளுக்கு வழிகாட்டியாக இவ்வகராதி விளங்கி யது[38]. இது முழுமையான அகர நிரலை - இறுதி எழுத்து வரை அகர நிரலைக் கொண்டுள்ளது. அருஞ் சொற்களுக்குப் பொருள் கூறும் மரபையும், செயயுளில் பொருள் கூறும் மரபை யும் நீக்கி எளிய சொற்களுக்கும் இடந்தந்து உரைநடையில்

பொருள் விளக்கும் இவ்வகராதியே முறையான முதல் தமிழ் அகராதி எனப்போற்றப்படுகிறது. சொற்பொருள் கூறும் நூல்களுக்கு இன்று நாம் வழங்கும் 'அகராதி' என்னும் சொல் இப்பொருளில் முதன் முதலில் இவ்வகராதியில்தான் இடம் பெற்றுள்ளது.

### தமிழ்-இலத்தீன் அகராதி

1742 இல் 9000 சொற்கள் கொண்ட தமிழ்-இலத்தீன் அகராதி ஒன்று பெஸ்கியால் உருவானது எனத் தெரிகிறது [39]. இது இன்னும் அச்சுருப் பெறவில்லை.

வட்டார வழக்குத் தமிழ்ச் சொற்களுக்கு இலத்தீனில் பொருள் கூறும் தமிழ்-இலத்தீன் அகராதி ஒன்றையும் பெஸ்கி தொகுத்துள்ளார். இது 1882 இல் திருச்சியில் பதிப்பிக்கப் பட்டது.

### இலத்தின்-தமிழ் அகராதி

இவ்வகராதியையும் பெஸ்கி தொகுத்ததாகத் தெரிகிறது[40]. இந்நூல பற்றி எதுவும் அறிந்து கொள்ள இயலவில்லை.

### தமிழ்-பிரெஞ்சு அகராதி

இவ்வகராதி பெஸ்கியால் 1744 இல் தொகுக்கப் பெற்றது. கையால் எழுதப்பட்ட இவ்வகராதி 1806இல் மையொற்றுப் படி (Cyclostyle) எடுக்கப்பட்டுப் பதிப்பிக்கப்பட்டுள்ளது.

### தமிழ்-ஆங்கில அகராதி

இவ்வகராதியையும் பெஸ்கி தொகுத்ததாகத் தெரிகிறது[41]. இது குறித்து எதுவும் அறிந்து கொள்ள இயலவில்லை.

### போர்ச்சுகீசியம் - இலத்தீன் - தமிழ் அகராதி

'Lexicon lusitano - latino - tamulicum' என்னும் பெயருடைய இவ்வகராதியின் காலம் 1742. இதன் ஆசிரியர் பெஸ்கி. இது இன்னும் அச்சேறவில்லை[42].

### வட்டார வழக்குத் தமிழ் அகராதி

இதனையும் பெஸ்கி தொகுத்ததாகத் தெரிகிறது. இது குறித்து ஏதும் அறிய இயலவில்லை[43].

### பெப்ரீஷியஸ் தமிழ்-ஆங்கில அகராதி

இவ் இருமொழி அகராதி, செருமானியக் கிறித்தவச் சங்கத்தினரான பெப்ரீஷியஸ், பிரெய்தாப்ட் ஆகிய இருவரால் உருவாக்கப்பட்டது. இருவருள் முதல்வர் பெயரால் இது வழங்கப்படுகிறது. 1778 இல் இது சென்னையில் அச்சானது. இதுவே அச்சான முதல் தமிழ்-ஆங்கில அகராதியாகும். இது 9000 பதிவுகளைக் (entries) கொண்டுள்ளது. இவ்வகராதியின் இரண்டாம் பதிப்பு பொயசால்டு, சிம்சன் ஆகியோரால் ஒழுங்கு செய்யப்பட்டு 1809 இல் சென்னையில் பதிப்பிக்கப்பட்டது.

### ஆங்கிலம்-தமிழ் அகராதி

சென்னை வேப்பேரியில் 1786 ஆம் ஆண்டு ஆங்கிலம்-தமிழ் அகராதி ஒன்று வெளியிடப்பட்டது. 'A Dictionary of the English and Malabar' என்பது இவ்வகராதியின் பெயர். மலபார் என்பது தமிழைக் குறிக்க வழங்கிய சொல் ஆகும். இவ்வகராதியின் ஆசிரியர் பெயர் தெரியவில்லை.

## பத்தொன்பதாம் நூற்றாண்டு அகராதிகள்

### ஆங்கிலம் - தமிழ்ச் சொற்றொகை

'A Vocabulary - English & Tamil' என்னும் பெயரைக் கொண்டுள்ள இவ்வகராதியின் முதல் பதிப்பு 1807 இல் வந்தது. இதன் 6 ஆம் பதிப்பு 1845 இல் வெளியாயிற்று. இதன் ஆசிரியர் பெயர், வெளியான இடம் முதலியன தெரியவில்லை[44].

### அகராதித் தமிழ்

இவ்வகராதி, பின்வருமாறு பெயர் கொண்டுள்ளது:

அகராதித் தமிழ்

Dictionnaire

Francais - Tamoul

Tamoul - Francais

282 பக்கங்களைக் கொண்ட இவ்வகராதி இரு பகுதிகளை உடையது. முதற்பகுதி பிரெஞ்சு - தமிழ் அகராதியாகவும், இரண்டாம் பகுதி தமிழ் - பிரெஞ்சு அகராதியாகவும் விளங்குகின்றன. இவ்வகராதியின் ஆசிரியர் பிளின் ஆவர். இந்நூல் தோன்றிய காலம் கி. பி. 1831 ஆகும்.

### கிறித்தவச் சங்கத்தின் முயற்சிகள்

யாழ்ப்பாணத்தில் உள்ள அமெரிக்கக் கிறித்தவச் சங்கம் 1833 இல் பின்வரும் மூன்று அகராதிகளை ஆக்கத் திட்டம் வகுத்திருந்தது:

1. தமிழ்-ஆங்கிலம் அகராதி
2 ஆங்கிலம் - தமிழ் அகராதி
3. தமிழ்-தமிழ் அகராதி.

மேற்குறித்த கிறித்தவச் சங்கத்தைச் சார்ந்த நைட் என்பார் திசரா, பெர்சிவல் ஆகிய இருவரின் உதவியுடன் இவ்வகராதி களை வெளிக்கொணர உரியன செய்து கொண்டிருந்தார். ஆனால், இடையே அவர் காலமானதால் இவ்வகராதிகள் வெளிவாராமல் போயின.

### ராட்லர் அகராதி

இது 1830 ஆம் ஆண்டளவில் ராட்லரால் உருவாக்கப் பட்ட தமிழ் - ஆங்கில அகராதியாகும். இதில் தமிழ்ச் சொல்லாலும் பொருள் கூறப்பட்டுள்ளது. இதன் முதல் தொகுதி 1834 இல் வெளிவந்தது. இரண்டாம் தொகுதி அச்சா கிக் கொண்டிருந்தபோது ராட்லர் காலமானார். இத்தொகுதி 1836-37 இல் வெளியிடப்பட்டது. மூன்றாவது, நான்காவது தொகுதிகள் வேங்கடாசல முதலியார், டெய்லர் ஆகியோரால் திருத்தப் பெற்று இவை முறையே 1639, 1841 ஆம் ஆண்டு களில் வெளிவந்தன. நான்கு தொகுதிகளிலும் மொத்தம் 1425 பக்கங்கள் உள்ளன. இவ்வகராதித் தொகுப்பிற்கு அடிப் படையாக பெஸ்கியின் சதுர் அகராதியும் பிறவும் பயன் பட்டன[45].

### வின்சுலோ ஆங்கிலம்-தமிழ் அகராதி

வின்சுலோ தொகுத்த இவ்வகராதியின் காலம் 1842 ஆகும்[46]. இது குறித்து வேறு எதுவும் அறிய இயலவில்லை.

### பழமொழி அகராதி

பெர்சிவல் தமிழ்ப் பழமொழிகளை ஆங்கில மொழி பெயர்ப்புடன் அகராதியாக்கி 1842 இல் வெளியிட்டுள்ளார். இதில் 1900 பழமொழிகள் உள்ளன. 1847 இல் இதன் இரண்டாம் பதிப்பில் ஆசிரியர் மேலும் பல பழமொழிகளைச் சேர்த்துள்ளார்.

**மானிப்பாய் அகராதி**

திசரா, பெர்சிவல் ஆகியோர் உதவியுடன் நைட் (Knight) தயாரித்து வந்த மூன்று அகராதிகள் வெளியிடப்படாமல் போயின என்று முன்னரே குறிக்கப்பட்டது இவ்வகராதிகளுக்குச் செய்யப்பட்ட தொகுப்புகளை அடிப்படையாகக் கொண்டு யாழ்ப்பாணத்தைச் சார்ந்த சந்திரசேசர பண்டிதர் ஒரு தமிழ் அகராதியை உருவாக்கினார். இதற்கு வேதகிரி முதலியார் ஓர் இணைப்பையும் சேர்த்துதவினார். இவ்வகராதி ஸ்பால்டிங் என்பவரால் 1842 இல் வெளியிடப்பட்டது. இவ்வகராதி யாழ்ப்பாண அகராதி, மானிப்பாய் அகராதி, மானுவல் தமிழ் அகராதி (The Manual Dictionary of the Tamil Language) எனப பலவாறாக வழங்கப்படுகிறது[47]. 58,500 பதிவுகளை இவ்வகராதி கொண்டுள்ளது. சதுர் அகராதியினும் இது நான்குமடங்கு பெரிது. வட மொழி அகராதிகளிலிருந்து சொற்களை நேரடியாகப் பெற்று இவ்வகராதியில் சேர்த்துள்ளமை தெரியவருகிறது[48]. தமிழ் அகராதிகளுள் இதுவே முதல் பெரிய அகராதியாகும்.

**திருட்டாந்த சங்கிரகம்**

1873 தமிழ்ப் பழமொழிகளை ஆங்கில மொழிபெயர்ப்புடன் கொண்டுள்ள இவ்வகராதி பெர்சிவல் என்பவரால் தொகுக்கப்பட்டது. இது 1843 இல் யாழ்ப்பாணத்தில் பதிப்பிக்கப்பட்டது.

**தாது மாலை**

நீர்வேலிச் சங்கர பண்டிதரால் யாழ்ப்பாணத்தில் வெளியிடப்பட்ட இவ்வகராதியில் வடமொழிச் சொற்கள் கிரந்த எழுத்தில் அகர நிரலில் அமைக்கப்பட்டு இவற்றின் தாதுக்களின் பொருள் வேறுபாடுகள் தமிழில் விளக்கப்பட்டுள்ளன.

**நைட், ஸ்பால்டிங் ஆங்கிலம்-தமிழ் அகராதி**

இவ்வகராதி நைட், ஸ்பால்டிங் ஆகியோரால் ஆக்கப்பட்டது. இதன் காலம 1842 ஆகும். இது ஹட்சிங்சு என்பவரால் திருத்தப் பெற்று 1844 இல் இரண்டாம் பதிப்பினைக் கண்டது. இப்பதிப்பு மேலும் அப்பாசாமிப்பிள்ளையால் விரிவு செய்யப்பட்டு 1888இல் வெளியிடப்பட்டது. பல பதிப்புகளை இவ் அகராதி கண்டுள்ளது.

**பெர்சிவல் ஆங்கிலம் -தமிழ் அகராதி**

சென்னை அரசாங்க ஆட்சித்துறையில் பணி புரிந்து வந்த ஐரோப்பிய அலுவலர்கள், இராணுவத்தினர் முதலானோ

ருக்கு உதவும் பொருட்டுப் பெர்சிவல் என்பவரால் உருவாக்கப் பட்ட இவ்வகராதி 1861 இல் வெளியிடப்பட்டது. இது பல பதிப்புகளைக் கண்டுள்ளது.

### இலத்தீன்-பிரெஞ்சு-தமிழ் அகராதி

இது புதுவையில் 1846 இல் பதிப்பிக்கப்பட்டது. இதனை முசே, துய்புய் ஆகிய இருவர் தொகுத்தனர். இது 1430 பக்கங் களைக் கொண்டுள்ளது.

### ஒருசொல் பலபொருள் விளக்கம்

இது விசாகப் பெருமாள் ஐயரின் வழிகாட்டுதலின்படி அண்ணாசாமி பிள்ளையால் தொகுக்கப்பட்டு 1850 இல் வெளியிடப்பட்டது. இது 186 பக்கங்களைக் கொண்டது. சூடாமணி நிகண்டின் பதினோராம் தொகுதியினை மட்டும் அடிப்படையாகக் கொண்டு இவ்வகராதி ஆக்கப் பெற்றது.

### தமிழ்-இலத்தீன் அகராதி

இதன் ஆசிரியர் பெயர் தெரியவில்லை. இது 1850க்குப் பிற்பட்ட நூலாகத் தெரிகிறது[49].

### ஆங்கிலம்-தெலுங்கு - தமிழ் அகராதி

இது 1851 இல் வெளிவந்தது. இதன் ஆசிரியர் டி. எம். கிருஷ்ணசாமிப பிள்ளை.

### ஆங்கிலம் - தமிழ் : பையகராதி

ஜான் டர்லனி என்பவரால் ஆக்கப்பட்ட இவ்வகராதி 1851 இல் வேப்பேரியில் வெளியிடப்பட்டது.

### ஆங்கிலம் - தமிழ் அகராதி

இதன் இரண்டாம் பதிப்பு 1852 இல் வெளிவந்தது. முதற் பதிப்பின் காலம் தெரியவில்லை. இவ்வகராதியின் முன்னுரை யில் "L.S." என்னும் ஆசிரியரது பெயரின் முதல் எழுத்துகள் உள்ளன. இவரது முழுப்பெயரையும் அறிய இயலவில்லை.

### ஆங்கிலம் - தமிழ் அகராதி

சென்னை வேப்பேரியில் 1852இல் பதிப்பிக்கப்பட்ட இவ்வகராதி இரு பகுதிகளைக் கொண்டுள்ளது. முதற் பகுதி யில் A-H, இரண்டாம் பகுதியில் I-Z சொற்கள் உள்ளன. 520

பக்க அளவில் இவ்வகராதி அமைந்துள்ளது. ஹோப்ரோ, ஸ்பெர்ஸ் நெய்டர், பிரதர்டன் முதலியோரால் இவ்வகராதி உருவாகியது.

### தமிழ் - பிரெஞ்சு அகராதி, பிரெஞ்சு - தமிழ் அகராதி

புதுவையில் 1855ஆம் ஆண்டு இவ்வகராதி பதிப்பிக்கப் பட்டது. முசே, துய்புய் இருவரும் இவ்வகராதியை உருவாக்கினர். இதன் சுருக்கம் ஒன்று புதுவையில் பதிப்பிக்கப் பட்டுள்ளது. மேற்குறித்த இருவரும் பிரெஞ்சு - தமிழ் அகராதி ஒன்றையும் தொகுத்து வெளியிட்டுள்ளனர்.

### ஆங்கிலம் - தமிழ் அகராதி

வில்லியம் நெவின்சு என்னும் சிதம்பரம் பிள்ளை தொகுத்த இவ்வகராதி 1858 இல் வெளியிடப்பட்டுள்ளது.

### போப் தமிழ் - ஆங்கில அகராதி

ஜி. யு. போப் தமிழ் - ஆங்கில அகராதி ஒன்றைத் தொகுத்துள்ளார். இதன் காலம் கி. பி. 1859 ஆகும்.

### வின்சுலோ தமிழ் - ஆங்கில அகராதி

தமிழ் - ஆங்கில அகராதி என இது பெயர் பெற்றிருப் பினும் தமிழ் - ஆங்கிலம் - தமிழ் அகராதியாக இது விளங்கு கிறது. 1862 இல் வெளிவந்த இது 67,452 சொற்களைக் கொண்டதாகும். நைட், திசரர், பெர்சிவல், ஸ்பால்டிங், ஹட்சிங்சு ஆகியவர்கள் தொகுத்த அகராதிகளின் அடிப்படை யில் இராமாநுசக் கவிராயர், விசாகப் பெருமாள் ஐயர், வீராசாமி செட்டியார், ஆதிமூல முதலியார், அப்ரகாம் அல்லி யன் முதலிய தமிழறிஞர்களின் துணையோடு இவ்வகராதி உருவாக்கப்பட்டுள்ளது.

### குரி தமிழ் - இலத்தீன் அகராதி

இதன் காலம் 1867 ஆகும். இதனைத் தொகுத்தவர் குரி பாதிரியார் ஆவர்.

### பதார்த்த பாஸ்கரம்

கிரந்தம் - தமிழ் அகராதியாகிய இது தி. க. நாராயண அய்யங்காரால் ஆக்கப்பட்டது. 1877 இல் இது வெளிவந்தது.

### சொற்றொகைகள்

பத்தொன்பதாம் நூற்றாண்டில் பல சொற்றொகை நூல்கள் வெளிவந்தன. வீராசாமி முதலியார் 1880இல் ஆக்கிய பில்டர் ஆங்கிலம்-தமிழ்ச் சொற்றொகை, முகமது கௌது இரங்கூனில 1882 இல் வெளியிட்ட (அ) இந்துஸ்தானி -தமிழ்ச் சொற்றொகை, (ஆ) பர்மா-தமிழ்ச் சொற்றொகை மற்றும் சவரிநாத நாயகரது ஆங்கிலம்-தமிழ்ச் சொற்றொகை (இரங்கன், 1882) ஆகியவை குறிப்பிடத்தக்கவை.

### அகராதிச் சுருக்கம்

மாணவர்களுக்குப் பயன்படும் நோக்கில் 3000 சொற்களை உடையதாக இவ்வகராதியை விசயரங்கமுதலியார் ஆக்கினார். இது 1883 இல் வெளியிடப்பட்டுள்ளது. இதில் ஒவ்வொரு பக்கத்தின் தலைப்பிலும் ஒவ்வொரு குறள் அமைக்கப் பட்டுள்ளது.

### விசுவநாத பிள்ளை தமிழ்-ஆங்கில அகராதி

இது 1888இல் சென்னையில் வெளியிடப்பட்டது இது பல பதிப்புகளைக் கண்டுள்ளது. இதனுடைய எட்டாவது பதிப்பு 1972இல் வெளியாயிற்று.

### லாசரஸ் பழமொழி அகராதி

இதனைத் தொகுத்தவர் லாசரஸ் ஆவார். காலம் 1894. தமிழ்ப் பழமொழிகளை ஆங்கில விளக்கக் குறிப்புடன் இந்த அகராதி கொண்டுள்ளது.

### தரங்கம்பாடி அகராதி

பெப்ரீஷியஸ் அகராதியை அடிப்படையாகக கொண்ட இவ்வகராதி 1897 இல் வெளிவந்தது. இது, 33,000 சொற் களை உடையது இதன் இரண்டாம் பதிப்பு 1910 இல் பெய்செனர்சு என்பவராலும், மூன்றாம் பதிப்பு 1933 இல் பெக்செல் என்பவராலும் பதிப்பிக்கப்பட்டன.

### ஹெர்மன் ஜென்சன் பழமொழி அகராதி

ஹெர்மன் ஜென்சன் என்பவர் கடவுள் முதலான பல தலைப்புகளின்கீழ் 3644 பழமொழிகளைப் பாகுபாடு செய்து ஆங்கில மொழிபெயர்ப்புடன் வெளியிட்டுள்ளார். இதன் காலம் 1897 ஆகும்.

## இருபதாம் நூற்றாண்டு அகராதிகள்

இந்த நூற்றாண்டில் ஏராளமான அகராதிகள் வந்துள்ளன. இவற்றுள் இன்றிமையாத சில மட்டுமே இங்கு இடம் பெறுகின்றன.

### அபிதான கோசம்

இதன் ஆசிரியர் ஆ. முத்துத் தம்பிப் பிள்ளை. 1902 இல் இது யாழ்ப்பாணத்தில் வெளியானது பல்வேறுசிறப்புப் பெயர்களை அகரவரிசையில் கொண்டு விரிவான விளக்கத்துடன் உள்ள இந்நூலில் கலைக்களஞ்சியப் பண்பு உள்ளது.

### நா. கதிரைவேற் பிள்ளை அகராதி

இது தமிழ்ப் பேரகராதி என வழங்கும். இவ்வகராதியின் ஆசிரியர் நா. கதிரைவேற் பிள்ளை. இதன் இரண்டாவது பதிப்பு 1901இல் வெளிவந்தது. இது நான்கு தொகுதிகளைக் கொண்டது. இது மானிப்பாய் அகராதியின் விரிவு எனலாம்.

### தமிழ்ச் சொல்லகராதி

சங்க அகராதி, தமிழ்ச்சங்க அகராதி என்று வழங்கப் பெறும் இவ்வகராதி சி. டபிள்யூ. கதிரைவேற் பிள்ளையால் உருவாக்கப்பட்டது. காலம் 1904-1923 ஆகும். இது மூன்று தொகுதிகளைக் கொண்டது. 1800 பக்கங்களில் 63, 900 சொற்களைக் கொண்டுள்ளது.

### தமிழ்ப் பேரகராதி

சதுர் அகராதி போன்று இது நான்கு பகுதிகளை உடையது. இதனைத் தொகுத்தவர் த. குப்புசாமி நாயுடு. ஆவர். சென்னையில் 1906இல் இது வெளிவந்தது.

### சிறப்புப் பெயரகராதி

தெய்வம், ஊர், புலவர் முதலான பல்வகைச் சிறப்புப் பெயர்களை விளக்கும் இவ்வகராதி ஈக்காடு இரத்தினவேலு முதலியாரால் ஆனது. காலம் கி. பி. 1908 ஆகும்.

### இராமநாதன் தமிழ் அகராதி

இது 1909 இல் வெளியானது. ஆசிரியர் பி. இராமநாதன். நான்கு தொகுதிகளைக்கொண்ட இவ்வகராதியில் சில இடங்களில் படங்களும் கொடுக்கப்பட்டுப் பொருள் விளக்கப் பட்டுள்ளன. இவ்வகையில் இதுவே முதல் அகராதியாகும்.

**அபிதான சிந்தாமணி**

இதன் ஆசிரியர் ஆ. சிங்கராவேலு முதலியார். முதற் பதிப்பு 1910 இல் மதுரைத் தமிழ்ச்சங்கத்தால் வெளியிடப் பட்டது. இரண்டாவது பதிப்பு 1936 இல் வெளிவந்தது. இதனைத் தமிழில் தோன்றிய முதல் கலைக்களஞ்சியம் எனலாம்.

**காரனேஷன் தமிழ் அகராதி**

இதனை நா. கதிரைவேற் பிள்ளை செய்த தமிழ் அகராதி யின் விரிவு எனக் கொள்ளலாம். இது நான்கு தொகுதிகளை உடையது. நாகலிங்க முதலியாரால் உருவான இவ்வகராதி 1911 இல் வெளிவந்தது.

**சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேரகராதி**

இதுவரை வெளிவந்துள்ள தமிழ் அகராதிகளுள் இது அளவாலும் தரத்தாலும் சிறந்து விளங்குகிறது. இதனினும் மேம்பட்ட நிலையில் தமிழ் அகராதி ஏதும் வெளிவரவில்லை. தமிழ்—ஆங்கிலம்—தமிழ் அகராதியாகிய இது பின்னிணைப் புத் தொகுதி ஒன்றையும் சேர்த்து மொத்தம் ஏழு தொகுதி களை உடையது இதன் முதல் தொகுதியின் முதல் பகுதி 1924 இல் வெளிவந்தது; பின்னிணைப்புத் தொகுதியின் இறுதிப் பகுதி 1939இல் வெளிவந்தது. மொத்தம் 1, 24, 405 பதிவுகளை இவ்வகராதி கொண்டுள்ளது. வையாபுரிப் பிள்ளை இவ்வகராதியின் பதிப்பாசிரியர் ஆவார். இதன் சுருக்கம் ஒன்று 1955 இல் வெளியிடப்பட்டுள்ளது.

**ஜூபிலி தமிழ்ப் பேரகராதி**

ஐந்தாம் ஜார்ஜ் மன்னரின் வெள்ளிவிழாக் கொண்டாட்ட நினைவாக இவ்வகராதி 1386 பக்கங்களைக் கொண்டு வெளி யாகியது இதன் ஆசிரியர் நெல்லை எஸ். சங்கரலிங்க முதலியார். காலம் 1935.

**ஆனந்த விகடன் அகராதி**

ஆனந்த விகடன் இதழில நடத்தப்பெற்ற குறுக்கெழுத் துச் சித்திரப் போட்டிக்கு உதவும் வகையில் தயாரிக்கப்பட்ட இவ்வகராதி 2040 பக்கங்களைக் கொண்டுள்ளது. காலம்1935.

**மதுரைத் தமிழ்ப் பேரகராதி**

இது, புலவர் பலரால் தொகுக்கப்பட்டு நான்கு தொகுதி களைக் கொண்டதாக மதுரையில் கோபாலகிருஷ்ண கோன் என்பவரால் 1937இல் வெளியிடப்பட்டது.

### சொற்பிறப்பு, ஒப்பியல் தமிழ் அகராதி

இலங்கை ஞானப்பிரகாச அடிகள் தொகுத்த இந்த அகராதியே தமிழ்ச் சொற்பிறப்பியல், ஒப்பியல் துறையில் வெளிவந்த முதல் அகராதி ஆகும். இதன் காலம் 1939-46 ஆகும்.

### கலைக்களஞ்சியம்

இது, 10 தொகுதிகளாக 1954 - 1967 ஆம் ஆண்டுகளில் வெளியிடப்பட்டது. இதன் பதிப்பாசிரியர் பெ. தூரன் ஆவார். இதுவே முறையான முதல் கலைக்களஞ்சியம் ஆகும். இதனை வெளியிட்ட தமிழ் வளர்ச்சிக்கழகம் குழந்தைகள் கலைக்களஞ்சியம் ஒன்றையும் 10 தொகுதிகளாக வெளியிட்டுள்ளது.

### தமிழ் - ருஷ்ய அகராதி, ருஷ்ய- தமிழ் அகராதி

இவ்விரு அகராதிகளும் மாஸ்கோவிலிருந்து முறையே 1960 1965 ஆம ஆண்டுகளில் வெளிவந்துள்ளன. இவை முறையே 38, 000; 24, 000 சொற் பதிவுகளைக் கொண்டுள்ளன.

### ஆங்கிலம்- தமிழ் அகராதி

அ. சிதம்பரநாதனைப் பதிப்பாசிரியராகக் கொண்டு ஆங்கிலம்- தமிழ் அகராதி ஒன்றைத் தயாரித்துச் சென்னைப் பல்கலைக் கழகம் வெளியிட்டுள்ளது. ஆக்ஸ்போர்டு சுருக்க ஆங்கில அகராதியின் அடிப்படையில் உருவான இவ்வகராதி மூன்று தொகுதிகளை உடையது. இவை முறையே 1963, 1964, 1965 ஆகிய ஆண்டுகளில் வெளிவந்துள்ளன. இவ்வகராதி பல பதிப்புகளைக் கண்டுள்ளது.

### திராவிடச் சொற்பிறப்பியல் அகராதி

பரோ, எமினோ ஆகிய இருவரின் முயற்சியால் வெளிவந்த இவ்வகராதி திராவிட ஆராய்ச்சியுலகில குறிப்பிடத்தக்க படைப்பாக விளங்குகிறது. பின்னிணைப்புத் தொகுதியைச் சேர்த்து 2 தொகுதிகளாக 1961, 1968ஆம் ஆண்டுகளில் வெளியான இவ்வகராதியில் மொத்தம் 5461 சொற்கள் இடம் பெற்றுள்ளன.

### நூல் அகராதிகள்

ஓர் இலக்கியத்திற்கோ அலலது ஒரு காலத்து இலக்கியத்திற்கோ அல்லது ஒரு வகை இலக்கியத்திற்கோ செய்யப்படும் அகராதிகள் நூல் அகராதிகள் எனப்படும். இவ்வகையில் பல அகராதிகள் வெளிவந்துள்ளன. சாமி. வேலாயுதம்பிள்ளையின் திருக்குறள் சொல்லடைவு, தண்டபாணி தேசிகரின் சங்க இலக்கியச் சொற்களஞ்சியம், புதுவை பிரெஞ்சு இந்தியக கலைக்

கழகத்தின் பழந்தமிழ் நூற் சொல்லடைவு, வி. ஐ. சுப்பிரமணியத்தின் புறநானூற்றகராதி, ச. வே. சுப்பிரமணியத்தின் சிலம்பு, அகநானூற்றகராதிகள் முதலிய பல குறிப்பிடத்தக்கவை.

### பிற சிறப்பகராதிகள்

எதிர்ச்சொல், ஒலிக்குறிப்புச் சொல், அடுக்கு மொழி முதலியவற்றை விளக்கும் சிறப்பகராதிகள் பல தோன்றி உள்ளன. இவற்றை மு. சதாசிவம் தொகுத்துள்ளார்.

ஆட்சித் துறை, சட்டத்துறை, மானிடவியல், மொழியியல் போன்ற பல்துறையைச் சார்ந்த கலைச்சொற்களைக் கொண்ட கலைச் சொல்லகராதிகள் பல்கியுள்ளன. மரபுத் தொடர்களை விளக்கும் சிறப்பு அகராதிகள் சிலவும் வெளிவந்துள்ளன.

### தொகுப்புரை

தமிழ் அகராதியியல் வரலாற்றில், சிறப்பு மிக்க கால கட்டங்கள் ( Red- letter lexicography dates ) வருமாறு:

1. கிறித்து பிறப்புக்குச் சற்று முற்பட்ட காலத்தில் தோன்றிய தொல்காப்பியத்திலேயே அகராதிக்கூறுகள் சில இடம் பெற்றுள்ளன.

### நிகண்டுகள்

2. கி. பி. 8ஆம் நூற்றாண்டு

   முதல் தமிழ் நிகண்டு திவாகரம் தோன்றியது; நூற்பா நடையினைக் கொண்டு உள்ள முதல் நிகண்டும் இதுவே.

3. கி. பி. 16ஆம் நூற்றாண்டு

   1. விருத்தப்பா யாப்பில் தோன்றிய முதல் நிகண்டும் மிகுதியாகப் பயிலப்பட்டதுமாகிய சூடாமணி நிகண்டு தோன்றியது.
   2. அகர நிரலில் ( முதல் எழுத்தளவில் ) அமைந்த முதல்நிகண்டும் பொருள் தொகை அடிப்படையில் பாகு பாடுற்றதுமான அகராதி நிகண்டு எழுந்தது.

4. கி. பி. 17ஆம் நூற்றாண்டு

   1 வெண்பா யாப்பில் தோன்றிய முதல் நிகண்டு- உரிச்சொல் நிகண்டு - தோன்றியது.

   2. கலித்துறை யாப்பில் அந்தாதித் தொடையுடன் கயாதர நிகண்டு எழுந்தது.

3. வடமொழி நிகண்டாகிய அமரகோசத்தைப் பின்பற்றி பல்பொருள் சூடாமணி தோன்றியது.
4. சொற்பொருளை யடுத்துப் பொருள் தொகையின் எண்ணிக்கையைச் சுட்டும் ஆசிரிய நிகண்டு தோன்றியது.
5. முதலிரு எழுத்துகள் வரை அகர நிரலைக் கொண்ட பொதிகை நிகண்டு தோன்றியது.

5. 19ஆம் நூற்றாண்டு
1. மேற்கோளுடன் நிகண்டு பாடல்களை விளக்கும் நயநப்ப முதலியாரின் ஒருசொற் பலபொருட் டொகுதி உரைபாடம் என்னும் நிகண்டு தோன்றியது.
2. ஒரு பொருளுடைய சொற்களுக்கு மட்டுமே பொருள் கூறும் சிந்தாமணி நிகண்டு தோன்றியது.

**அகராதிகள் :**

6. 17ஆம் நூற்றாண்டு
1. முதலிரு எழுத்து வரை அகர நிரல் அமைப்புக் கொண்டும் உரைநடையில் அமைந்ததும் அருஞ்சொற்களுக்கு மட்டுமே பொருள் கூறுவதுமான அகராதி மோனைக் ககராதி எதுகைதோன்றியது.
2. சொற்களின் எழுத்து எண்ணிக்கை அடிப்படையில் பாகுபாடு கொண்ட பத்துச்சொல் அகராதி தோன்றியது.
3. பேச்சு வழக்குச் சொற்களையும் சேர்த்துப் பொருள் விளக்கும் வைணவ விளக்கவுரை அருஞ்சொல்லகராதி தோன்றியது.

கி. பி. 1679
4. அச்சேறிய முதல் அகராதி - புரோயன்சாவின் தமிழ்-போர்ச்சுகீசிய அகராதி- தோன்றியது.

7. 18ஆம் நூற்றாண்டு
கி. பி. 1732
1. முழுமையான அகர நிரலைக் கொண்டதும் எளிய சொற்களைப் பொருள் விளக்கத்திற்காகக் கொண்டதும் உரைநடையில் அமைந்ததும் பிற்கால அகராதிகளுக்கு வழிகாட்டியாக விளங்கியதும், 'அகராதி' என்னும் சொல்லைக் குறிப்பு

நோக்கீட்டுக் கருவி நூலுக்கு முதன் முதலில் வழங்கியதுமான சதுர் அகராதி தோன்றியது.

கி. பி. 1779

2. முதல் தமிழ் - ஆங்கில அகராதி - பெப்ரீஷியஸின் அகராதி தோன்றியது.

8. 19ஆம் நூற்றாண்டு

1. பெரிதும் செல்வாக்குற்ற ராட்லர், மானிப்பாய், வின்சுலோ முதலிய பேரகராதிகள் எழுந்தன.

கி. பி. 1842

2. முதல் தமிழ்ப் பழமொழியகராதி - பெர்சிவலின் அகராதி - ஆங்கில மொழிபெயர்ப்புடன் தோன்றியது.

9. 20ஆம் நூற்றாண்டு

கி. பி. 1902

1. கலைக்களஞ்சியப் பண்பு கொண்ட முதல் அகராதி-அபிதான கோசம்- எழுந்தது.

கி. பி. 1909

2. படங்களுடன் பொருள் விளக்கப்பட்டுள்ள முதல் தமிழ் அகராதி - The Twentieth Century Tamil Dictionary) - இராமநாதன் தொகுத்த அகராதி - தோன்றியது.

கி. பி. 1910

3. கலைக் களஞ்சியத்திற்கு முன்னோடியான அபிதான சிந்தாமணி தோன்றியது.

கி. பி. 1924-1939

4. இன்றுள்ள அகராதிகளுள் தலைசிறந்ததான சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேரகராதி தோன்றியது.

கி. பி. 1938 - 1946

5. முதல தமிழ்ச்சொற்பிறப்பியல் ஒப்பியல்அகராதி - ஞானப்பிரகாசரது அகராதி - தோன்றியது.

கி. பி. 1954 - 1969

6. முறையான முதல தமிழ்க் கலைக் களஞ்சியம் தோன்றியது.

கி. பி. 1961 - 1969

7. முதல் திராவிடச் சொற் பிறப்பியல் அகராதி தோன்றியது.

# நிகண்டுகளுக்கு முற்பட்ட காலம்

அகராதியியல், கால அடைவில் மிக மெதுவாக வளர்ந்துள்ள ஒரு துறையாகும். இவ் அகராதியியலின் வளர்ச்சி தமிழில் மிக மிக மெதுவானது எனலாம்[1]. இவ் வியலின் வளர்ச்சியினை நிகண்டுகளுக்கு முற்பட்ட கால அடைவில் முதற்கண் ஆராயலாம்.

## தொல்காப்பியம்

தொல்காப்பியத்தின் காலம் குறித்துப் பல்வேறு கருத்து வேறுபாடுகள் இருப்பினும் கிறித்து பிறப்புக்கு முற்பட்ட நூலாக இதனைக் கொள்வது பிழையாகாது எனலாம். நிலைத்ததமிழ் நூல்களுள் காலத்தால் மூத்ததாகக் கருதப்படும் இந்நூலுள் அகராதியியல் கூறுகள் சில காணக் கிடக்கின்றன. இக்கூறுகளைக் கீழ்க்கண்டவாறு பகுத்து நோக்கலாம்.

மொழிப் பொருளியல் (Semantics) அகராதியலுக்கு அடிமனை எனலாம். இவ் வடிப்படையான மொழிப் பொருளியலின் கூறுகளுள் இன்றியமையாத சிலவற்றை ஒவ்வொன்றாக எடுத்துக் கொண்டு இவை பற்றிய தொல்காப்பிய எண்ணங்களைக் கருதலாம்.

**சொல்லின் இலக்கணம்** (Definition of word)

சொல்லின் இயல்புகளைத் தொல்காப்பியர் ஆழ்ந்து தேர்ந்துள்ளார். சொலலுக்கு இருபெரும் இயல்புகள் உளளன[2]. அவை:

1. பொருள் குறித்தல் (semantic or lexical aspect)

2. இலக்கணம் சுட்டுதல் (grammatical or formal aspect). இதனைத் தொல்காப்பியர்,

> **பொருண்மை தெரிதலும் சொன்மை தெரிதலும்**
> **சொல்லின் ஆகும் என்மனார் புலவர்** (641)

என்று குறிப்பிடுகிறார்.

| **தொல்காப்பியம்** | | **அகராதியியல்** |
|---|---|---|
| சொல் | பொருண்மை<br>சொன்மை | அகராதி |

பொருண்மை என்பது சொல்லின் பொருளீடு. சொன்மை என்பது சொல்லின் இலக்கணவடிவம். 'சொல்லினாற்குறிக்கப் பட்ட பொருளின் தன்மை ஆராய்தலும், சொல்லின் தன்மை ஆராய்தலும் சொல் தன்னானே ஆகும். நிலம் என்பது பொருளின் தன்மை ஆராய்வார்க்கு மண்ணினான் இயன்ற தோர் பூதம் என்றாயிற்று. சொல்லின் தன்மை ஆராய்வார்க் குப் பெயர்ச்சொல் என்றாயிற்று. அதனான் இரு பகுதிய சொல் நிலைமை' என்னும் தெய்வச் சிலையாரது உரை இங்குக் கருதத்தக்கது[3]. இக்கருத்து இன்றைய மொழியியலாரின் கருத்தோடு ஒத்துள்ளது[4].

பொருண்மை, சொன்மை ஆகிய இவ்விருசொற்கூறுகளைத் தெளிந்தால் அன்றிச் சொற்களையோ மொழியையோ உணர் தல் இயலாது. எனவேதான், பொருண்மை அறிவு கருதி முத லில் நிகண்டுகளையும், சொன்மை அறிவு கருதிப் பின்னர் இலக்கணங்களையும் பயில்வது பண்டு தமிழகத்தில் மரபாக இருந்து வந்தது[5]. தொல்காப்பியத்தில் பெரும்பான்மை சொன்மை விளக்கமும் சிறுபான்மை பொருண்மை விளக்கமும் இடம் பெற்றுள்ளன.

**பொருளின் இலக்கணம்** (Referential definition of meaning)

சொல், கருத்து இவற்றிற்கிடையே ஓர் இணக்கமான தொடர்பும் தம்முள் எதிர்மாறும் தொடர்பும் (reciprocal and reversible relationship) உண்டு. இத்தொடர்பே பொருள் எனப்படும்[6]. இதனை ஆக்டென், ரிச்சர்ட்சு ஒரு முக் கோணம் வாயிலாக விளக்கியுள்ளனர்[7].

இம் முக்கோணத்தில் (அ) சொல் என்பது ஒரு சொல்லின் ஒலி வடிவத்தைக் குறிப்பதாகும்; (ஆ) மொழியுலகிற்கு வெளியே உள்ள பொருள் என்பது மொழியாய்விற்கு அப்பாற் பட்டதும் சொல்லால் குறிக்கப்படுவதுமான உருவ/அருவப் பொருள் ஆகும். இவ்விரண்டிற்கும் இடையே உள்ளதொடர்பு நிலையானதன்று; இடுகுறித் தன்மையது (arbitrary). அன்றியும் இவ்விரண்டிற்கும் இடையே நேர்த்தொடர்பும் (direct relation-ship) இல்லை. இதனைக் குறிக்கவே (அ), (ஆ) இவற்றிற்கிடையே இடைவெளிகள் உள்ள கோடு வரையப்பட்டுள்ளது. இவ்விரண் டிற்கும் தொடர்பு மூன்றாவது ஒன்றின் வாயிலாக ஏற்படு




கிறது. இதுவே (இ) கருத்து ஆகும். இம் முக்கோணத்தில் மொழியியலாரின் கருத்துக்குரியது (அ) - (இ) பகுதியே ஆகும்; அதாவது சொல், இதன் வாயிலாகத் தெரிவிக்கப்படும் கருத்து ஆகிய இவையே மொழி ஆய்வுக்கு—குறிப்பாக அகராதியியலுக்கு—இன்றியமையாதன சொல், கருத்தைத் தெரிவிக்கிறது; கருத்து சொல்லை நினைவுக்குக் கொணருகிறது. எனவே, சொல், கருத்து இவற்றிற்கிடையே ஓர் இணக்கமான தொடர்பும் தம்முள் எதிர் மாறும் தொடர்பும் உண்டு எனத் தெளியலாம். இத் தொடர்பே பொருள் எனப்படும். பேசும் நிலையில் கருத்திலிருந்து சொல்லுக்கும், கேட்கும் நிலையில் சொல்லிலிருந்து கருத்திற்கும் செல்கிறோம்.

தமிழில் 'பொருள்' என்னும் சொல்லுக்குப் பல பொருள்கள் உள்ளன. இச் சொல், வேற்றுமைப் பொருள், எச்சப் பொருள் எனச் சொன்மைப் பொருளையும் (grammatical meaning) குறிக்கிறது; உள்ளீடு அல்லது உள்ளுறையையும் (content or subject matter) குறிக்கிறது. காட்டுகள்; பொருள் அடக்கம், பொருள் அதிகாரம் முதலியன; மேலும், பொருண்மைப் பொருளையும் (lexical meaning) குறிக்கிறது; அன்றியும், மொழியுலகிற்கு வெளியே உள்ள உருவ/ அருவப் பொருளையும் (thing) குறிக்கிறது. வடமொழியிலும்

'அர்த்தம்' என்னும் சொல், மொழியுலகிற்கு வெளியே உள்ள பொருளையும் கருத்தையும் சுட்டுகிறது. 'பதார்த்தம்' என்னும் வடசொல், சொற்பொருள் (பதம் = சொல்; அர்த்தம் = பொருள்) எனப் பொருள்படும்; இப் பதார்த்தம் என்னும் சொல் மொழியுலகிற்கு வெளியே உள்ள பொருளையும் குறிக்கும். இதனால் தான் உலமன் என்னும் மொழியியல் அறிஞர், 'இந்தச் சொற்கள் எல்லாம் மொழியுலகிற்கு வெளியே உள்ள பொருளைச் சுட்டுகின்றனவா? அல்லது மொழியுலகிற்கு வெளியே உள்ள பொருளோடு இயைபுள்ள கருத்தைக் குறிக்கின்றனவா? பெரும்பாலும் இந்த அடிப்படைச் சிக்கல் தீர்வு உறாமல உள்ளது அல்லது இது குறித்துத் தெளிவான வரன்முறை உருவாக்கப்படவில்லை'[8] என்று கூறுகிறார். தமிழிலும் இலக்கணப் புலவர்கள் 'பொருள்' என்னும் சொல்லால் மொழியுலகிற்கு வெளியே உள்ள பொருளைக் குறிக்கின்றார்களா? அல்லது கருத்தைக் குறிக்கின்றார்களா? என்பதனைத் தெளிவாக அறிந்து கொள்ள இயலவில்லை. எனினும் கிடைக்கும் குறிப்புகளைக் கொண்டு இவர்கள் கருத்தையே குறிக்கிறார்கள் எனக் கருதத் தோன்றுகிறது[9]. கேட்போர் உள்ளத்தில் ஒலிகள் கருத்தை ஆக்குகின்றன எனவும், கேட்போருக்குக் கருத்தை அறிந்து கொள்ள உதவும் கருவியாகச் சொல் பயன்படுகிறது எனவும் நச்சினார்க்கினியர்[10] கூறுகிறார். இவ்வாறு, கேட்போன் நிலையில் நின்று நச்சினார்க்கினியர் கூறப் பேசுவோன் நிலையில நின்று சேனாவரையர், 'சொன்னிகழ்ச்சிக்குப் பொருள் இடம்' எனக் குறிக்கிறார்[11]. எனவே, 'பொருள் என்பது இங்கு மனத்துக்கண் தோன்றும் கருத்து எனத் தெளிவாகிறது. இதனைத் தொல்காப்பியர்,

**எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே** (640) என்பர்.

இந் நூற்பாவின் உரையில் உரைகாரர்கள் முயற்கொம்பு, யாமை மயிர்க் கம்பளம போன்ற தொடர்களின் பொருளையும் கருத்திற்கொண்டு இவற்றைப் பொய்ப்பொருள அல்லது இல்லாப் பொருள் எனக் குறிக்கின்றனர். உலகில் முயற்கொம்பு போன்ற பொருள்கள் இல்லை. எனினும், இத் தொடர் உணர்த்தும் கருத்து உள்ளத்தில் நிற்கிறது. எனவே, முன்னர்ச் சுட்டிய முக்கோணத்தின் இடப் பகுதியை — அ, (இ) பகுதியை, அதாவது சொல்லையும் கருத்தையுமே தொல்காப்பியர் கருத்திற் கொண்டார் எனத் தோன்றுகிறது.

**பலசொல் ஒருபொருள்** (Synonymy)

ஒன்றுக்கும் மேற்பட்ட வெவ்வேறு சொற்கள் ஒரே

பொருளைக் குறிப்பின் இது பலசொல் ஒரு பொருள் எனப்படும். இதனைத் தொல்காப்பியம்,

**பலசொல் ஒருபொருட் குரிமை தோன்றினும்** (782)

எனக் கூறுகிறது. பலசொல் ஒருபொருள் என்பதனைக் குறிக்க ஒருபொருட் பன்மொழி, இணைப்பொருட்சொல், ஒரு பொருட பல்பெயர், ஒருபொருட் கிளவி, பொருள் ஒருமை என்னும் தொடர்கள் வழங்குகின்றன. தொல்காப்பியததில் பலசொல் ஒருபொருளுக்குக் காட்டாக நூற்பாக்கள் பல உள்ளன. அவற்றுள் ஒன்று:

**தடவும் கயவும் நளியும் பெருமை** (803)

ஒருபொருட் பல்பெயர்கள் ஓரிடத்தில் அடுக்கி வரலாம். 'நிவந்தோங்கு பெருமலை', 'கழிபேருவகை' முதலியவற்றை அடுக்கிவரும ஒருபொருள் பலபெயர்களுக்குக் காட்டாகக் கொள்ளலாம். தொல்காப்பியம,

**ஒருபொருள் இருசொல் பிரிவில வரையார்** (943)

என இணைப்பொருட் சொற்கள் ஓரிடத்தில் அடுக்கி வரலாம என்கிறது.

**பொருட் பன்மை** (Polyvalency or Multiplicity of meaning)

ஒருசொல் ஒன்றுக்கும் மேற்பட்ட பொருள்களைக் கொண்டு இருப்பின் அது பொருட்பன்மை எனப்படுப. இப் பொருட்பன்மை இருவகைபபடும்: (1) பல்பொருட்கிளவி (Polysemy), (2) ஒப்பு உருச்சொல் (Homonymy). ஒன்றோடு ஒன்று தொடர்புடைய பல பொருள்களைக் கொண்டது பல் பொருட் கிளவி[12] ஆகும். இவ்வாறு பொருள் தொடர்பு இல்லாத வெவ்வேறு சொற்கள் உருவ ஒப்புமை கொண்டிருப்பின் அது ஒப்பு உருச்சொல்[13] எனப்படும். தொல்காப்பியம் இந்த இருவகை வேறுபாட்டைக் காட்டவில்லை; இரண்டையும் வேறுபடுத்தாது பலபொருள் ஒருசொல் என்றே கொள்கிறது[14]. காட்டு:

**கடியென் கிளவி**
**வரைவே கூர்மை காப்பே புதுமை**
**அச்சம் முன்றேற்று ஆயீ ரைந்தும்**
**மெய்ப்படத் தோன்றும் பொருட்டா குமமே** (866)

பொருட் பன்மை வளர்ச்சிக்கு வழக்கு மாற்றம் ஒரு காரணம் எனலாம். வழங்கும் சூழலுக்கு ஏற்பச் சொற்கள்

பல்வேறுபட்ட பொருட்கூறுகளைப் பெறுகின்றன. இக்கூறுகளுள் சில மாறக் கூடியவை; வேறுசில நிலைத்த பொருட்கூறுகளாக ஆகின்றன[15]. இந் நிலைத்த பொருட் கூறுகளுக்கு அடிகோலும் வழக்கு மாற்றத்தைத் தொல்காப்பியர்,

**வாரா மரபின வரக்கூறுதலும்**
**என்னா மரபின எனக்கூ றுதலும்**
**அன்னவை எல்லாம் அவற்றவற் றியல்பான்**
**இன்ன என்னும் குறிப்புரை ஆகும்** (905)

எனக் குறிக்கிறார்.

**எதிர்ப் பொருள்**

ஒரு சொல்லின் பொருட் கூறுகளுள் ஏதேனும் ஒன்று மற்றொரு சொல்லின் பொருட்கூறுகளுள் ஏதேனும் ஒன்றோடு மாறுபட்ட நிலையில் இரண்டு சொற்களுக்கும் இடையே தோன்றும் மாறுபாடு எதிர்ப்பொருள் ஆகும்[16]. தொல்காப்பியத்தில் உயர்திணை — அஃறிணை, ஆண்மை — பெண்மை, இயற்கை — செயற்கை, ஒருமை — பன்மை போன்ற எதிர்ச் சொல் இணைகள் உள்ளன. எதிர்மறையும் ஒரு வகையான எதிர்ப்பொருள் ஆகும். ஒரு தொடரை எதிர் மறுத்துரைத் தலால் பெயர், வினைகளுக்கிடையே உள்ள வேற்றுமை உறவு மாறுவதில்லை என்னும் பொருள்படத் தொலகாப்பியர்,

**எதிர்மறுத்து மொழியினும் தத்தம் மரபின்**
**பொருள்நிலை திரியா வேற்றுமைச் சொல்லே** (521)

எனக் குறிக்கிறார். எதிர்மறுத்துக் கூறுவதால் பெயர்கள் பயனிலைகளோடு கொண்டுள்ள உறவில் பொருள் மாற்றம் நேராது என்பதனைத் தொல்காப்பியர்,

**பெயரெஞ்சு கிளவியும் வினையெஞ்சு கிளவியும்**
**எதிர்மறுத்து மொழியினும் பொருள்நிலை திரியா** (721)

எனக் கூறுகிறார். எதிர்மறை உருபன்களால் மட்டுமன்றி வினா, எதிர்மறை எச்சம் ஆகியவற்றின் வாயிலாகவும் எதிர்ப் பொருள் தோன்றும என்பதனைத் தொல்காப்பியர்,

**வினாவழி எதிர்மறை** (729)

**எதிர்மறை யெச்சவழி எதிர்மறை** (918)

எனச் சுட்டுகிறார்.

**சொல் வழக்கு வரையறை** (Range of Application of the word)

சொல் வழக்கு வரையறை என்பது பொருட்சூழலுக்கு (context) ஏற்பச் சொற்களை வழங்குவதற்கு உரிய வரையறை

ஆகும்[17]. ஈ, தா, கொடு ஆகிய சொற்கள் பொருள் ஒருமை உடையன. எனினும், இவற்றை வழங்குவதற்கு ஒரு வரையறை உள்ளது. இச்சொல் வழக்கு வரையறையைத் தொல்காப்பியர் நன்கு உணர்ந்து,

***ஈதா கொடுவெனக் கிளக்கும் மூன்றும்***
***இரவின் கிளவி ஆகிடன் உடைய*** *(927)*

***அவற்றுள்***
***ஈயென் கிளவி இழிந்தோன் கூற்றே*** *(928)*

***தாஎன் கிளவி ஒப்போன் கூற்றே*** *(929)*

***கொடுஎன் கிளவி உயர்ந்தோன் கூற்றே*** *(930)*

எனக் குறித்துள்ளார். இவ்வாறே செலவு, தரவு, கொடை ஆகிய சொற்களின் வழக்கு வரையறையைத் தொல்காப்பியர் பின்வருமாறு குறித்துள்ளார்:

***செலவினும் வரவினும் தரவினும் கொடையினும்***
***நிலைபெறத் தோன்றும் அந்நாற் சொல்லும்***
***தன்மை முன்னிலை படர்க்கை என்னும்***
***அம்மூ விடத்தும் உரிய என்ப*** *(511)*

***அவற்றுள்***
***தருசொல் வருசொல் ஆயிரு கிளவியும்***
***தன்மை முன்னிலை ஆயீ ரிடத்த*** *(512)*

***ஏனை யிரண்டும் ஏனை யிடத்த*** *(513)*

**அகர நிரல்**

சொற்களை அகர நிரலில் அமைத்துப் பொருள் விளக்கம் கூறும் முறையே உலக அகராதிகளில் பெரும்பாலும் காண படுகிறது. தொல்காப்பியர்,

***எழுத்தெனப் படுப***
***அகர முதல் னகர இறுவாய்***
***முப்பஃ தென்ப***
***சார்ந்துவரல் மரபின் மூன்றலங் கடையே*** *(1)*

என அகரம் முதல் னகரம் ஈறாக அமையும் தமிழ் நெடுங் கணக்கின் அகர நிரலைச் சுட்டியுள்ளார். உயிர் மயங்கி யலிலும் அகர ஈறு தொடங்கி ஔகார ஈறு ஈறாக அகர நிரலில் அமைத்துப் பேசுவதைக் காணலாம். தொல்காப்பியம் தமிழ் எழுத்துகளின் அகர நிரலைப் பற்றிக் கூறுகிறது. ஆனால், அகராதி வரிசையைப் பற்றி அது குறிப்பிடவில்லை.

சொற்களை எழுத்து வரிசைப்படி அடுக்குவது அகராதியியல் பணிகளுள் ஒன்று ஆகும். தொல்காப்பியம் எழுத்து வரிசையைக் குறிப்பிடுகிறது. சொற்களை வரிசைப்படுத்துவது பற்றிக் கூறவில்லை. அகரநிரல் கருத்து (concept) தொல்காப்பியத்தில் இருப்பினும், இந் நூலில பொருள்(கள்) சுட்டப்பட்ட சொற்கள் அகரநிரலில் அமையவில்லை. மனனம் செய்வதற்கு ஏதுவாக நூற்பா நடையில் தொல்காப்பியத்தில் சொற்கள் பொருள் விளக்கபபட்டுள்ளன[18].

**பொருள் சுட்டல்**

உரியியல, இடையியல், மரபியல் முதலியவற்றின் வாயிலாக நேரடியாகப் பொருளும மரபும் சுட்டியுள்ளார் தொல்காப்பியர். அன்றியும், நூல் முழுமையும் ஆங்காங்கே பொருள் உணர்ந்து கொள்ளுமாறு சொற்பொருளைச் சுட்டிச் செலகிறார். 'ஆண்' என்னும் அஃறிணைப் பெயர் 'அம்மு'ப் பெறறு முடியும என புளளி மயங்கியலில இலக்கணம் கூறப் புகுந்த தொலகாப்பியர்,

**ஆண்மரக் கிளவி யரைமர வியற்றே** *(304)*

எனக் குறிக்கிறார். அம்முப் பெறும் நிலையை வரையறுக்கும் தொல்காப்பியர் ஆணும் அரையும் மரங்களைக் குறிப்பன எனப் பொருளும் விளககுகிறார். இவ்வாறு தொல்காப்பியத் தில எறததாழக் கால நூறு நூற்பாககளில் பொருள் விளக்கம் சொலலப்பட்டுள்ளது (இணைப்பு—1 காண்க).

உரியியல முழுமையும பொருள் விளக்கப் பகுதி ஆகும். இவ் வியலில 120 சொறகள் விளக்கம் பெறுகின்றன. தொல் காப்பியர், அரிதுணர வேண்டிய அருஞ்சொறகளுக்கு மட்டுமே பொருள் விளககுகிறார்; வெளிப்படையாகப் பொருள் தெரியும் எளிய சொற்களுக்கு அவர் பொருள் விளக்கவில்லை. இதனை,

**வெளிப்படு சொல்லே கிளத்தல் வேண்டா**
**வெளிப்பட வாரா உரிச்சொல் மேன** *(783)*

எனக் குறிப்பிட்டு அருஞ்சொற்களுக்கு மட்டும்[19] பொருள் சுட்டுகிறார்.

இடையியல, மரபியல் ஆகியவற்றில் இடைச் சொற்களும், மரபுச் சொற்களும் பொருள விளக்கப்பட்டுள்ளன. பிற இயலகளில் இலக்கணக் குறியீடுகள், மரபுக் குறியீடுகள் ஆங்காங்கே விளக்கப் பட்டுள்ளன. தொல்காப்பியர் விளக்கியுளள சொற்பொருள் விளக்கத்தை 'அகராதி'யாக அமைத்துப்

பார்த்தல் பயனுடையது (இணைப்பு—2 காண்க). இவ் வகராதி அக்கால மொழிப் பொருள் நிலையைப் பேரளவு உணர்த்தவில்லை யெனினும் ஓரளவேனும் உணர்த்தக்கூடும்.

சொற்கள் குறிக்கும் பொருண்மை நிலையைத் தொல் காப்பியர் இருவகையாகப் பகுப்பார் : 1. வெளிப்படுநிலை, 2. குறிப்புநிலை.




**தெரிபுவேறு நிலையலுங் குறிப்பில் தோன்றலும்**
**இருபாற் றென்ப பொருண்மை நிலையே** (642)

என்பர் தொல்காப்பியர். இதற்கு உரை வகுத்த தெய்வச் சிலையார், ' "தெரிபு வேறு நின்றன" நிலம், நீர், தீ, வளி எனப் பொருள் உணர்த்துவனவும்; உண்டான், தின்றான் எனத் தொழில் உணர்த்துவனவும. "குறிப்பிற்றோன்றின" இவன் நெருப்பு, இவன் பசு எனக் குணம் பற்றியும், தீமை செய்தாரை வாழ்வீராக எனவும் அப்பொருள் பயவாது பிற பொருள் பயப்ப வருவன' என விளக்குவார்.

சொல்லுக்குரிய வெளிப்படைப் பொருளையோ குறிப்புப் பொருளையோ விளக்கலாம; அப்படி விளககப்பட்ட சொற் களுக்கும் பொருள் விளங்கவில்லையாயின் இவற்றையும் விளக்க முனைந்தால் அதற்த எல்லை இராது. இதனை த தொல்காப்பியர்,

**பொருட்குப் பொருள் தெரியின் அதுவரம் பின்றே** (874)

என்று புலப்படுத்துகிறார். ஆயினும், ஆசிரியர் சீரிய முறை யில் பொருளுணர்த்த வல்லவராயின் கேட்போனுக்குச் சொல் லும் பொருட்கண் மயக்கம் தோன்றாது. எனவே,

**பொருட்குத் திரிபில்லை உணர்த்த வல்லின்** (875)

என்பர் தொல்காப்பியர். ஆசிரியர் என்னதான் முயன்று உணர்த்தினும் கேட்போனின் உணரும் ஆற்றலுக்கேற்பவே பொருள் புலப்படும். ஆதலின்,

**உணர்ச்சி வாயில் உணர்வோர் வலித்தே** (876)

என்கிறார்.

இவ்வாறு தொல்காப்பியர் சொற்பொருள் சுட்டுவதோடு சொற்பொருள் உணர்த்தும் கலையையும் ஓரளவு விளக்கி யுள்ளார்.

**மரபு** (Usage)

மரபு சுட்டுவது அகராதிக் கூறுகளுள் ஒன்று. தொல் காப்பியர் மரபை ஓதுவதற்கென்றே மரபியலைப் படைத்துள் ளார். இவ் வியலில் இளமைப் பெயர்கள், ஆண்பாற் பெயர் கள், பெண்பாற் பெயர்கள் ஆகியவற்றின் மரபுகள் குறிக்கப் பட்டுள்ளன. மரபுப் பொருள் 63 நூற்பாக்களிலும், மரபுச் செய்திகள் அவ் வியல் முழுமையும் இடம் பெற்றுள்ளன. இணைப்பு—2 இல் காட்டப்பட்ட சொற்பொருள் விளக்க அகராதியில் ஏறத்தாழ 40 சொற்கள் மரபு விளக்கம் பெறு கின்றன. மரபியல் முழுமையும் ஆண்மை, பெண்மை, இளமைப் பெயர்களின் மரபு சுட்டுவதோடு நில்லாது உயிர் களின் பாகுபாடும் சிறப்பு மரபும் சுட்டுகிறது. மேலும், நால வகை வருணத்தாருக்கும உரிய இயல்புகள், மரவகையின் உறுப் புகள், நூல மரபு முதலியனவும் விளக்கபபடுகின்றன. சுருங்கக் கூறின், தொல்காப்பிய மரபியல் (அ) பொதுவாக மரபிற்கு உரியவை, (ஆ) இளமைப் பெயர்கள், (இ) உயிர்களின் பாகு பாடும் சிறப்பு மரபும், (ஈ) ஆண்பாற் பெயர்கள், (உ) பெண் பாற் பெயர்கள், (ஊ) நூலின் மரபு முதலியவற்றை விளக்கு கிறது. இதனால், அகராதியியலின் ஒரு கூறாகிய மரபு சுட்டுதல் தொல்காப்பியத்தில உள்ளமையை உணரலாம்.

**ஒலிப்பு முறை** (Pronunciation)

முறையான ஒலிப்பு இல்லாவிடில் சொற்களின் பொருள் கள் வேறுபட்டுவிடும். ஒருவர் பேசுவதைப் பிறர் பிழையற வும் தெளிவுறவும் புரிந்து கொள்ள முறையான ஒலிப்பு இன்றியமையாதது. இதனால்தான் ஒலிப்பு முறை அகராதி களில் சுட்டப்படுகிறது.

மொழியிலார் ஒலி ஆய்வை மூவகைப்படுத்தி நிகழ்த்துவர்: (அ) பௌதிக ஒலியியல் (Acoustic Phonetics), (ஆ) கேட்பு ஒலியியல் (Auditory Phonetics), (இ) ஒலிப்பு ஒலியியல் (Articulatory Phonetics). இம்மூவகை ஒலியியலகளுள் ஒலிப்பு ஒலியியில் அகராதியியல் கூறுகளுள் ஒன்றாகக் கொள்ளத்

தக்கது. தொல்காப்பியப் பிறப்பியல் அக்காலத் தமிழ் மொழியின் ஒலிப்பு ஒலியியல் எனலாம்.

மேனாட்டுப் பேரகராதிகளில் காட்டப்படும் ஒலிப்பு முறைக் குறிப்புப் போன்று தமிழ்ப் பேரகராதிகளிலும் காட்டு தற்குத் தொல்காப்பியப் பிறப்பியல் ஓரளவு துணைபுரியக் கூடும்.

காற்றைச் சுவாசிப்பதைப் போல இயல்பாக நாம் தமிழ் ஒலிகளை ஒலித்து வருகிறோம். தாய்மொழி ஒலிப்பாக இருப்பதால் இளமை தொட்டு வருகின்ற பழக்கத்தால் ஒலிப்பு முறை பற்றிய அறிவு இல்லாமலேயே எளிதாக ஒலித்து வருகிறோம்[20]. ஆனால், அயல் மொழியினரால் இவ்வாறு எளிதாக ஒலிக்க இயலாது. அயல் மொழியினருக்கு உதவும் வகையில் அகராதிகளில் ஒலிப்பு முறை சுட்டப்படுகிறது. தமிழ் அகராதிகள் ஒலிப்புமுறை சுட்டுவதில் கருத்துச் செலுத்தவில்லை எனத் தெரிகிறது.

தொல்காப்பியப் பிறப்பியல் நூற்பாக்கள் (84—101), நூன்மரபு நூற்பாக்கள் (3, 4, 10—12) ஆகிய இருபத்திரண் டும் தமிழ் எழுத்தின் ஒலிப்பு முறையை ஓரளவு அறிவிக் கின்றன.

**தத்தம் திரிபே சிறிய என்ப** (88)

என வரும் பிறப்பியலின் சிங்கநோக்காகக் கிடக்கும் நூற்பா வாயிலாகத் தொல்காப்பியர், உயிர்களும்மெய்களும் அவற்றிற் குரிய தானங்களுட் பிறந்து ஒலிப்பதைத் தாம் கூறியிருப் பினும், நுண்ணுணர்வான் ஆராயுமிடத்துத் தத்தம வேறு பாடுகள் சிறியனவாய் உள்ளன எனக் குறிக்கிறார். இவ் வேறு பாடுகளை எல்லாம் இன்றைய மொழியிலார் ஆழ்ந்து ஆய்ந்து கண்டுள்ளனர்; தொல்காப்பியப் பிறப்பியலில் சில இடங்களில் மாறு பட்டும் உள்ளனர்[21]. தொல்காப்பியர் இன்றைய மொழியிலார் போல மிகத் துல்லியமாக ஒலிப்பு ஒலியியலை விளக்கவில்லை. எனினும், அவரது பிறப்பியல் தமிழ் ஒலிப்பு முறையை அறிய ஓரளவு துணைசெய்வதாகவுள்ளது.

**சொற்களின் மூல வரலாறு**

சொற்களின் மூல வரலாற்றைச் சுட்டுவது அகராதியியல் கூறுகளுள் ஒன்று ஆகும். தொல்காப்பியர் சொற்களின் மூல வரலாற்றை எவ்விடத்தும் சுட்டவில்லை. மாறாக, மூல வரலாறு சுட்டுதல் இயலாத ஒன்று என்னும் கருத்தினராக அவர் தோன்றுகிறார்[22]. பிற்காலத்தில் கால்டுவெல்,

ஞானப்பிரகாசர், எமினோ, பரோ, தேவநேயப் பாவாணர் முதலானோர் மூல வரலாற்றை ஆராயும் துறையில் ஈடு பட்டமை ஈண்டுக்கருதத்தக்கது. சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேரகராதியும் இத்துறையில் சென்றுள்ளமை குறிப்பிடத்தக்கது.

எச்சவியலில் தொல்காப்பியர்

***இயற்சொல் திரிசொல் திசைச்சொல் வடசொலென்***
***றனைத்தே செய்யுள் ஈட்டச் சொல்லே*** (880)

எனப் பொதுவாகச் சொற்களின் மூலத்தைக் (source) குறிக்கிறார். சொறகளைத் தனித்தனியே எடுத்து அவற்றின் மூலவரலாற்றைத் தொல்காப்பியர் விளக்கவில்லை எனினும், இயற்சொல் (common native words), திரிசொல் (literary words), திசைச்சொல் (words of foreign origin), வடசொல் (words of Sanskrit origin) என அக்காலத்தில் வழக்கில் இருந்த சொற்களை வகைப்படுத்திப் பொதுவாக மூலத்தைக் குறிக்கிறார் எனலாம்[23].

### புதிய சொற்கள், பொருள்கள் ஏற்பு

மொழியில் வழங்கும் புதிய சொற்கள், பொருள்கள் முதலியவை அகராதியில் பதிவு செய்யப்பட வேண்டும். மொழியின் தூய்மைக்கு ஊறு விளையும் என நினைந்து வழக்குகளைப் பதிவு செய்யாமல் விடுப்பது அகராதியியல் நெறிக்குப் புறம்பானது [24]. தொலகாப்பியர் தம் நூலுள் எவ்வெவ் விதிகளுக்குட்பட்டு மொழி இயங்குகிறது என்பதனையும் எவ்வெச் சொற்கள் எவ்வெப் பொருளில் வழங்குகிறது என்பதனையும் விளக்கியுள்ளதோடு கால ஓட்டத்தில் மொழியில் இடம் பெறும் புதியனவற்றைப் புறக்கணிக்காமல் ஏற்றுக்கொள்ள வேண்டும் என்னும் கருத்தினர் என்பதும் நன்கு தெளிவாகிறது (இணைப்பு — 3 காண்க).

## தொல்காப்பியமும் நிகண்டுகளும்

நிகண்டுகள், தமிழ் அகராதியியல் வரலாற்றில் செம்பாதியிடத்தை வகிக்கும் சொற்பொருள் கூறும் துறை நூல்கள் ஆகும். யாப்பு நடையில் சொற்பொருள் விளக்கும் இந்நூல்களுக்குத் தொல்காப்பியம் மூலமாக அமைந்திருக்க வேண்டும் எனத் தெரிகியது. இதனைக் கீழே காணலாம்.

நிகண்டுகள் பொதுவாகப் பின்வரும் முப்பெரும் பிரிவுகளைக் கொண்டவை ஆகும்: 1. ஒருபொருள் பல்பெயர்த் தொகுதி, 2. ஒருசொல் பல்பொருள் பெயர்த் தொகுதி, 3. பல்பொருள் கூட்டத்து ஒருபெயர்த் தொகுதி. இவ்வாறு இப் பிரிவுகள் பெயர் பெறத் தொல்காப்பியம் ஓரளவு அடிப்படை எனலாம்[25].

நிகண்டுகளின் மேற்குறித்த முப்பெரும் பிரிவுகள் தொல் காப்பியத்தினின்றும் தோற்றம் கொண்டவை எனக் கருதலாம்.

**உறு வ நனியென வருஉம் மூன்றும்**
**மிகுதி செய்யும் பொருள என்ப (784)**

போன்ற தொல்காப்பிய நூற்பாககள் நிகண்டுகளின் ஒரு பொருள் பல்பெயர்த் தொகுதிக்கும்,

**கடியென் கிளவி**
**வரைவே கூர்மை காப்பே புதுமை**
**விரைவே விளக்கம் மிகுதி சிறப்பே**
**அச்சம் முன்தேற்று ஆயி ரைந்தும்**
**மெய்ப்படத் தோன்றும் பொருட்டா கும்மே (866)**

போன்ற தொல்காப்பிய நூற்பாக்கள் நிகண்டுகளின் ஒரு சொல் பல்பொருள் பெயர்த் தொகுதிக்கும்,

**ஒன்றறி வதுவே உற்றறி வதுவே**
**இரண்டறி வதுவே அதெனாடு நாவே**
**மூன்றறி வதுவே அவற்றொடு மூக்கே**
**நான்கறி வதுவே அவற்றொடு கண்ணே**
**ஐந்தறி வதுவே அவற்றொடு செவியே**
**ஆறறி வதுவே அவற்றொடு மனனே**
**நேரிதின் உணர்ந்தோர் நெறிப்படுத் தினரே (1526)**

போன்ற தொல்காப்பிய நூற்பாக்கள் நிகண்டுகளின் பல் பொருள் கூட்டத்து ஒரு பெயர்த் தொகுதிக்கும் தோற்றுவாய் எனக் கொள்ளலாம்.

கருப்பொருள் விளக்கம் கூறும்,

**தெய்வம் உணாவே மாமரம் புள்பறை**
**செய்தி யர்ழின் பகுதியொடு தொகைஇ**
**அவ்வகை பிறவும் கருவென மொழிப (964)**

என்னும் தொல்காப்பிய நூற்பாவின் அடிப்படையில் திவாகர நிகண்டுத் தொகுதிகளும், திவாகரத்தைப் பின்பற்றிப் பிற

நிகண்டுகளின் தொகுதிகளும் தோன்றியிருக்கலாம் எனத் தெரிகிறது. தொல்காப்பியம் தெய்வம், உணவு, மா, மரம், புள், பறை, யாழ் என ஏழுவகைக் கருப்பொருள்களைக் குறிக்கிறது. இவற்றுள் தெய்வம் திவாகரத்தில் தெய்வப் பெயர்த்தொகுதியிலும், உணவு, பல்பொருள் பெயர்த் தொகுதியிலும், மாவும் புள்ளும விலங்கின் பெயர்த் தொகுதியிலும், மரம், மரப்பெயர்த் தொகுதியிலும், பறையும் யாழும் செயற்கை வடிவப் பெயர்த் தொகுதியிலுமு இடம் பெற்றுள்ளமை காணலாம். தொல்காப்பியர் அகத்திணை இயலில் விளக்கும் நிலப் பாகுபாடும் நிலத்துவாழ் மக்கள் பற்றிய குறிப்புகளும் முறையே திவாகரத்தில் இடப்பெயர்த் தொகுதி, மக்கள் பெயர்த் தொகுதிகளுள் இடம் பெற்றுள்ளன.

**உரிச்சொற் கிளவி விரிக்குங் காலை**
**இசையிலும் குறிப்பினும் பண்பினும் தோன்றி** (782)

என்னும் தொல்காப்பியப் பகுதியில் சுட்டப்படும பண்பு, திவாகரத்தில் பண்பு பற்றிய பெயர்த் தொகுதியிலும், இசை ஒலி பற்றிய பெயர்த் தொகுதியிலும் இடம் பெற்றுள்ளன. தொல்காப்பிய வினையியல் திவாகரத்தின் செயல் பற்றிய பெயர்த் தொகுதிக்கு அடிப்படை எனலாம். தொல்காப்பிய உரியியல் ஒருசொற் பல்பொருட் பெயர்த் தொகுதிக்கும், 'அஇஉ அம் மூன்றும் சுட்டு' (31) எனத் தொகை எண் கொண்ட தொல்காப்பிய நூற்பாக்கள் பல்பொருள் கூட்டத்து ஒருபெயர்த் தொகுதிக்கும் வழிகோலின.

தொல்காப்பிய நூற்பாக்கள் திவாகரத்தில் மிகுதியாக இடம் பெற்றுள்ளன (இணைப்பு-4 காண்க). தொல்காப்பியம் போலவே நூற்பா நடையில் திவாகரம பொருள் விளக்குகிறது.

மேற்குறித்தவற்றால் தொல்காப்பியமே நிகண்டுகளுக்கு மூலமாக இருந்திருக்க வேண்டும் எனத் தெரிகிறது.

## நிகண்டுக் குறிப்புகள்

இன்று உள்ள நிகண்டுகள் தவிர வேறு சில நிகண்டுகளும் இருந்திருக்கலாம் எனக் கருதுவதற்குச் சில நிகண்டுக் குறிப்புகள் கிடைத்துள்ளன.[20] இவைகளின் மூலம் தெரியவில்லை. இக் குறிப்புகளை ஒவ்வொன்றாகக் கீழே காணலாம்.

### நிகண்டன் கலைக்கோட்டுத் தண்டனார்

'நாவல மாலைக் கழிநீர் மல்க' என்று தொடங்கும் நற்றிணை 382 ஆம் பாடலை இயற்றிய நிகண்டன் கலைக்கோட்டுத்

தண்டனார் என்னும் புலவரின் பெயர் கருத்து வேறுபாடு களுக்கு அடிகோலியுள்ளது. தமிழ் இலக்கியப் பரப்பில் இப் புலவரது படைப்பாக இப்பாடல் தவிர வேறு எதுவும் தெரியவில்லை.

நற்றிணையை முதன் முதல் பதிப்பித்த பின்னத்தூர் அ.நாராயணசாமி ஐயர் 'பாடினோர் வரலாற்'றில் இப் புலவர் குறித்து வரைந்துள்ள குறிப்பு [27], தமிழ் அகராதிக் கலை ஆசிரியரது கருத்துரை[28] இவற்றின் அடிப்படையில் பெறப்படுவன:

(அ) நிகண்டு நூல் செய்தமையால் 'நிகண்டன்' என்னும் பெயர் அமைந்தது.

(ஆ) இவர் செய்த நிகண்டின் பெயர் 'கலைக் கோட்டுத் தண்டு'.

(இ) இவர் செய்த நிகண்டின் பெயர் 'நிகண்டு'.

(ஈ) மான் கொம்பைக் கைக்கோலாகக் கொண்டமையால் 'கலைக் கோட்டுத் தண்டனார்' எனப்பட்டார்.

(உ) 'கலைக் கோட்டுத் தண்டு' என்பது நிகண்டு நூல் அன்று; வேறு துறை நூல். 'கலைக் கோட்டுத் தண்டு' என்னும் தொடரால் அந்நூல் பெயர் பெற்றிருக்கலாம். அத்தொடர் காரணமாகப் புலவர் 'கலைக் கோட்டுத் தண்டனார்' எனவும், அவரே நிகண்டு ஒன்றும் இயற்றியமையால் 'நிகண்டன் கலைக்கோட்டுத் தண்டனார்' எனவும் பெயர் பெற்றார்.

'நிகண்டன்' என்பது நிகண்டு நூல் செய்தமையால் ஏற்பட்ட பெயர் அன்று. 'நிர்க்கந்தன்' என்னும் வடசொல்லின் தமிழ் வடிவமே 'நிகண்டன்' ஆகும்[29]. 'நிர்க்கந்தன்' என்பதற்குக் கந்தம் (பற்று) இல்லாதவன், அருகன் என்று பொருள் உருவு, நுகர்ச்சி, குறிப்பு, பாவனை, உள்ளவறிவு ஆகிய ஐந்தும் கந்தம் ஆகும்[30]. இது, சைன சமயத்தின் இரு பிரிவுகளாகிய ஆசீவகம் (ஆசீவக வாதம்), நிகண்டம் (நிகண்ட வாதம்) ஆகியவற்றில் பின்னதைச் சார்ந்தது. இவ்விரு பிரிவுகளையும் மணிமேகலை குறிப்பிடுகிறது[31]. ஈண்டு 'நிகண்டன்' என்பது நிகண்டவாதப் பிரிவைச் சார்ந்த சைனன் என்றே பொருள்படும்; நிகண்டு நூல் செய்தவன் எனப் பொருள்படாது. வையாபுரிப் பிள்ளை தமது சங்க இலக்கியப் பதிப்பில் சங்கப்

புலவர்களின் பெயர்களைப் பாகுபாடு செய்யுமிடத்துச் 'சமயத் தாற் பெயர் பெற்றவர்'[32] என்பதன் கீழ் இளம் போதியார், உலோச்சனார், நிகண்டன் கலைக் கோட்டுத் தண்டனார் ஆகி யோரைச் சுட்டியுள்ளமை இங்குக் குறிக்கத்தக்கது. இம் மூன்று புலவர்களுள் முன்னவர் பௌத்தத்தையும் ஏனைய இருவரும் சைனத்தையும் சார்ந்தவர்கள்[33]. எனவே, நிகண்டு நூல் செய் தமையால் நிகண்டன் என்று பெயர் அமைந்தது என்னும் கருத்து ஏற்புடைத்து அன்று என்றும், அருக சமயத்துள் நிகண் டவாதப் பிரிவினைச் சார்ந்தமையால் 'நிகண்டன்' என்னும் பெயர் அமைந்தது என்றும் கருதத் தோன்றுகிறது.

முற்காலத்துச் 'சமதண்டம்' என்னும் பெயருள்ள ஓர் ஊர் இருந்ததாகவும் ஆசீவக மதம் அவ் ஊரில் பரவியிருந்ததாகவும் தெரிகிறது[34]. சமதண்டம் போலக் கலைக்கோட்டுத் தண்டம் என்பது ஓர் ஊரின் பெயராக இருக்கலாம்[35]. இவ் வூரில்நிகண்ட மதம் பரவியிருந்திருக்கலாம். நற்றிணைப் புலவரை இவ்வூரின ராகக் கருதலாம். பிறந்த ஊரின் பெயராலும் சார்ந்த சமயப் பிரிவின் பெயராலும் 'நிகண்டன் கலைக் கோட்டுத் தண்ட னார்' என்னும் பெயர் அமைந்தது எனத் துணியலாம். இப்புல வருக்கும் நிகண்டுத் துறைக்கும் தொடர்பில்லை என்று தெரிய வருகிறது.

**நிகண்டு நூல், கலைக்கோட்டுத் தண்டு**

இறையனார் அகப் பொருள் என்னும் களவியல் உரையில் நூல் பெயர் பெறும் முறைகளை விளக்குமிடத்து 'இடுகுறியாற் பெயர் பெற்றன நிகண்டு நூல், கலைக் கோட்டுத் தண்டு என இவை' எனக் குறிக்கப் பெறுகிறது[36]. இவை என்ற பன்மை யால் குறிக்கப்படும் நூல்கள் ஒன்றுக்கும் மேற்பட்டவை என் பது தெளிவாகிறது. நமசிவாயமுதலியாரது களவியல் உரைப் பதிப்பில் நிகண்டு, நூல, கலைக் கோட்டுத் தண்டு என நிறுத் தக் குறிகள் பெய்து மூன்றாகச் சுட்டப்பட்டுள்ளது.

**முதனூல் கருத்தன் அளவு மிகுதி**
**பொருள் செய்வித்தோன் தன்மை முதல்நிமித்தினும்**
**இடுகுறியானும் நூற்கு எய்தும் பெயரே**

என்னும் நன்னூல் பாயிரப் பகுதிக்கு உரை வகுத்த மயிலை நாதரும் சங்கர நமச்சிவாயரும் 'இடுகுறியாற் பெயர் பெற்றன நிகண்டு (நூல்), கலைக் கோட்டுத் தண்டு முதலாயின' என்று குறிப்பிட்டுள்ளனர். இவர்களது உரையால் குறிக்கப்பெறும் நூலகள் இரண்டு மட்டுமே என்பது தெளிவாகிறது. 'நிகண்

டன் கலைக்கோட்டுத் தண்டன்' என்ற பெயரை நோக்கிக் களவியல், நன்னூல் உரைகாரர்கள் இவ்வாறு கொள்கிறார்களா என்று அறிய இயலவில்லை.

'செய்தானாற் பெயர் பெற்றன அகத்தியம், தொல்காப்பியம் என இவை; செய்வித்தானாற் பெயர் பெற்றன சாதவாகனம், இளந்திரையம் என இவை; இடுகுறியாற் பெயர் பெற்றன நிகண்டு நூல், கலைக் கோட்டுத் தண்டு என இவை; அளவினாற் பெயர் பெற்றது பன்னிரு படலம் என்பது' என்று களவியல் உரை குறிக்கிறது[37]. இளந்திரையம், கலைக் கோட்டுத் தண்டு முதலிய பெயர்கள் தமிழ்ச் சொற்கள் ஆதலால் உடன் வரும் பெயர்களாகிய சாதவாகனம், நிகண்டு முதலியனவும் தமிழ் நூல்களையே குறிக்கின்றன எனக் கருதலாம். எனினும், நிகண்டு நூல், கலைக் கோடடுத் தண்டு என்பதற்கு விளக்கம் இல்லை. சொற்பொருள் கூறும் துறை நூல் என நாம் வழங்கும் 'நிகண்டு' என்பதுதான் ஈண்டுக் குறிக்கப்படுகிறது எனின் இது வடசொல். இடுகுறி என்பது பொருந்தாது[38]. எனவே, களவியல், நன்னூல், உரைகாரர்கள் இடுகுறியால் பெயர் பெற்ற நூல்களுக்குக் காட்டாகச் சுட்டும நிகண்டு நூல், கலைக் கோட்டுத் தண்டு குறித்துத் திட்டவட்டமாக ஏதும் அறிந்து கொள்ள இயலவில்லை.

**யாப்பருங்கல விருத்திக் குறிப்புகள்**

யாப்பருங்கல விருத்தியுரையில் இடம் பெறும் சில மேற்கோள்கள் நிகண்டு போல் தோன்றுகின்றன. இவற்றை இங்கே காணலாம்.

காரணக் குறியால் பெயர் பெறும் வெண்பாப் பெயர்களைக்,

> **குறள்சிந் தின்னிசை நேரிசை பஃறொடை**
> **எனவைந் தாகும் வெண்பாத் தானே** (58)

எனக் கூறும் யாப்பருங்கல நூற்பாவின் உரையில் 'நேர்' என்னும் சொல்லை விளக்குகையில்,

> **நேர் என்பது மாறாதற் கண்ணும், ஒத்தற் கண்ணும், தனிமைக் கண்ணும், மிகுதிக் கண்ணும், நுட்பத்தின் கண்ணும், சமனாதற் கண்ணும், உடம்படுதற் கண்ணும், பாதிக் கண்ணும், தலைப்பாட்டின் கண்ணும், நிலைப் பாட்டின் கண்ணும், கொடைக் கண்ணும் நிகழும்'**

என உரைகாரர் குறிக்கிறார்[39].

நேர் என்னும் சொல்லுக்கு 1. மாறாதல், 2. ஒத்தல், 3. தனிமை, 4. மிகுதி, 5. நுட்பம், 6. சமன், 7. உடம்படுதல், 8. பாதி, 9. தலைப்பாடு, 10. நிலைப்பாடு, 11. கொடை ஆகிய பதினொரு பொருள்களை யாப்பருங்கல விருத்தி உரை குறிப்பதோடு இவ்வனைத்திற்கும் பண்டை நூல் மேற்கோள்களையும் சுட்டியுள்ளது. இம்மேற்கோள்களுள் சிலவற்றின் இடம் விளங்கவில்லை. இப்பதினொரு பொருளும் ஏதேனும் ஒரு நிகண்டு நூலினின்றும் பெறப்பட்டவையாக இருக்கலாம். இதுவரை கிடைத்துள்ள எந்த ஒரு நிகண்டிலும் பதினொரு பொருள்கள் கூறப்படவில்லை. திவாகரத்தில்[40] 1. உடன்படல், 2. உவமை, 3. ஒத்தல், 4. நுட்பம், 5. சமன், 6. பாதி, 7. மிகுதி, 8. தலைப்பாடு, 9. தனிமை என ஒன்பது பொருள்களும், சூடாமணி நிகண்டில்[41] 1. சமம், 2. ஈதல், 3. பாதி, 4. நெடில், 5. உடன்பாடு, 6. நுட்பம் என ஆறு பொருள்களும் 'நேர்' என்னும் சொல்லுக்குக் குறிக்கப்பட்டுள்ளன. பிங்கல நிகண்டில் 'நேர்' இடம் பெறவில்லை. எனவே, யாப்பருங்கல விருத்தி உரையில் கூறப்படும் பதினொரு பொருள்களையும் சுட்டும் நிகண்டு ஒன்று இருந்திருக்கலாம் எனக் கருதத் தோன்றுகிறது.

யாப்பருங்கல விருத்தி உரைகாரர் திரிசொற்களுக்குக் காட்டுகள் தரும் நோக்கில்,

**பைஞ்ஞீலம் பைதிரம் விரற்றலை யோர்பித்தை**
**பூழிலவம் பீளைதுருவையனல் தொடுப்பகை பிறடி**
**கருவுள நவிரல் வசிதலையல் நிவப்பு**
**செப்பிய பிறவுந் திரிசொல் லாகும்**

என்பதனை மேற்கோள் காட்டுகிறார்[42]. பதினேழு திரிசொற்களைக் கூறும் இந்நூற்பாவின் மூலம் தெரியவில்லை. இது ஓர் இலக்கண நூலுக்கு உரியது போலத் தெரிகிறது. இது நிகண்டு நூலாகவும் இருக்கலாம்.

விலங்குகளின் ஆண், பெண் இளமைப் பெயர்களைக் கூறுமிடத்து யாப்பருங்கல விருத்தி உரைகாரர்[43],

**பெயரிவை மும்மையும் பிறவுமிப் பொருட்கண்**
**இயைபெதி ரியலு மென்றுணர்ந் தியையக்**
**குறியொடு காரணங் கொளவகுத் தொழிந்தது**
**அறிய உரைப்போன் ஆசிரி யன்னே**

என்னும நுற்பாவை மேற்கோள் காட்டுகிறார். இதன் மூலமும் தெரியவில்லை. விலங்குகளின் ஆண்,பெண் இளமைப்பெயர்கள் ஒரு நிகண்டிலிருந்து எடுத்தவை போலத் தோன்றுகின்றன.

கலிப்பா என்பதன் பொருளைக் கூறுமிடத்து யாப்பருங்கல விருத்தி உரைகாரர் பின்வரும் நூற்பாக்களை மேற்கோள் காட்டுகிறார்[44].

**கலித்தல் கன்றல் கனுறல் பம்மல்**
**எழுச்சியும் பொலிவும் எய்தும் பெயரே**

**கம்பலை சும்மை யழுங்கல் கலிமுழக்**
**கென்றிவை யெல்லாம் அரவப் பெயரே**

இந்த இரு நூற்பாக்களும் அமைப்பாலும் பொருளாலும் ஒரு நிகண்டுக்கு உரியனவாக இருக்கலாம் எனத் தெரிகிறது [45].

**பாரத வெண்பாக் குறிப்பு**

பெருந்தேவனார் தமது பாரத வெண்பாவில் படைத் திரட்சியும் படை வகுப்பும் கூறுமிடத்துத் தாமே செய்த உரை நடைப் பகுதியில் அக்குரோணி சேனையை உரைக்கும் நூற் பாக்களைக் காட்டுகிறார்.

**ஒரு பெருந் தேரும் இரு பெருங்களிறும்**
**துரகம் நான்கும் படைஞர் ஐவரும்**
**கொண்டது பதாதி யென்ப தாகும் ;**
**பதாதி முறைவழு வாமல்மும் மடங்கு**
**கொண்டது சேனை என்ப தாமே ;**
**ஆங்கது மும்முறை கொண்டது குன்மம்;**
**குன்மம் மும்முறை கொண்டது அனீகினி;**
**அனீகினி ஐம்பதிற் றிரட்டியொ டாயிரம்**
**கொண்டது அக்குரோணி யென்ன மொழிந்தான்,**
**மூவகை உலகமும் முறைப்பட வேத**
**பாரதம் பகர்ந்த பராசரன் மகனே**

**என்றிவ்வகை சொல்லப்பட்ட அக்குரோணியால் வந்த சங்கையினை யிவ் வாசிரியரிடத்துக் கண்டு கொள்வது**

எனப் பெருந்தேவனார் குறிககிறார். [46] இந்நூற்பாக்களில் முதல் மூன்று அடிகள் அப்படியே திவாகரத்தில் இடம் பெற் றுள்ளன [47]. பிறவற்றைத் திவாகரர் வேறு வகையாகக் குறிக் கிறார். மேலே காட்டிய மேற்கோள் நூற்பாக்கள் ஒரு நிகண்டுக்கு உரியனவாகத் தோன்றுகின்றன.

**இளம்பூரணர் உரைக் குறிப்பு**

**அன்ன பிறவும் கிளந்த அல்ல**

... ... ...

**ஓம்படை ஆணையின் கிளந்தவற் றியலான்**
**பாங்குற உணர்தல் என்மனார் புலவர்** (879)

என்னும் தொல்காப்பிய (உரியியல்) நூற்பாவின் உரையில் இளம்பூரணர்,

**''அருமை, இருமை, கருமை, சேண்மை''**
**என்னுந் தொடக்கத்தனவற்றைப் பிறநூலார்,**
**''இருமையும் பெருமையும் கருமையுஞ் செய்யும்'' என்றும்**
**''தொன்றென் கிளவி தொழிற்பயில் வாகும்''**
**என்றும் எடுத்தோதுப என்பதும் அது**

எனக் குறித்துள்ளார். இளம்பூரணர் உரையில் காட்டப் பெறும் இந் நூற்பாக்கள் நிகண்டு போல் தெரிகின்றன. ஒரு சொல் பல்பொருள தொகுதியின் பாற்படும் இவை இவருக்கு முற்பட்ட திவாகரம், பிங்கல நிகண்டுகளில் காணபபடவில்லை. எனவே, வேறு நிகண்டு(கள்) இருந்திருக்கலாம் எனக் கொள்ளலாம [48].

**திவாகர வெண்பா**

**வெட்சி நிரை கவர்தல் ; மீட்டல் கரந்தையாம்;**
**வட்கார் மேற் செல்வது வஞ்சியாம் ; — உட்காது**
**எதிரூன்றல் காஞ்சி ; எயில் காத்தல் நொச்சி ;**
**அது வளைத்தல் ஆகும் உழிஞை ; — அதிரப்**
**பொருவது தும்பையாம் ; போர்க்களத்து மிக்கார்**
**செருவென் றதுவாகை யாம்**

என்னும் புறத்திணைப் பிரிவுகளைக் கூறும் பஃறொடை வெண்பா, திவாகரம்,[49] பிங்கல[50] நிகண்டுகளிலும் வீரசோழிய உரையிலும்[51] நச்சினார்க்கினியர் உரையிலும்[52] இடம் பெற்றுள்ளது. திவாகரம், முழுமையும் நூற்பாவால் இயன்ற நிகண்டு ஆகும். எனவே, இவ்வெண்பாவுக்கு முறையான இடம் திவாகரத்தில் இருக்க வாய்ப்பு இல்லை. அன்றியும், இவ் வெண்பா தவிர வேறு யாப்புடைய பாடல் ஏதும் திவாகரத்தில் இல்லை என்பதும் கருதத்தக்கது. ஆகவே, இவ் வெண்பா முன்னரே இருந்த ஒரு தனிப்பாடல் அல்லது வேறு ஒரு நிகண்டின் பகுதி என்றே எண்ணத் தோன்றுகிறது[53].

**எண்வகை மணம் கூறும் நூற்பா**

இறையனார் அகப்பொருள் உரையும்[54] தொல்காப்பிய இளம்பூரணமும்[55] எண்வகை மணத்தைச் சுட்டுகையில் பின் வரும் நூற்பாவை மேற்கோள் காட்டுகின்றன :

**அறநிலை ஒப்பு பொருள்கோள் தெய்வம்**
**யாழோர் கூட்டம் அரும்பொருள் வினையே**
**இராக்கதம் பேய்நிலை என்றிக் கூறிய**
**மறையோர் மன்றல் எட்டவை ; அவற்றுள்**
**துறையமை நல்யாழ்த் துணைமையோர் புணர்ப்பிதன்**
**பொருண்மை என்மனார் புலமை யோரே.**

இந் நூற்பாவில் மணங்கள் எட்டனுள் இராக்கதம், தெய்வம் தவிர ஏனைய ஆறும் தமிழ்ப் பெயர்களால் குறிக்கப்படுகின்றன. களவியல் உரை இந்நூற்பாவைக் காட்டினாலும் விளக்கம் வரையும் இடத்து, பிரமம், பிரசாபத்தியம், ஆரிடம், தெய்வம், காந்தருவம், அசுரம், இராக்கதம், பைசாசம் என வடமொழிப் பெயர்களால் விளக்கம் தந்து, உடன் தமிழ்ப் பெயர்களையும் தருகிறது. இளம்பூரணமும் வடமொழிப் பெயர்களைச் சுட்டி விளக்கம் அளித்துப் பின்னர் மேற்குறித்த நூற்பாவைச் சுட்டி 'என்பதனானும் கொள்க' எனக் குறிக்கிறது. திவாகரம் தமிழ்ப் பெயர்களை ஆளாமல் வடமொழிப் பெயர்களையே ஆள்கிறது. திவாகரத்திற்குச் சற்று முற்பட்டதாகக் கருதப் படும் தமிழ்நெறி விளக்கத்தில் இந்நூற்பா இடம்பெறவில்லை. எனினும், அறநிலை, ஒப்பு, பொருள்கோள், தெய்வம், அரும் பொருள் நிலை, வலிநிலை, பேய் நிலை, கந்திருவம் எனத் தெய்வம், கந்திருவம் நீங்கலாக ஏனைய மணங்கள் தமிழால் குறிக்கப்பட்டுள்ளன[56]. மேற்காட்டிய நூற்பாவைக் கருத்திற் கொண்டு இவ்வாறு தமிழ்நெறி விளக்கம் குறித்திருக்கலாம் எனக்கருதத் தோன்றுகிறது. இந்நூற்பா திவாகரத்திற்கும் முற் பட்ட ஒரு பழைய நிகண்டினதாக இருக்கலாம் எனத் தோன்று கிறது[57]. இடுகுறியால் பெயர் பெற்ற நூலுக்குக் காட்டாக 'நிகண்டை'ச் சுட்டும் களவியல் உரைகாரர் மேற்குறித்த நூற்பாவையும் தருவதால் இதுவும் அவர் காலத்துக்கு முற்பட்ட ஒரு நிகண்டு நூலுக்கு உரியதாகக் கொள்ளலாம். அவர் குறிக்கும் இடுகுறியில் பெயர் கொண்ட நிகண்டு இதுதான் என உறுதி செய்ய ஆதாரம் இல்லை; இதுவாகவும் இருக்கலாம். இதுகாறும் கூறிய நிகண்டுக் குறிப்புகளைத் தொகுத்து நோக்குகையில் களவியல் உரைகாரர் சுட்டும் நிகண்டு ஒன்று இருந்திருக்கலாம் எனக் கருதத் தோன்றுகிறது[58]. ஆனால் அது எது என்று உறுதியாக அறிய இயலவில்லை.

### திவ்வியப் பிரபந்த உரைக்குறிப்புகள்

திவ்வியப் பிரபந்தத்தின் பெரிய விரிவுரையில் சிலவிடங் களில்[59] சில நூற்பாக்கள் மேற்கோள் காட்டப்பட்டுள்ளன.

இவற்றின் அமைப்பை நோக்குகையில் இவையும் நிகண்டுக்கு உரியனவாகத் தெரிகின்றன. இவற்றின் மூலத்தையும் அறிய இயலவில்லை.

**நிகண்டுச் சுவடி**

சென்னை அரசினர் சுவடி நூலகத்தில் உள்ள நிகண்டுச் சுவடி ஒன்று ஆறு தொகுதிகளைக் கொண்டு விளங்குகிறது. ஆசிரியர், நூல் பெயர்கள தெரியாத இந்நிகண்டின் முதல் தொகுதியும் இறுதித் தொகுதிகளும் இல்லை. இது நூற்பா வினால் ஆனது[60].

**தொகுப்புரை**

இவ்வியலின் வாயிலாகப் பின்வருவன பெறப்படுகின்றன

1. அகராதியியலுக்கு அடிப்படையான மொழிப் பொருளியல் கூறுகள் சில தொல்காப்பியத்தில் அமைந்துள்ளன.
2. அகராதியியல் கூறுகளுள் சில தொல்காப்பியத்தில் உள்ளன.
3. நிகண்டுகளின் தோற்றத்திற்குத் தொல்காப்பியம் மூலமாக இருந்திருக்க வேண்டும்.
4. நிகண்டன் கலைக்கோட்டுத் தண்டனார் என்னும் புலவருக்கும் அகராதியியல் துறைக்கும் தொடர்பில்லை எனத் தெரிகிறது.
5. களவியல், நன்னூல் விருத்தி உரைகாரர்கள் இடுகுறியால் பெயர் பெற்ற நூல்களுக்குக் காட்டாகச் சுட்டும் நிகண்டு நூல், கலைக்கோட்டுத் தண்டு என்பதற்கு விளக்கம் தெரியவில்லை.
6. வரலாறு தெரியாத பற்பல நிகண்டுக் குறிப்புகள் உள்ளன.

# நிகண்டுக் காலம்

தொல்காப்பிய உவமவியல் பிற்கால அணியிலக்கணக் கலைக்குத் தளமானதைப் போல உரியியல் முதலிய சொற் பொருள் விளக்கும் இயல்கள் சொற்பொருள் கூறும் துறை நூல்களாகிய நிகண்டுகளுக்குக் களமாயின. இந்நிகண்டுகளின் வளர்ச்சி வரலாறு இங்கு ஆய்வுக்கு உரியதாகிறது.

**நிகண்டுகளின் தோற்றம்**

தொல்காப்பியரது காலத்திற்குப் பின் தமிழ் இலக்கியப் படைப்பும் பரப்பும் விரிந்தன. சமயத்தைப் பரப்பும் நோக்கில் நூல்கள் மிகுந்தன. பல்வேறு சமயங்கள் தத்தம் சிறப்பினை நிறுவப் போராடின. வடமொழியின் செல்வாக்கும் தமிழில் மிகுதியாகப் படியத் தொடங்கியது. தமிழ் மக்களின் பண்பாடு, மொழி இவற்றில் மாற்றங்கள் ஏற்பட்டன. தமிழ் மொழியின் சொற்றொகை பெருகியது. இந்தச் சூழலில் நிகண்டுகள் போன்ற கருவி நூல்கள் தேவையானவை ஆயின[1].

சொற்களுக்குப் பொருள் கொள்வதிலும், அவற்றிற்கு இலக்கணத்தைத் தழுவி வடிவங்களை அமைத்துக் கொள்வதிலும், சில இலக்கிய மரபுகளைக் கையாள்வதிலும் சங்க காலப் புலவர்கள் ஏறத்தாழ ஒரே மாதிரியான இலக்கிய நடையையும் செயல் முறையையும் கையாண்டனர். இந்த நிலைமை கி. பி. 6 ஆம் நூற்றாண்டு வரை நீடித்தது. இதற்கு அடுத்த நூற்றாண்டில் ஆழ்வார்களாலும் நாயன்மார்களாலும் சமயஇலக்கியம் ஆக்கம் பெற்றது. இவர்கள் பத்திச் சுவைப் பாடல்களை இசைத் தமிழாக இயற்றினார்கள். இவர்களுடைய செய்யுள் நடை, கவிதைப் பண்பு, சொற்களின் தன்மை, வடிவம், சொற்றொடர் அமைப்பு முதலியன சங்கத் தமிழினின்றும் பெரிதும் வேறுபட்டிருந்தன. இந்த நிலைமையில் பண்டைத் தமிழ் இலக்கியத்தில் வழங்கி வந்த பல சொற்களுக்கும் வழக்குகளுக்கும் பொருள் தெரிந்து கொள்வது கூடப் பிற்காலப் புலவர்களுக்கு அரிதாக இருந்திருக்கும். புலவர்களுக்கும்,இலக்கியப் பயிற்சியில்

ஈடுபட்டவர்களுக்கும் பண்டைக்கால நூல்களையும் படித்துச் சுவைப்பதற்கு உதவும் கருவி தேவைப்பட்டது. இத்தகு உதவியைப் புரியும் கருவிகளாகத்தான் நிகண்டுகள் தோன்றின என்று சொல்லலாம்[2].

**நிகண்டு-விளக்கம்**

'நிகண்டாவது இச்சொற்குஇதுவே பொருளென்றுசொற்கும் பொருட்கும் உள்ள ஆற்றலாகிய நியமம் அறிவிக்கும் நூல்'[3]. இது இலக்கணம் போன்றதொரு கருவி நூல். 'நிகண்டு' என்னும் சொல்லுக்குக் கூட்டம், அல்லது தொகுதி என்பது பொருள்[4]. சொற்கள் தொகுதியாக-கூட்டமாக - அமைக்கப்பட்டுப் பொருள் விளக்கப்பட்டிருத்தலால் நிகண்டு என்னும் பெயர் பெற்றது[5].

மந்திரங்களாகவும் பிரமாணங்களாகவும் (Prayers and explanations) விளங்கும் நால்வகை வேதங்களும் சுருதிகளாக -வாய்மொழி மரபு வழியாக-வழங்கி வந்தன. இந்த வேதங்களை முறையாக ஒலிக்கவும், அறிந்து கொள்ளவும், வழிபாடுகளில் பின்பற்றவும் துணையாக ஆறு கருவி நூல்கள் எழுந்தன. இவை வேதாங்கங்கள் எனப்படும்[6]. இவை வருமாறு: (1) சிட்சை (Siksa 'phonetic directory'), 2. சந்தசு (Chandas 'metre'), 3. நிருத்தம (Nirukta 'etymological explanation') 4. வியாகரணம் (Vyakarana 'grammar') 5. கற்பம் (Kalpa 'ceremonial directory'), 6. சோதிடம் (Jyotisa 'astronomy'). இந்த ஆறு வகையான நூல்களும் தனித்தனி நோக்கத்துடன் தோன்றியவைகளாக இருந்தாலும் நால்வகை வேதங்களுக்கும் உதவுவதால் வேதாங்கம் என்று கொள்ளப்படுகின்றன[7].

வேதச் சொற்களின் பொருளை ஆராயும் துறை நிருத்தம் எனப்படும். இந்த நிருத்தத்தின் ஒரு பகுதி நிகண்டு ஆகும். நிருத்த நூல்களைப் பல முனிவர்கள் இயற்றியதால் பல நிகண்டு நூல்களும் அவரவர் நூலிற்கு அங்கமாய்த் தொகுக்கப்பட்டிருந்தன. இப்போது நிலைத்திருக்கும் நிருத்தம் யாஸ்கர் இயற்றியது ஆகும். இது கி. மு. 700 க்கு முன் இயற்றப்பட்டது[8]. இவரது நிருத்தம் மூன்று காண்டங்களை உடையது: 1. நைகண்டுகம், 2 நைகமம், 3. தைவதம். இம் மூன்று சொற்களும் முறையே நிகண்டு, நிகமம், தெய்வம் என்னும் சொற்களிலிருந்து வந்தவை[9]. நிருத்தத்தின் முதல் காண்டமாகிய நைகண்டுகம், பூமி, பொன், காற்று முதலிய பொதுப் பெயரின் கீழ் இவை தொடர்பான ஒருபொருள பல்பெயர்களைத் தொகுத்துத் தரும். இரண்டாவது காண்டமாகிய நைகமம்

ஒரு பெயர்ப் பல்பொருளைக் கூறும் பகுதியாகும். மூன்றாவது காண்டமாகிய தைவதம் வைதிக தேவதைகள் பற்றியதாகும். வேத அருஞ்சொற்களுக்குப் பொருள் விளக்கும் யாஸ்கரது நிருத்தமே வடமொழி அகராதியியலின் தோற்றுவாய் எனலாம். பின்னர் எழுந்த சொல்லுக்குப் பொருள் கூறும் தனி நூல்கள் 'நைகண்டுகம்' என்பதன் மூலச் சொல்லாகிய 'நிகண்டு' என்னும் பொதுப் பெயரால் வழங்கப்பட்டன. புராணம், பிரபந்தம் முதலிய பெயர்களைப் போல 'நிகண்டு' என்னும் வடமொழிப் பெயர் தமிழ் உலகில் பெருக வழங்கி நிலை பெற்றுவிட்டது. யாப்பு நெறியில் சொற்பொருள் கூறும் தமிழ் நூல்கள் 'நிகண்டு' என்னும் பொதுப் பெயரால் வழங்கப்படுகின்றன.

'நிகண்டு' என்பதனைத் தமிழ்ச் சொல் எனக் கொள்வோரும் உளர். '"நிகண்டு" என்னும் சொல்லின் பொருள் "உண்மை" எனவே தெரிகிறது. இதனை ஆய்ந்தால் "நிகழ்ந்தது" என்ற சொல் உலக வழக்கில் இவ்வாறு மருவித் திரிந்து வழங்கியதென்று கொள்வதே பொருத்தம ஆகும். நாட்டில் நிகழுஞ் சொற்களை இன்ன சொல்லுக்கு இன்ன பொருள், இன்ன பொருளுக்கு இன்ன பெயர் எனக் கண்டு அவ்வுண்மையை வரைந்த நூல்தான் நிகண்டு எனப் பெயர் பெற்றது போலும்' என்பர் சிலர்[10].

நிகண்டு என்பதனைத் தமிழ்ச்சொல் என நிறுவ மேற்குறித்தது தவிர வேறு ஒரு முயற்சியும் மேற்கொள்ளப்பட்டுள்ளது. 'நீளம் என்பதை நிகளம் எனவும் நீண்டது என்பதை நிகண்டது எனவும் பேச்சு வழக்கில் மக்கள் சிலர் சொல்வதைக் கேட்கலாம். நிகளம் என ஒருசார் செய்யுள் வழக்கும் உண்டு. இந்த வழக்குகளையொட்டிப் பார்க்குங்கால், நிகண்டு என்னும் சொல்லுக்கு, நீண்டது என்ற பொருள் கொள்ளலாம். சொற்களின் பட்டியல் நீளமாகத் தரப்பட்டிருத்தலின் - அஃதாவது—சொற்களின் பட்டியல் நிகண்டு (நீண்டு) கொண்டுபோதலின் 'நிகண்டு' என்னும் பெயர் கொடுக்கப்பட்டிருக்கலாம். நிகளுவது நிகண்டு' என்பர் சுந்தர சண்முகனார்[11].

கூட்டம் அல்லது தொகுதி எனப் பொருள்படும் நிகண்டு என்னும் வடசொல், புராணம், பிர்பந்தம் போன்ற சொற்களைப் போலத் தமிழில் காலூன்றி நிலைத்த சொல் எனக் கொள்வதே பொருத்தமாகத் தோன்றுகிறது. வடமொழியில் நிகண்டு மரபு நன்கு வளர்ந்ததற்குப்பிறகு இச்சொல்லின் செல்வாக்காலும் தாக்குரவாலும் இதனைத் தமிழ் உலகம்

ஏற்றுக் கொண்டிருக்கக் கூடும். 'நிகண்டு' என்பது தமிழ்ச் சொல் என நிறுவ முனைவது வலிந்து கோடலாகத் தோன்று கிறது.

**உரிச்சொல், உரிச்சொற்பனுவல் - ஆட்சி**

உரிச்சொல், உரிச்சொற் பனுவல் [12] என்னும் பொதுப் பெயரால் சொற்பொருள் கூறும் துறை நூல்கள் முதலில் வழங்கப்பட்டன. இவ்வாறு வழக்குகள் தோன்றத் தொல் காப்பியம் கால்கோள் கண்டது என்று கூறலாம். தமிழில் சொற்பொருள் விளக்கும் துறை முதன் முதலில் தொல்காப்பிய உரியியலில் காணப்படுகிறது. பிற்காலத்து எழுந்த சொற் பொருள் விளக்கும் நூல்கள் உரிச்சொற்களுக்கு மட்டுமன்றி எல்லாச் சொற்களுக்கும் பொருள் கூறியிருப்பினும் அவை உரிச் சொல் அல்லது உரிச்சொற் பனுவல் எனவே வழங்கப்பட்டன. வைதிகச் சொற்களுக்குப் பொருள் கூறும் நூல் முதலில் நிகண்டு என வழங்கப்பட்டது; பின்னர் எல்லாச் சொற்களுக்கும் பொருள் கூறும் நூலும் நிகண்டு என அழைக்கப்பட்டது. இவ்வாறே உரிச்சொற்களுக்கு மட்டுமன்றிப் பிற சொற் களுக்கும் பொருள் கூறும் நூலும் உரிச்சொல் அல்லது உரிச் சொற் பனுவல் என வழங்கப்பட்டது.

நன்னூல் பவணந்தியார்,

***இன்ன தின்னுழி இன்னண மியலும்***
***என்றிசை நூலுள் குணகுணிப் பெயர்கள்***
***சொல்லாம் பரத்தலிற் பிங்கலம் முதலா***
***நல்லோர் உரிச்சொலின் நயந்தனர் கொளலே*** (460)

என்று பிங்கலம் முதலிய நிகண்டுகளை 'உரிச்சொல்' என்னும் பொதுப்பெயரால் குறிக்கிறார். மேற்குறித்த நூற்பாவுக்கு உரை வகுத்த மயிலைநாதர்,

***அவை பிங்கல முதலான புலவர்களாற் செய்யப்பட்ட***
***உரிச்சொற்பனுவல்களுள் விரும்பி அறிந்து கொள்க***

எனக் குறிப்பிடுகிறார். எனவே 'உரிச்சொற் பனுவல்' என்னும் பொதுப்பெயரும் பிங்கலம் முதலிய நிகண்டுகளைக் குறிக்க வழங்கி வந்தது என்பது தெளிவு.

நன்னூலார்,

***எப்பொரு ளெச்சொலி னெவ்வா றுயர்ந்தோர்***
***செப்பின ரப்படிச் செப்புதல் மரபே*** (388)

என்று வகுத்த நூற்பாவுக்கு உரை எழுதிய மயிலைநாதர்,

**...விரிந்த உரிச்சொற் பனுவல்களுள்ளும்**
**உரைத்தவாறு அறிந்து வழங்குக**

என்று உரிச்சொற் பனுவலைக் குறிக்கிறார்.

தொல்காப்பியர் 'உரிச்சொற் கிளவி விரிக்குங் காலை' என உரியியலைத் தொடங்குகிறார். இதே நெறியில் பிங்கல நிகண்டின் சிறப்புப்பாயிரம்[13],

**பிங்கல முனிவன் எனத்தன் பெயர் நிறீஇ**
**உரிச்சொற் கிளவி விரிக்குங் காலை**

என்று கூறுகிறது. ஈண்டும் 'உரிச்சொல்' என்னும் வழக்கு இடம் பெறுகிறது.

கயாதர நிகண்டின் பாயிரப் பகுதியில்,

**... ... ... தேசைக் கெயாதரன்றொல்**
**வேதியன் சொற்ற உரிச்சொற் பனுவலு மேம்படுமே (2)**

என்றும்,

**...உரிச்சொற் கிளர்பனுவல் (4)**

என்றும், நூலின் இறுதியில்,

**விரும்பிய கோவை யுரிச்சொற் பனுவல் விரித்துரைத்தான்**
**பெரும்பொருள் கண்ட கெயாதரன் தேவைப் பெருந்தகையே**
**(566)**

என்றும் உரிச்சொற் பனுவல் என்னும் வழக்காறு குறிக்கப் பட்டுள்ளது.

காங்கேயர் தாமியற்றிய நிகண்டுக்கு 'உரிச்சொல்' என்றே பெயர் வைத்துள்ளார். இதனை,

**உத்தம சீலத்துக் காங்கேயன் சொன்ன உரிச்சொல்**

என்னும் பாடற் பகுதியால் அறியலாம்[14].

பாண்ட மங்கை திருக்கோட்டியூர் நம்பிகள் தமது சூடாமணி உள்ளமுடையான் என்னும் சோதிட நூலில் நட்சத்திரங்களின் பெயர்களைச் செய்யுளால் பாடியுள்ளார். இதற்கு 'நாளுரிச்சொல்' என்றும் இதற்கு அடுத்த பகுதிக்குக் 'கிழமை உரிச்சொல்' என்றும், பெயர் தந்துளளார். இந்த 'நாளுரிச் சொல்' என்னும் பகுதியில் உள்ள நட்சத்திரங்களின் பெயர்கள் பெரும்பான்மையும் நிகண்டுகளை ஒத்திருக்கின்றன என்பது குறிப்பிடத்தக்கது[15].

மேற்குறித்தவற்றால் நிகண்டு நூலைக் குறிக்க உரிச்சொல், உரிச்சொற் பனுவல் என்னும் ஆட்சிகள் வழக்கில் இருந்தன என்பது தெளிவாகும்.

**நிகண்டு - ஆட்சி**

உரிச்சொல், உரிச்சொற் பனுவல் என்னும வழக்குகள் வீழ்ந்து யாப்பில் சொற்பொருள் கூறும் நூலை 'நிகண்டு' என்னும் பொதுப்பெயரால் வழங்கும் வழக்கே இப்போது உள்ளது. 'நிகண்டு' என்னும் வழக்கு தமிழ்ப்பரப்பில் முதன் முதல் இறையனார் அகப்பொருள் உரையில்[16] இடுகுறியால் நூல் பெயர் பெறும் முறைக்குக் காட்டுகள் குறிக்குமிடத்துத் தான் காணப்படுகிறது. இங்கும் 'நிகண்டு' என்பது விளங் காததாக உள்ளது. களவியல் கருத்தையே நன்னூல் விருத்தி யுரைகாரர்களும் எதிரொலித்துள்ளனர். திவாகரம், பிங்கலம் இரண்டிலும் ஆறங்க வகைப் பெயர் கூறுமிடத்து 'நிகண்டு' என்னும் சொல் குறிக்கப்பட்டுள்ளது[18]. ஆறங்க வகையுள் 'நிகண்டு' அடங்காது. எனவே, இது பிழை வழக்கு என்பர்[19]. 'நிகண்டு' என்னும் வழக்கு சொற்பொருள் கூறும் நூலுக்கு முதன்முதல் அமைந்தது மண்டல புருடர் இயற்றிய சூடாமணி நிகண்டு வழியாக என்று தெரிகிறது. அதற்கு முன் சொற் பொருள் கூறும் நூல்கள் உரிச்சொல், உரிச்சொற் பனுவல் என வழங்கப்பட்டன. சூடாமணி நிகண்டின் காலம் 16ஆம் நூற்றாண்டு ஆகும்[20]. இதன் பாயிரப் பகுதியில்,

**மன்னிய நிகண்டு சூடா மணியென ஒன்று சொல்வன்**

என 'நிகண்டு' குறிக்கப்படுகிறது. காங்கேயரது உரிச் சொல்லை அச்சில் பதிக்குங்கால் 'உரிச்சொல் நிகண்டு' என்று மகுடம் சூட்டி உரிச்சொல், நிகண்டு என்னும் இரண்டு வழக்கு களையும் இணைத்துள்ளனர். சிதம்பர ரேவண சித்தர்,

**...அகராதி நிகண்டென**
**ஓதினன்... ... ...**

எனவும்,

**'தெரிதரு பிங்கலம் திவாகரம் முதலாம்**
**பரவிய நிகண்டு பலஎடுத் தாராய்ந்து**

எனவும் தமது நிகண்டின் பாயிரத்தில் கூறுகிறார். சங்கர நமச்சிவாயர் தமது நன்னூல் (நூற்பா 460) உரையில் 'நிகண்டு', என்பதனைச் சுட்டியுள்ளார். தொண்டை மண்டல சதகம்,

**... நிகண்டு சூடாமணி தானுரைத்த மண்டலவன்**

எனக் குறிக்கிறது.

**முந்துள திவாகரம் பிங்கல நிகண்டு சீர்**
**முந்து காங்கயன் உரிச்சொல்**
**முறைபெறு கயாதரம் பகரும்அக ராதியிவை**
**முற்றும் ஒன்றாய்த் திரட்**

என ஆசிரிய நிகண்டு கூறுகிறது. நாமதீப நிகண்டுடையார்,

**பல்லாயிர நிகண்டில் பண்டி தர்கள் சொன்ன பொருள்**

எனப் பேசுகிறார். ஆசிரிய நிகண்டு, நாபதீப நிகண்டு என நூற்பெயரிலும் நிகண்டு என்னும் ஆட்சி பரவியது. இவ்வாறு சூடாமணி நிகண்டுக்குப் பின்னர் '**நிகண்டு**' என்னும் வழக்கு தமிழ் உலகில் பெருக வழங்கி நிலைபெற்று விட்டது.

## நிகண்டுகளின் பொது அமைப்பு

இன்றுள்ள நிகண்டு நூல்களுள் திவாகரமே பழைமை யானது. இந்த நிகண்டின் அமைப்பு முறையே பிற்கால நிகண்டுகளுக்கு எல்லாம் மூல அளவையாய் அமைந்து நிற்கிறது[21]. இந்நிகண்டு பின்வரும் பன்னிரு தொகுதிகளைக் கொண்டது: (1) தெய்வப் பெயர், (2) மக்கட் பெயர், (3) விலங்கின் பெயர், (4) மரப்பெயர், (5) இடப் பெயர், (6) பல்பொருட் பெயர், (7) செயற்கை வடிவப் பெயர், (8) பண்புப் பெயர், (9) செயல் பற்றிய பெயர், (10) ஒலி பற்றிய பெயர், (11) ஒரு சொல் பல்பொருட் பெயர், (12) பல்பொருள் கூட்டத்து ஒரு பெயர்.

தெய்வப் பெயரில் சிவன், திருமால் முதலிய தெய்வப் பெயர்களும், நாள், கோள்களின் பெயர், காலப் பெயர், பருவப் பெயர், மழை, மேகம் முதலியவற்றின் பெயர்களும் இடம் பெறுகின்றன. மக்கட்பெயரில் அருந்தவர், அறிஞர், அரசர், பரிவாரங்கள், தொழிலாளர், கீழ்மக்கள், பெண்டிர், நானில மக்கள், உறவினர், படைகள், உடல் உறுப்புகள் முதலியன விளக்கம் பெறுகின்றன. விலங்கின் பெயரில் விலங்கு, பறவை, ஊர்வன, நீர் வாழ்வன, இவற்றின் உறுப்புப் பெயர் முதலியன குறிக்கப் பெறுகின்றன. மரப்பெயரில் மரம், செடி, கொடி, பூ, காய், கனி, தானிய வகை முதலியன கூறப்படுகின்றன. இடப் பெயரில் உலகம், நாடு, ஊர், மனை, மலை, ஆறு, நீர் நிலை ஆகியன சுட்டப்படுகின்றன. பல்பொருட் பெயரில் பொன், மணி, விரைப் பொருள், உணவு வகை ஆகியன பேசப் படுகின்றன. செயற்கை வடிவப் பெயரில் போர்க்கருவிகள், அணிகலன் வகை, உடை வகை, ஊர்தி வகை, விளையாட்டுக்

கருவிகள் முதலியன அடங்குகின்றன. பண்பு பற்றிய பெயரில் காட்சிப் பொருள், உணர்விற்குப் புலப்படும் உண்மைப் பொருள், இவற்றின் குணத் தொடர்பு பற்றிய பெயர்கள் சேர்ந்துள்ளன. செயல் பற்றிய பெயர்த் தொகுதியில் வினைப் பெயர்கள் பலவும் பொருள் பெறுகின்றன. ஒலி பற்றிய பெயர்த் தொகுதியில் சொல்வகை, பாவகை, யாழ் வகை, இசை வகைமுதலியன குறித்த பெயர்களைக் காணலாம். இந்தப் பத்துத் தொகுதிகளும் ஒரு தொகுதி நீர்மையதாய் ஒருபொருட் பல்பெயர்த் தொகுதி (Synonyms) எனப்படும். பதினோராம் தொகுதியில் ஒரு சொல்லுக்குரிய பொருள்கள் எல்லாம் விரித் துரைக்கப்பட்டுள்ளன. இது ஒருசொற் பல்பொருட் பெயர்த் தொகுதி omonyms ) எனப்படும். முதல் பத்துத் தொகுதி களிலும் வெவ்வேறு இடங்களில் குறிக்கப் பெற்ற பொருள் களின் திரட்சியாகப் பதினோராம் தொகுதியில் ஒரு சொல்லுக் குரிய பல பொருள்களும் கூறப்பட்டுள்ளன காட்டாக, 'அம்பரம்' என்னும் சொல்லைக் காணலாம். இச்சொல்லிற்குப் பதினோராம் தொகுதியில் (ப.243), 1. கூறை, 2. கடல், 3.ஆகாயம் எனப் பல பொருள்கள் கூறப்பட்டுள்ளன. செயற்கை வடிவப் பெயர்த் தொகுதியில் (பக்.162-163) கூறையைக் குறிக்கும் பல பெயர்களுள் 'அம்பரம்' இடம் பெற்றுள்ளது. இடப்பெயர்த் தொகுதியில் (ப.103) கடலின் பெயர்களைக் கூறுமிடத்து அம்பரம்குறிக்கப் பெற்றுள்ளது. இவ்வாறே தெய்வப் பெயர்த் தொகுதியில் ஆகாயத்தின் பெயர் களைச் சுட்டும் இடத்தில்(ப.9)'அம்பரம்' இடம் பெற்றுள்ளது. பன்னிரண்டாம் தொகுதி இருவினை, முப்பொறி போன்ற தொகைப் பெயர்களை விளக்கும். இது பல்பொருள் கூட்டத்து ஒரு பெயர்த் தொகுதி எனப்படும்.

மேற்குறித்த முப்பெரும் தொகுதிகளுள் மூன்றாவதாகிய பல்பொருள் கூட்டத்து ஒருபெயர்த் தொகுதி தமிழுக்கும் வடமொழிக்கும் உரியது. நடுவணதாகிய ஒரு சொல் பல் பொருள் பெயர்த் தொகுதி இன்றைய அகராதி போன்றது.[22] ஒரு சொல்லுக்குரிய பல பொருள்களையும் இப்பகுதி விளக்கு வதாலும் ஒருபொருள் பல்பெயர்த் தொகுதியின் அடைவாக விளங்குவதாலும் ஏனைய தொகுதிகளைக் காட்டிலும் மிகு தியாக இதனை மனப்பாடம் செய்யும் பழக்கம் இருந்தது. எனவேதான், இப்பகுதியினைப் பலரும் பலவாறாகச் செப்பம் செய்ய முனைந்தனர். இதனைப் பின்னர்க் காணலாம். எஞ்சிய ஒரு பொருள் பல்பெயர்த் தொகுதி ஆங்கிலத்தில் வழங்கும் சொற்கருவூலம் (Thesaurus) போன்றதாகும்.

அமைப்பு மொழியியலார் (Structuralists) ஒரு மொழியின் சொற்றொகையினைப் பல்வேறு பொருட்புலங்களாகப் (Semantic/conceptual fields) பகுக்க முடியும் என்று கண்டுள்ளனர். ஒருபொருள் அல்லது கருத்துடன் பொருந்தக் கூடிய அல்லது தொடர்பு கொண்ட சொற்களை எல்லாம் வெவ்வேறு பொருட்புலங்களாகப் பகுக்கலாம். காட்டாக, கிளி, காகம், புறா முதலிய சொற்களைப் 'பறவை' என்னும் பொருட்புலத்தின் கீழ் வகைப்படுத்தலாம். பீட்டர் மார்க் ரோஜெட் என்பவர் 1852இல் இவ்வாறு பொருட்புலப் பாகுபாடு கொண்ட சொற்கருவூலத்தைத் தொகுத்து வெளியிட்டார். இத்தகு கருவூலங்கள் பொருட்புல அகராதி (Syatematic/conceptual dictionary) எனப்படும். தமிழ் நிகண்டுகளில் தெய்வம், மக்கள், விலங்கு, மரம் முதலிய பத்துத் தொகுதிகளையும் கொண்ட ஒருபொருள் பல்பெயர்த் தொகுதி இத்தகு பொருட்புலப் பாகுபாட்டைக் கொண்டது ஆகும்[23].

திவாகரப் பாகுபாட்டினை அடியொற்றியே பிங்கலம், சூடாமணி நிகண்டு, உரிச்சொல், கயாதரம் முதலிய நிகண்டு களும் அமைந்தன. திவாகரம் ஒவ்வொரு பெயர்ப் பாகு பாட்டையும் 'தொகுதி' எனக் கூற, 'வகை' என்று பிங்கலமும் 'இயல்' என்று கயாதரமும் 'வர்க்கம்' என்று நாமதீபமும் கூறுகின்றன. பிங்கலம், சூடாமணி முதலிய சில நிகண்டுகளில் சில தொகுதிப் பெயர்கள் ஒன்றுடன் ஒன்று இணைத்து வகைப்படுத்தப் பட்டிருப்பினும் பொது அமைப்பில் திவாகரர் வகுத்த முறையில் மாறுதல் இல்லை (இணைப்பு - 5 காண்க). நாமதீப நிகண்டு சொற்களை நான்கு படலமாக - பிரிவாக - வகைப்படுத்தியுள்ளது: 1. உயர்திணைப் படலம், 2. அஃறிணை உயிர்ப் பொருட்படலம், 3. அஃறிணை உயிரில் பொருட்படலம் 4. குணநாமப்படலம். இப்படலம் ஒவ்வொன்றும் பல வர்க்கங்களை - உட் பிரிவுகளை - உடையது. அவை வருமாறு:

**1. உயிர்திணைப் படலம்**

1.1. தெய்வ வர்க்கம்
1.2. மானிட வர்க்கம்

**2. அஃறிணை உயிர் பொருட்படலம்**

2.1. நாற்கால் உயிர்ப்பொருள் வர்க்கம்
2.2. பறவை உயிர்ப்பொருள் வர்க்கம்
2.3. ஊர் உயிர்ப் பொருள் வர்க்கம்

2.4. நீர்வாழ் உயிர்ப்பொருள் வர்க்கம்
2.5. தாவர உயிர்ப்பொருள் வர்க்கம்

**3. அறிஃணை உயிரில் பொருட்படலம்**

3.1. இயற்கைப் பொருள் வர்க்கம்
3.2. செயற்கைப் பொருள் வர்க்கம்
3.3. இட வர்க்கம்
3.4. கால வர்க்கம்
3.5. சினை வர்க்கம்

**4. குண நாமப்படலம்**

4.1. உயிர்ப் பொருள்: மனக் குணவர்க்கம்
4.2. உயிர்ப் பொருள்: வாக்குக் குணவர்க்கம்
4.3. உயிர்ப் பொருள்: செயற் குணவர்க்கம்
4.4. உயிரில் பொருட்குணவர்க்கம்

மேற்குறித்த வர்க்கங்களுள் 1.1., 1. 2. ஆகியவை முறையே திவாகரத்தில் தெய்வப் பெயர், மக்கட் பெயர்த் தொகுதி களாகும்.2.1., 2.2.,2.3.,2.4.ஆகியவை திவாகரத்தில் விலங்கின் பெயர்த் தொகுதியாகவும், 2. 5. மரப்பெயர்த் தொகுதி யாகவும் அமைவன. 3. 1. திவாகரத்தில் பல்பொருட் பெயர்த் தொகுதியாகவும், 3. 2. செயற்கை வடிவப் பெயர்த் தொகுதியாவும், 3. 3. இடப் பெயர்த் தொகுதியாகவும் விளங்குவன. 3. 4. காலப் பொருள்கள் தெய்வ அம்சம் என்பதனால் திவாகரத்தில் தெய்வப் பெயர்த் தொகுதியில் கூறப்பட்டன[24]. 3. 5. உறுப்புகளைக் கூறுவது. திவாகரத்தில் மக்கள், விலங்கு முதலியவற்றின் உறுப்புகளாகச் சொல்லிய பகுதிகளைத்தனியே எடுத்து நாமதீபம் அமைத்துள்ளது [25]. 4.1., 4.2., 4.3. ஆகியவை திவாகரத்தில் முறையே பண்பு, ஒலி, செயல் பற்றிய பெயர்த் தொகுதிகளாக இருப்பன. 4.4. என்பது முன் தொகுதிகளில் பண்பு முதலியவற்றில் சொல்லாது நின்றனவற்றைத் தொகுத்ததாகும் [26].

நிகண்டுகளின் முப்பெரும் பிரிவுகளாகிய ஒருபொருள் பல்பெயர்த் தொகுதி, ஒருசொல் பல்பொருள் பெயர்த் தொகுதி, பல்பொருள் கூட்டத்து ஒருபெயர்த் தொகுதி ஆகிய மூன்றையும் பெற்றுத் திவாகரம் போலப் பூரண நிகண்டாகச் சூடாமணி நிகண்டு, உரிச்சொல் நிகண்டு, பாரதி தீபம்

முதலியன விளங்குகின்றன. மூவகைப் பிரிவுகளுள் முதற் பிரிவை மட்டும் உசித சூடாமணி, நாமதீபம், அபிதானத் தனிச்செய்யுள் நிகண்டு முதலியன கொண்டுள்ளன. இரண்டாம் பிரிவை மட்டும் அகராதி நிகண்டு, அரும்பொருள் விளக்க நிகண்டு, வேதகிரியார் சூடாமணி நிகண்டு, நாநார்த்த தீபிகை, சிந்தாமணி நிகண்டு, விரிவு நிகண்டு ஆகியன கொண்டுள்ளன; மூன்றாவது பிரிவை மட்டும் தொகை நிகண்டு, பொருள் தொகை நிகண்டு, தொகைப் பெயர் விளக்கம், இலக்கத் திறவுகோல் முதலியன உடையன; பிங்கலம், கயாதரம், கைலாச நிகண்டு சூடாமணி, ஆசிரிய நிகண்டு, பொதிகை நிகண்டு, கந்த சுவாமியம் ஆகியவை முதலிரு பிரிவுகளை மட்டும் கொண்டவை. இறுதி இரு பிரிவுகளை மட்டும் கொண்டு பல்பொருள் சூடாமணி நிகண்டு அமைந்துள்ளது. முதல், இறுதிப் பிரிவுகளை மட்டும் கொண்ட நிகண்டு ஏதும் இல்லை.

### நிகண்டுகளில் வினைச்சொற்கள் அமையும் முறை

இருதிணை ஐம்பால் மூவிடம் என்னும் பொருள்களில் வரும் வினைச்சொற்களையே இலக்கண நூல்கள் முதன்மையாகக் கொண்டு விளக்குகின்றன. வினைச்சொல்லுக்கே சிறப்பாக உரிய முக்காலங்களை உணர்த்தும் தன்மையினால் காலம் பற்றியும் வினை வேறுபாடு வகைப்படுத்தப்படுகிறது. முற்று வினைகள் மட்டுமன்றிப் பெயரெஞ்சு கிளவி, வினையெஞ்சு கிளவிகளும் வினைப் பகுதியில் விளக்கப்படுகின்றன. பொதுவாக வினையியலில், வினை பற்றிய இலக்கணம் கூறும் பகுதியில் 1. உயர்திணை வினை, 2. அறிஃறிணை வினை, 3. இருதிணைப் பொதுவினை, 4. வினையெஞ்சு கிளவி, 5. பெயரெஞ்சு கிளவி என்ற அடைவில் அமைத்துக் காட்டுகிறார் தொல்காப்பியர். காலம் பற்றித் தெரிநிலை, குறிப்பு என்னும் பாகுபாட்டை எல்லா வகை வினைகளிலும் காண்கிறோம்.

> **இருதிணை மருங்கின் ஐம்பால் அறிய**
> **ஈற்றில்நின் றிசைக்கும் பதினோ ரெழுத்தும்**
> **தோற்றந் தாமே வினையொடு வருமே** (493)

எனத் தொல்காப்பியர் பெயர், வினைகளின் ஈற்றில் உள்ள எழுத்துகளே இருதிணை ஐம்பாற் பொருளை உணர்த்தும் என்பர். எனவே, சொல்லின் முழுவடிவமே பொருள் விளக்கத்திற்கு ஏற்றது என்பது தெளிவாகிறது. வினைச்சொற்களைப்

பகுதி அளவானன்றி முழுமையாகக் கொண்டு பொருள் காண்பதே சிறந்த முறையென்று தோன்றுகிறது [27].

நிகண்டுகளில் ஒருபொருட் பல்பெயர்த் தொகுதிகளுள் ஒன்றாகிய செயல் பற்றிய பெயர்த் தொகுதியானது ஒரு பொருள் பற்றி வரும் வினைச்சொற்களை எல்லாம் தொழிற் பெயர் வடிவில் கொண்டுள்ளது. காட்டாக,

**துய்த்தல் அருந்தல் ஆர்தல் துவ்வுதல்**
**துற்றல் நுகர்தல் மாந்தல் அயிறல்**
**உண்டல் தின்றல் பருகுதல் இவையுணும்**
**பண்பிற் றொழிலைப் பகருங் கிளவி**

என்னும் திவாகர நூற்பாவைக் (ப.197) கொள்ளலாம். திவாகர முறையைப் பின்பற்றியே எல்லா நிகண்டுகளும் வினைச்சொற்களை அவற்றின் தொழிற்பெயர் வடிவில் விளக்குகின்றன.

**நிகண்டுகளும் யாப்பும்**

தொல்காப்பியத்தில்,

**செழுமை வளனும் கொழுப்பு மாகும்** (835)

**விழுமம் சீர்மையும் சிறப்பும் இடும்பையும்** (836)

போன்ற பொருள் சுட்டும் நூற்பாக்களின் பொருளமைதியும் எதுகை நயங்களுமே கால அடைவில் வளர்ச்சி அடைந்து நிகண்டுகளில் தனியே விளங்குவனவாயின.

**ஊரே யிடையூறும் உற்றறி புலனும்**
**நூறே பொடியும் நூறு மாகும்**

எனத் திவாகரத்தில் எதுகை நயம் மிளிரும்வண்ணம் திவாகரர் நூற்பாக்களை அமைத்தார். ஆனால், பிற்காலத்துப் படித்தோரும், பதிப்பித்தோரும் ஆதியிற் பொருள், அந்தத்துப் பொருள் என நூற்பாக்களைப் பகுத்தும் அகர நிரலில் அமைத்தும் ஆசிரியர் நெறியை முழுதும் மாற்றி விட்டனர். திவாகரத்தில் பதினோராம் தொகுதி தவிர மற்றவை அவ்வத் தொகுதிக்குரிய பொருட் பாகுபாட்டினைப் பின்பற்றி அமைந்துள்ளன. பதினோராம் தொகுதி பலவேறு பொருள்களையுடைய சொற்களை ஓதுவதால் அவ்வகைப் பாகுபாடு ஈண்டு இல்லை. இச்சொற்கள் நினைவில் பதிந்து நிலைக்கக் கூடிய ஒரு முறையில் அவற்றை அமைப்பதே தக்கதாகின்றது.

எனவே, எதுகை நயத்தோடு இத்தொகுதி நூற்பாக்கள் வகுக்கப்பட்டன எனக் கருதலாம்[28]. வேண்டும் சொற்களின் பொருள்களை எளிதில் நோக்கிக் கண்டு கொள்வதற்கும் இவ் வெதுகை நயம உதவும். பிங்கலந்தைப் பதிப்பிலும் ஆசிரியரது நெறியைப் பதிப்பாளர் மாற்றி விட்டார். எனினும், இதன் ஏட்டுச் சுவடியைக் கொண்டு, எதுகை நயம் பெற இதில் நூற்பாக்கள் இருப்பினும், பொருள் விளக்கப்பட வேண்டும் பல பொருட் சொற்கள் எதுகை நெறியில் அமைய வில்லை என அறிய முடிகிறது. எனவே இம்முறை பயனுடைய தாக இல்லை. இதனை எவரும் பின்பற்றவுமில்லை. வரன் முறையே நூல் முழுதும் கற்றுணராமல் வேண்டும்பொழுது எளிதிலேயே நோக்கியுணர்தற்குரிய ஒரு கருவியாய் நிகண்டு களை அமைக்கும் கருத்தே பிற்காலத்தில் பெரிதும் போற்றப் பட்டு வந்தது. பதினோராம் தொகுதியே இவ்வகையில் அமைவதற்கு மிக்க தகுதியுடையதாக இருந்தது[29]. மண்டல புருடரே தமது சூடாமணி நிகண்டு வாயிலாக எளிதில் நினைவிற் பதிக்கவும் எளிதில் நோக்கியுணரவும் துணைபுரியும் வகையில் முயன்றவர். திவாகரம், பிங்கல நிகண்டுகளில் எதுகை நயம் இருப்பினும் எதுகை மயக்கமும் எதுகைக் கலப்பும இருந்தன. ஒரே எதுகையில் உள்ள சொற்கள் அனைத்தையும் தொகுத்து ஒரே இடத்தில் தருவதன் இன்றிய மையாமையை அறிந்து 'ககர எதுகை' முதல் 'னகர எதுகை' ஈறாக எதுகை முறையில் பாகுபாடு செய்தார் மண்டல புருடர். இசையோடு கற்றற்கும் அதிகச் சொற்கள் அடங்குதற்கு முரிய விருத்தயாப்பினால் சூடாமணி இயற்றப்பட்டது. ஆனால், இந்நெறியில் இது முதன் முதல் தோன்றிய நூலா தலின் இதில் சில குறைபாடுகள் நேர்ந்தன. ஒரெதுகையில் பிறவெதுகைச் சொற்கள் விரவுதலின்றிச் செய்யுள்கள் அமைய வில்லை. விருத்தத்தின் ஒவ்வோர் அடியிலும் பயின்று வரும் மோனையுறுப்பு எதுகையின் கலப்பிற்கு அடிகோலியிருக் கலாம். ஒரு செய்யுளுக்கும் அதனை அடுத்து வரும் செய்யுளுக் கும் யாதோர் இயைபுமில்லை. இதனால் மிக்க நினைவாற்றல் உடையவர்களே நினைவில் தங்க வைத்துக் கொள்ள முடியும். அடைச்சொற் புணர்த்துப் பெயர்களை அமைத்திருப்பது ஒரு குறையாகும். இதனால் பொருள் அடைகளைப் பிரித்துணர்கை யில் மயக்கம தோன்றுகிறது[30]. இக்குறைகளை நீக்கும் நோக் கில் பிற்காலத்தே பற்பல நிகண்டுகள் தோன்றின எனலாம். சூடாமணி நிகண்டினைச் செப்பம் செய்யும் முயற்சியில் பலர் ஈடுபட்டனர். சில ஏட்டுச் சுவடிகளில் கலப்பெதுகைச் செய்யுள் களைத் தனித்தும் பிற செய்யுள்களை ஆதியிற் பொருள் அந்தத்

திற் பொருள் எனப் பகுத்தும்இவ் விருவகைப் பாகுபாட்டிலும் எதுகை முறையைப் பின்பற்றியும் உள்ளமை புலனாகின்றது.

வேதகிரி முதலியார் சூடாமணியின் பதினோராம் நிகண்டைப் புதுக்கி 600 செய்யுள்கள் உள்ள எதுகை நயம் கொண்ட தனி நூலாக அமைத்து உரையும் வகுத்து வெளியிட்டார். சூடாமணி நிகண்டினும் சிறந்த நிகண்டு நூல்களைப் படைக்கவேண்டும் என்று பலர் துணிந்தனர். காங்கேயரது உரிச்சொல் நிகண்டு இவ்வாறு வந்த நிகண்டு எனலாம். இது வெண்பாவால் இயன்றது. இது எளிதில் மனனம் செய்வதற்குத் தக்கவாறு சுருக்கமாக அமைந்துள்ளது. ஆனால், பல்பொருள் சொற்கள் இடத்திற்குத் தக வெண்பாவில் அமையவேண்டும் நியதி ஒன்றனையே கொண்டன[31]. பின் தோன்றிய கயாதர நிகண்டு கட்டளைக் கலித்துறையில் அந்தாதியாக அமைந்தது. இனிய ஓசையும் எண்ணினால் வரையறைப்பட்ட எழுத்தமைதியும் எதுகை மோனை முதலியவற்றின் நயமும் பொருந்தவல்ல கட்டளைக் கலித்துறையில் மகடூஉ முன்னிலையாகக் கயாதரர் இந்நிகண்டினை ஆக்கியுள்ளார். அன்றியும் நிகண்டுச் சொற்களை நினைவில் நிறுத்துவதற்குப் பொருள் இயைபினைக் கொள்ளாது சொல் இயைபினைக் கொண்டு, சங்கிலித் தொடர் போன்று அமையுமாறு அந்தாதித் தொடையிலும் இந் நிகண்டினை ஆக்கியுள்ளார். எனவே, சூடாமணி நிகண்டினும் இது அமைப்பால் சிறந்தது ஆயிற்று. கயாதரத்தைப் போலவே பாரதி தீபம் என்னும் நிகண்டு கட்டளைக் கலித்துறையில் அமைந்தது. ஆனால், இதில் அந்தாதித் தொடை இல்லை. அடைமொழி இன்றிப் பெயர்களை அமைத்தும் பொருட்பெயர்களை மிகுதியாகத் திரட்டியும் செப்பமாக இந்நூல் இயன்றுள்ளது. அடி மிக்கதொரு பாவினத்தால் பொருட்பெயர்களை மிகுதியாகக் கொண்டு எளிய நடையால் இயன்று இக்காரணங்களால் சூடாமணியினும் சிறப்பெய்தி விளங்கும் பிறிதொரு நூல் ஆசிரிய நிகண்டு ஆகும். இது ஆசிரிய விருத்தத்தினால் ஆனது. இதில் சொல்லின் பொருட்கள் பெரும்பாலும் எண்களால் வரையறுத்து உணர்த்தப்பட்டுள்ளன. காட்டு :

**செம்மறிப் பெயர் துரிவை மறி கொறி துருவாடு**
**திகழ் உரு, பிரம் ஆறும் ஆம்** (113)

மேற்குறித்த நிகண்டு நூல்கள் எல்லாம் சொற் பொருட் பெருக்கத்தாலும் நினைவிற்கு உதவும் தொடை நயத்தாலும் அடி மிர்ந்து செல்லும் பாவினத்தாலும் பலவாறு செப்ப

முற்று விளங்குவன. நிகண்டுகட்கும் அகராதிகளுக்கும் உரிய நெருங்கிய தொடர்பினை உணர்ந்து அகராதி முறையே இனிப் பிற்காலத்து வேண்டப்படுவது எனத் தெளிந்து அம்முறையில் சிலர் முயன்றனர். இவ்வகையில் அகராதி நிகண்டு முதல் எழுத்தளவில் அகரநிரலை அமைத்த முதல்நூல். இது நூற்பாவினால் இயன்ற நூல். அடுத்து வடமொழி அமரகோசத்தைப் பின்பற்றி எழுந்த பல்பொருள் சூடாமணி நிகண்டில் முதலிரு காண்டங்களும் முதல் எழுத்தளவில் அகரநிரல் கொண்டது ஆகும். இந்நூல் விருத்தத்தால் ஆனது. இவ்வாறே விருத்தத்தால் ஆன பொதிகை நிகண்டு முதல் இரு எழுத்தளவில் அகர நிரலைக் கையாண்டுள்ளது. விருத்தத்தால் அரும்பொருள் விளக்க நிகண்டு, நாநார்த்த தீபிகை, சிந்தாமணி நிகண்டு, விரிவு நிகண்டு முதலியன இயற்றப்பட்டன. வெண்பாவால் நாமதீப நிகண்டு இயற்றப்பட்டது. நிகண்டுகள் மனனம் செய்தற்குரியதாக இருந்தமையால் பல்வகை யாப்புகளைப் பயன்படுத்தி இவற்றைப் படைத்தனர்.

நிகண்டு எழுதுவதற்கு ஆசிரியம், வெண்பா, கலித்துறை, விருத்தம் ஆகிய யாப்புகள் முறையே பயன்பட்டன. ஆசிரியம் மனப்பாடத்திற்கு எளிதாகாது. ஆகவே திவாகரது நூற்பா யாப்பினின்றும் பின்வந்த நூல்கள் மாறுபடலாயின. வெண்பா, ஆசிரியப் பாவினும் எளிதானது. இதன் எதுகை, மோனை, தளை முதலியவை பாவின் வடிவத்தை நன்கு நெஞ்சில் நிறுத்த வல்லன. கலித்துறையில் இம்மூன்றனுடன் எழுத்து வரையறையும் சேர்ந்து உதவுகின்றது. இந்தச் சிறப்புகளோடு விருத்தப் பாவில் எளிதான ஓர் இசையும் பொருந்தியிருக்கிறது[32]. எனவே விருத்தப்பா நிகண்டுகளில் மிகுதியாக இடம் பெற்றது சூடாமணி நிகண்டு இவ் வகைப்பாவால் இயன்றது. சூடாமணி என்னும் வாடாத நிகண்டு விளக்கின் முன் இரேவண சித்தர் முதலியோர் இயற்றிய நூல்கள் ஒளியின்றி மங்கிப் போயின. தமிழ் கற்போரிடையே சூடாமணியின் பதினோராவது தொகுதியளவு வேறு எவ்வகை நிகண்டும் ஆதரிக்கப்பட வில்லை என்பது கருதத்தக்கது[33]. மேலும், மாறுதல் உலகத்து இயற்கை இலக்கியம் தோன்றிய தொடக்க காலத்தில் இருந்த ஆசிரியம் கால அடைவில் வேறு வேறு யாப்பாக மாறிக் கொண்டு வந்தது. நிகண்டு நூலும் மாறிற்று. சொற்செட்டும் செறிவும் உள்ள பழைய நடை மாறி ஓட்டமும் எளிமையும் நெகிழ்ச்சியும் கொண்ட புதிய நடை வளரலாயிற்று. அன்றியும், நிகண்டு செய்தார் அடிப்படையில் முன்னிருந்த நிகண்டுகளின் சொல் தொகுதிகளைப் பெயர்த்தெழுதிப் பின்னர்ப்புதிய

வற்றைச் சேர்த்துக் கொண்டார்கள். அவ்வாறு சேர்த்த பொழுது பழைய யாப்பையே பயன்படுத்தினால் பண்டைய பாடலை எழுதியதாகத் தோன்றுமேயன்றி ஆசிரியர் புதிதாகச் செய்ததாகத் தெரியாது. ஆகவே யாப்பில் புதுமைக்காக மட்டுமன்றிக் கருத்தில் புதுமையையும் காட்டுவதற்காகப் பின் வந்த ஆசிரியர் வேறு யாப்பில் பாடியிருக்கிறார்கள் எனத் தோன்றுகிறது[34].

**நிகண்டுகளில் அகர நிரல் முயற்சி**

குறிப்பு நோக்கீட்டுக்கு (reference) உதவும் வகையில் நிகண்டுகளை மாற்றி அமைக்க வேண்டும் என்னும் நோக்கில் முயற்சிகள் நடைபெற்றுள்ளன என்பது நிகண்டுகளின் வரலாற்றால் தெரிய வருகிறது. இம்முயற்சி முதன் முதலில் ஒருசொல் பல்பொருள் பெயர்த் தொகுதியாகிய பதினோராம் தொகுதியில்தான் நடைபெற்றது. முதல் நிலையாக, இத்தொகுதியில் செய்யுட் சுவை கருதி ஏகதேசமாகச் சொற்கள் எதுகையில் அமைக்கப்பட்டன. இம் முறையைத் திவாகர ஏட்டுச்சுவடிகளில் காணலாம். அடுத்த நிலையாக, இச்சொற்களைக் ககர எதுகை, சகர எதுகை முதலிய பகுதிகளாகப் பாகுபாடு செய்து, எதுகையை வைத்துக் கொண்டே சொற்களைச் சிறிது முயன்று எடுக்கக்கூடிய முறை கையாளப் பட்டது. இம்முறையைச் சூடாமணி நிகண்டில் காணலாம். மூன்றாவது நிலையாக, சூடாமணி நிகண்டில் காணப்பட்ட ஓர் எதுகையில் பிறிதோர் எதுகைச் சொல் வந்து கலத்தல், செய்யுளுக்காகத் தேவையற்ற அடைமொழி புணர்த்துச் சொல்லின் பொருளைக் கருக வைத்தல் ஆகிய குறைகளை நீக்கும் முயற்சியாக அரும்பொருள் விளக்க நிகண்டு முதலிய கண்டுகள் தோன்றின. இம்முறையும் நிறைவளிக்காததால், நான்காம் நிலையாக, அகராதி முறை அரைகுறையாகக் கையாளப்பட்டது. இம்முறையைக் கொண்டு தோன்றிய முதல் நூல் அகராதி நிகண்டு ஆகும்[35]. இதன் காலம் கி.பி. 1594. இதன் ஆசிரியர் புலியூர்ச் சிதம்பர ரேவண சித்தர். இவர்தான் முதன்முதலில் அகராதி என்னும் சொல்லைத் தமிழ் உலகிற்கு அறிமுகம் செய்தார் எனப் பலரும் கூறுவர்.[36] ஆனால், திருமந்திரத்தில்,

**சொல் அகராதி விரியப் பரையில் மிகும் நாதம்** (2292)

என வரும் பாடலில் அகராதி என்னும சொல் இடம் பெற்றுள்ளதைக் காணலாம், மேற்காட்டிய திருமந்திரத் தொடருக்குப் பரையில் சொற்பிரபஞ்சத்துக்குக் காரணமான

நாதம் தோன்றும் என்று பொருள். யோக நிலையில் பொருள் இவ்வாறு இருப்பினும், அகராதி என்ற சொல்லாட்சி திருமந்திர காலத்தில் (5ஆம் நூ.) இருந்தது என அறிகிறோம். அகராதி என்பது சொற்பிரபஞ்சம். அதாவது சொற்களாகிய தொகுப்பு. இது சங்கர நமச்சிவாயர் நன்னூல் (460) உரையில் 'நிகண்டு கூட்டம்எனினும் ஒக்கும்' என்று குறித்ததை ஒத்தது[37].

அகராதி நிகண்டில் அகராதி என்பது அடையாக வந்தது. அகரத்திலே தொடங்கும் சொற்களை ஒரு பொருள், இரு பொருள் உடையன எனச் சொற்களைப் பொருள் தொகை அடிப்படையில் பகுத்து முதல் எழுத்து அளவில் அகரநிரலை அமைத்து அகராதி நிகண்டு ஆக்கப் பெற்றது. இந்நிகண்டில் பல குறைகள் உள்ளன. ஒரு சொல்லின் பொருள் தெரிய வேண்டுமானால் அது எத்தனை பொருளுடையது என்பது முதலில் தெரிய வேண்டும். அந்தச் சொல்லின் தொடக்கம் தெரிந்து உரிய பொருள் தொகையைக் கொண்டுள்ள பகுதியில் அச்சொல்லைத் தேடி அறிந்து பொருளை உணர வேண்டும். இக்குறைகளை நீக்கி ஒரு பொருள், இரு பொருள் முதலிய பாகுபாடுகளை ஒழித்து 1700இல் தோன்றிய பல்பொருள் சூளாமணி முதல் எழுத்தளவில் அகர நிலைக் கொண்டுள்ளது. கைலாச நிகண்டு சூடாமணியில் 50ஆவது பிரிவாகிய 'ஓரெழுத் தொரு மொழி' மட்டுமே அகர நிரலில் உள்ளது. ஓரெழுத் தொரு மொழி எண்ணிக்கையில் குறைவானதாலும், வேறு எழுத்துகள் பின்னே தொடராமையால் எளிதானதாலும் இப் பிரிவு மட்டும் அகர நிரலில் அமைந்திருக்கலாம். 1750இல் தோன்றிய பொதிகை நிகண்டு முதல் ஈரெழுத்து வரை அகர நிரலை வளர்த்தது.

இவ்வாறு நிகண்டுகள் படிப்படியாக அகராதிப் பண்பை நோக்கி வளர்ந்து வந்தன என்பது தெளிவாகிறது. நிகண்டு களின் ஏட்டுச் சுவடிகளைப் பயன்படுத்துவோரும் இவ் இலக்கை அடைய, பல முயற்சிகளை மேற்கொண்டனர். 1702 இல் எழுதப்பெற்ற திவாகர ஏட்டுச் சுவடி ஒன்றில் பதினோ ராம் தொகுதி நூற்பாக்களைத் திவாகரர் அமைத்தவாறு அமைக்காமல் 'ஆதியிற் பொருள்', 'அந்தத்துப் பொருள்' என இருகூறுபடுத்தி ஒவ்வொன்றிலும் நூற்பாக்களை அகராதி வரிசையில் அமைத்தனர். திவாகரத்தை முதன் முதலில் பதிப் பித்த தாண்டவராய முதலியாரும் இவ்வாறே பதிப்பித்து உள்ளார். பிங்கல நிகண்டினை முதன் முதல் பதிப்பித்த சிவன் பிள்ளையும் இந்நிகண்டின் பத்தாம் தொகுதியாகிய பல்பொரு

# நிகண்டுகளின் வரலாற்று அட்டவணை

| எண் | நிகண்டு | ஆசிரியர் | நூற்றாண்டு | பாவகை | பொருட் பாகுபாடு | பாடல் தொகை | சொல் தொகை | பதிப்பாளர் | ஆண்டு |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | திவாகரம் | திவாகரர் | 8 (9) | நூற்பா | 1,2,3 | 2,180 | 9,500 | தாண்டவராய முதலியார் | 1839 |
| 2 | பிங்கலம் | பிங்கலர் | 8 (10) | நூற்பா | 1,2 | 4,121 | 14,700 | சிவன்பிள்ளை | 1890 |
| 3 | சூடாமணி நிகண்டு | மண்டல புருடர் | 16 | விருத்தம் | 1,2,3 | 1,197 | 11,000 | ஆறுமுக நாவலர் முதலியோர் | — |
| 4 | அகராதி நிகண்டு | சிதம்பர ரேவண சித்தர் | 16 | நூற்பா | 2 | 3,362 (3,334) | — | மதுரைத்தமிழ்ச் சங்கம் | 1921 |
| 5 | உரிச்சொல் நிகண்டு | காங்கேயர் | 17 (14) | வெண்பா | 1,2,3 | 287 | 3,200 | குமாரசாமிப் புலவர் | 1908 |
| 6 | கயாதர நிகண்டு | கயாதரர் | 17 (15) | கலித்துறை | 1,2 | 566 | 11,350 | வையாபுரிப் பிள்ளை | 1939 |
| 7 | பல்பொருள் சூடாமணி நிகண்டு | ஈசுர பாரதியார் | 17 | விருத்தம் | 1,2,3 | 3 காண்டம் | — | அச்சாகவில்லை | |
| 8 | வடமலை நிகண்டு | ,, | ,, | ,, | ,, | ,, | — | நாகசாமி | 1983 |
| 9 | கைலாச நிகண்டு சூடாமணி | கைலாசர் | 17 | நூற்பா | 1,2 | | 15,000 | அச்சாகவில்லை | |

| | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 10 | பாரதி தீபம் | திருவேங்கட பாரதி | 17-18 (17) | கலித்துறை | 1,2,3 | 737 | 13,000 | சண்முகம் பிள்ளை | 1980 |
| 11 | ஆசிரிய நிகண்டு | ஆண்டிப் புலவர் | 17-18 (17) | ஆசிரிய விருத்தம் | 1,2 | 263 | 12,000 | சொக்கலிங்கம் | 1978 |
| 12 | அரும் பொருள் விளக்க நிகண்டு | அருமருந்தைய தேசிகர் | 18 | விருத்தம் | 2 | 700 | 3,200 | வையாபுரிப் பிள்ளை | 1931 |
| 13 | தொகை நிகண்டு | சுப்பிரமணியக் கவிராயர் | 18 | | 3 | நாமதீப நிகண்டின் பாயிரக் குறிப்பு | | | |
| 14 | பொருள் தொகை நிகண்டு | சுப்பிரமணிய பாரதி | 18 | நூற்பா | 3 | 1,000 | — | மதுரைத்தமிழ்ச் சங்கம் | 1920 |
| 15 | பொதிகை நிகண்டு | சாமிநாதக் கவிராயர் | 18 | i விருத்தம்<br>ii நூற்பா | 1,2 | 500 | 14,500<br>2,228 | வையாபுரிப் பிள்ளை | 1934 |
| 16 | உசித சூடாமணி நிகண்டு | சிதம்பர கவிராயர் | 18 | விருத்தம் | 1 | 197 | — | மலையக்கவுண்டர் முதலியோர் | 1903 |
| 17 | நாமதீப நிகண்டு | சிவசுப்பிர மணியக் கவிராயர் | 19 | வெண்பா | 1 | 800 | 12,200 | வையாபுரிப் பிள்ளை | 1930 |
| 18 | வேதகிரியார் சூடாமணி நிகண்டு | வேதகிரி முதலியார் | 19 | விருத்தம் | 2 | 600 | 2,526 | யாழ்ப்பாணச் சங்கம் | 1843 |
| 19 | கந்த சுவாமியம் | சுப்பிரமணிய தேசிகர் | 19 | நூற்பா | 1,2 | — | 2,743 | சில பகுதிகள் மட்டும் | 1844 |

| எண் | நிகண்டு | ஆசிரியர் | நூற்றாண்டு | பாவகை | பொருட் பாகுபாடு | பாடல் தொகை | சொல் தொகை | பதிப்பாளர் | ஆண்டு |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 20 | தொகைப்பெயர் விளக்கம் | வேதகிரி முதலியார் | 19 | | 3 | | | | 1945 |
| 21 | இலக்கத் திறவுகோல் | | 19 | | 3 | | | | |
| 22 | நாநார்த்த தீபிகை | முத்துசுவாமிப் பிள்ளை | 19 | விருத்தம் | 2 | 1,110 | 5,432 | அனவரதவினாயகம் பிள்ளை | 1936 |
| 23 | சிந்தாமணி நிகண்டு | வைத்தியலிங்கம் பிள்ளை | 19 | விருத்தம் | 2 | 400 | 3,000 | — | 1874 |
| 24 | அபிதானத் தனிச்செய்யுள் நிகண்டு | கோபாலசாமி நாயகர் | 19 | பல்வகை யாப்பு | 1 | — | — | நாகப்பட்டணம் ஸ்காட்டிஷ் பிராஞ்சு பிரஸ் | 1875 |

**குறிப்பு :**

1. சுந்தர சண்முகனாரின் தமிழ் அகராதிக்கலையை அடியொற்றிக் காலம் குறிக்கப்பட்டுள்ளது. இக் கால வரையறையில் மு. அருணாசலம் வேறுபடுமிடங்கள் அடைப்புகளில் காட்டப்பட்டுள்ளன.

2. பொருள்பாகுபாட்டில் எண் 1 ஒரு பொருள் பல பெயர்த் தொகுதியையும், எண் 2 ஒருசொல் பல் பெயர்த்தொகுதியையும், எண் 3 பல்பொருள் கூட்டத்து ஒரு பெயர்த் தொகுதியையும் குறிக்கும்.

ளொரு சொல் என்னும் பிரிவில் ஆசிரியர் கொண்ட முறையைக் கைவிட்டு அகராதி வரிசையில் சொற்களை அமைத்து அவற்றிற் குரிய நூற்பாக்களை முறையே வைத்து வெளியிட்டுள்ளார். நிகண்டுகள் அகராதிபோற் பயன்பட வேண்டும் என்னும் எண்ணம் தோன்றிய பிறகு - அதாவது அகராதி நிகண்டு தோன்றிய பிறகு - இத்தகு பாடப் பயிற்சிகளும், பதிப்பு முயற்சிகளும் முகிழ்த்திருக்கலாம் எனத் தோன்றுகிறது.

**தொகுப்புரை**

1. காலத்தின் தேவையை நிறைவு செய்யும் நோக்கில் நிகண்டுகள் தோன்றின.

2. தொல்காப்பியத்தின் அடித்தளத்தில் எழுந்த திவாகர நிகண்டு பன்னிரு தொகுதிகளை முப்பெரும் பிரிவுகளுள் கொண்டு 'பூரண நிகண்டாக' விளங்குகிறது. இதனைப் பின் பற்றி முப்பெரும் பிரிவுகளைக் கொண்டும், இரு பிரிவுகளை ஏற்றும், ஒரு பிரிவை மட்டும் விளக்கியும் பலவாறாகப் பிற நிகண்டுகள் தோன்றின.

3. சொற்பொருள் கூறும் துறை நூலை 'உரிச்சொல், உரிச்சொற் பனுவல் என வழங்கும் மரபு பண்டு இருந்தது. பின் நிகண்டு என்னும் வழக்கே பெருக வழங்கி நிலைத்தது.

4. வைதிகச் சொற்களுக்குப் பொருள் கூறும் கருவி நூல் வடமொழியில் 'நிகண்டு' என வழங்கப்பட்டுப் பின் எச்சொற்கும் பொருள் கூறும் கருவி நூலுக்கும் 'நிகண்டு' என வழங்கும் முறை அமைந்தது. பிரபந்தம், புராணம் முதலிய சொற்களைப் போலவே நிகண்டு என்னும் வடசொல்லும் தமிழில் இடம்பெற்று நிலைத்து விட்டது.

5. 'நிகண்டு' என்னும் சொல் தமிழில் முதன் முதலாக இறையனார் அகப்பொருள் உரையில்தான் இடம் பெற்றுள்ளது. எனினும், 16ஆம் நூற்றாண்டில் சூடாமணி நிகண்டில் இச்சொல் ஆட்சி எய்திய பின்னரே இது பெருக வழங்கலாயிற்று.

6. நிகண்டுகளின் முதற் பிரிவு - ஒருபொருள் பல்பெயர்த் தொகுதி - ஆங்கிலத்தில் வழங்கும் சொற்கருவூலம் (Thesaurus) போன்றது ஆகும்.

7. நிகண்டுகளின் இரண்டாம் பிரிவு - ஒருசொல் பல் பொருள் பெயர்த் தொகுதி - அகராதி நீர்மையது. எனவே, இத்தொகுதி மிகுதியும் போற்றப்பட்டது.

8. நிகண்டுகளின் மூன்றாம் பிரிவு - பல்பொருள் கூட்டத்து ஒருபெயர்த் தொகுதி - தமிழுக்கும் வடமொழிக்கும் உரியது.

9. நிகண்டுகளில் தொழிற்பெயர் வடிவில் வினைகள் நிறுத்தப் பெற்றுச் செயல் பற்றிய பெயர்த் தொகுதியில் பொருள் விளக்கப்பட்டுள்ளன.

10. நிகண்டுகளில் ஆசிரியம், வெண்பா, கலித்துறை, விருத்தம் ஆகிய யாப்புகள் முறையே பயன்பட்டன.

11. தமிழில் ‘அகராதி’ என்னும் சொல் முதன் முதலில் அகராதி நிகண்டு வழி அறிமுகமாகியது என்னும் கருத்து ஏற்புடைத்து அன்று; இச்சொல், முதன் முதலாகத் திருமந்திரத்திலேயே குறிக்கப் பெற்றுள்ளது.

12. மனனம் செய்தற்குரிய நிகண்டுகளைக் குறிப்பு நோக்கீட்டுக் கருவியான அகராதி நெறியை நோக்கிச் செலுத்தும் முயற்சிகள் படிப்படியாக மேற்கொள்ளப்பட்டன.

# அகராதிக் காலம்

செய்யுள் வடிவில் அமைந்த நிகண்டுகளை எளிதில் உடனடியாகக் குறிப்பு நோக்கீட்டிற்குப் பயன்படுத்த இயலாது. ஒரு சொல்லுக்குப் பொருள் அறிய வேண்டுமாயின் அச்சொல் நிகண்டில் எந்தத் தொகுதியைச் சார்ந்தது என்று முதலில் தெரிந்து கொண்டு அதன் பின் அந்தத் தொகுதி முழுவதையும் படித்தாலன்றி அதன் பொருளை அறிவது இயலாது. மனன முறையில் மிகுந்த இடர்ப்பாடு உண்டு. எல்லோராலும் எளிதாக மனப்பாடம் செய்ய முடியாது. மனனம் செய்வதற்கு உரியனவாக விளங்கிய நிகண்டுகளில் வேண்டிய சொல்லின் பொருளை எளிதில் நோக்கி உணர இயலாது. இடைக்காலத்தில் கல்வி என்பது, பெரிதும் மனப் பாடம் செய்வது என்னும் முறையிலேயே அமைந்தது; கல்விப் பயிற்சிக்குக் கருவி நூல்களாக அமைந்த நிகண்டுகளையும் எல்லோரும் மனப்பாடம் செய்தே வந்தார்கள். பெரும் பாலோர் அடிப்படைக் கல்வியோடு நின்று விட, மேற்படிப்பில் ஆர்வமும் அதற்கேற்ற வாய்ப்பும் கொண்ட சிலரே இலக்கியப் படிப்பில் மேற்சென்ற ஒரு கால கட்டத்தில், இம்மனன முறை போதுமானதாகவே இருந்தது[1]. இந்தக் கல்வி முறை ஐரோப்பியர் வருகைக்குப் பின் பெரும் மாறுதல்களுக்கு உட் பட்டது. ஏற்கெனவே அறியப்பட்டுள்ள கருத்துகளை விரைவிலேயே தெரிந்து கொண்டு அதன் மீது புதிய அறிவை வளர்க்கும் நோக்குடன் அமைந்த புதிய கல்வி முறையில் அறிய வேண்டியதை வேண்டியபோது எளிதில் தெரிந்து கொள்ளக் கூடிய கருவி நூல்கள் தேவைப்படலாயின. இத் தேவையை நிறைவு செய்யும் நோக்கில் தோன்றியவையே அகராதிகள் எனலாம்.

அகராதிகளை இருபெரும் பிரிவுகளாகப் பகுக்கலாம்:[2] (1) மொழியகராதிகள் (Linguistics Dictionaries), 2. கலைக் களஞ்சியங்கள் (encyclopedias). மொழி அகராதிகள் பொது

வாகச் சொற்களின் பொருள் வரையறையைத் தரும். கலைக் களஞ்சியங்கள் மொழியுலகிற்கு அப்பால் புற உலகில் உள்ளதும் சொல்லால் சுட்டப் படுவதுமான பொருள் (thing) குறித்து எல்லாத் தகவல்களையும் தரும். அகராதி மொழிச் சார்புடையது. இது மொழியில் உள்ள சொற்களையும் அவற்றின் தன்மைகளையும் குறிக்கும் நூலாகும். கலைக் களஞ்சியம் பொருள் (thing) சார்புடையது. இது மொழியால் குறிக்கப்படும் பொருளைப் பற்றிய விரிவான விவரங்களைக் கொண்ட நூல் ஆகும். மொழியுலகிற்கு வெளியே உள்ள உருவ/அருவப் பொருள் பற்றிய யார், எப்பொழுது, எங்கே, எப்படி, ஏன் போன்றவற்றிற்கு உரிய விளக்கம் தரும் இயல்பினது கலைக் களஞ்சியம்.[3] இவ் வியலில் இவ்விரு வகை அகராதிகளும் ஆராயப்படுகின்றன.

## மொழியகராதிகள்

மொழியகராதிகளை (1)வரலாற்றுஅகராதிகள் (Diachronic dictionaries) எனவும், (2) தற்கால விளக்க அகராதிகள் (Synchronic dictionaries) எனவும் வகைப்படுத்தலாம்.

### வரலாற்று அகராதிகள்

இவை சொற்களின் வடிவம், பொருள் முதலியவற்றின் வளர்ச்சி வரலாறுகளுக்கு முதன்மை தரும் அகராதிகள் ஆகும். இவற்றை (1) வரலாற்று முறைப் பொருள் அகராதிகள் (Historical dictionaries), (2) சொற்பிறப்பியல் (Etymological) அகராதிகள் என இரண்டாகப் பகுக்கலாம்.

வரலாற்று முறைப் பொருள் அகராதிகள் வரலாற்றுச் சான்று (நூல் ஆதாரம்) உள்ள கால கட்டத்திற்குள்ளாகச் சொல்லின் வடிவத்திலும் பொருளிலும் ஏற்படும் மாற்றங்களைப் பதிவு செய்வதில் கருத்து செலுத்தும்.சொற்பிறப்பியல் அகராதிகள், சொற்களின் தோற்றுவாயைக் கண்டறிந்து சுட்டுவதில் கருத்து செலுத்தும். எல்லா மொழிகளிலும் பெரும்பான்மையான சொற்கள் அம்மொழிகளில் நூல் மரபு (textual tradition) தோன்றுவதற்கு முன்னரே வழக்கில் உள்ளவையாக இருப்பதால் சொற்பிறப்பியல் அகராதிகள் பெரும்பான்மையும் சொற்களின் முன்வரலாற்றை (Pre-history) விளக்குவனவாக உள்ளன. எனினும், இவை அண்மைக் காலத்துத் தோன்றிய சொற்களின் தோற்றுவாயையும் விளக்குகின்றன[4].

### வரலாற்று முறைப் பொருள் அகராதி

தமிழில் இதுகாறும் முறையான வரலாற்று முறைப் பொருள் அகராதி தோன்றவில்லை. அண்ணாமலைப் பல்கலைக் கழக மொழியியல் துறையும் கேரளப் பல்கலைக்கழகத் தமிழ், மொழியியல் துறைகளும் இவ்வகை அகராதியினை வெளிக்கொணர முயன்றதாகத் தெரிகிறது. ஆனால், அது இந்நாள் வரை கைகூடவில்லை. சென்னையில் ராஜம் என்பார் வரலாற்று முறைப்பொருள் அகராதி ஒன்றை வெளிப்படுத்தத் திட்டமிட்டுப் பழந்தமிழ் நூல்களுக்கெல்லாம் அடைவு செய்து அப்பணியில் ஈடுபட்டு வருவதாகத் தெரிகிறது. இன்றுள்ள அகராதிகளுள் சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேரகராதி ஓரளவு வரலாற்று முறையில் பொருள் கூற முயற்சி செய்துள்ளது எனலாம். காட்டாகப் பின் வரும் பதிவைக் கொள்ளலாம்:

> சூள்-தல் (வி.): 1. ஆணையிடுதல். 'ஐய சூளினடிதொடு குன்றொடு, (பரிபாடல் 8, 70)
>
> 2. வஞ்சினங் கூறுதல். 'சூட்கின்ற வீரம்' (கம்பராமாயணம், நிகும்ப. 82)

இதன் எல்லாப்பதிவுகளும் இவ்வாறே வரலாற்று முறைப் பொருளைக் கொண்டவை என்று கொள்ள முடியாது. காட்டாகப் பின்வருவதைக் கொள்ளலாம்:

> சூள் (பெ.): 1. சபதம். 'சூள் பேணான் பொய்த்தான் மலை' (கலித்தொகை, 41)
>
> 2. ஆணை. இன்னாத் தொல்சூ ளெடுத்ததற் கண்ணும்' (தொல்காப்பியம், பொருள். 147).

சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்ப் பேரகராதி உருவான காலத்தில் பல்வேறு தமிழ் நூல்களின் காலம் வரையறை செய்யப்படாமல் இருந்தது. எனவே, இவ் வகராதி வரலாற்று முறைப் பொருள் அகராதியாக உருவாக்கப் பெறவில்லை[5] என்பது கருதத்தக்கது.

### சொற்பிறப்பியல் அகராதிகள்

சொற்பிறப்பு வரையறை உடன் பிறப்பு மொழிகளை (Cognate languages) ஒப்பு நோக்கிச் செய்யப்படுவதால்


மொழி அகராதிகள்
LINGUISTIC DICTIONARIES
வரலாற்று அகராதிகள்
Diachronic Dictionaries
தற்கால விளக்க அகராதிகள்
Synchronic Dictionaries
சொற்பிறப்பியல் அகராதிகள்
Etymological Dictionaries
வரலாற்று முறைப் பொருள் அகராதிகள்
Historical Dictionaries
ஒப்பியல் அகராதிகள்
Comparative Dictionaries
பொது அகராதிகள்
General Dictionaries
சிறப்பு அகராதிகள்
Restricted/Special Dictionaries
தகுமொழி விளக்க அகராதிகள்
Standard Descriptive Dictionaries
மீவிளக்க அகராதிகள்
Overall Descriptive Dictionaries
வரைவில் சேர்க்கை அகராதிகள்
Dictionaries of Free Combinations
மரபுச் சேர்க்கை அகராதிகள்
Dictionaries of Set Combinations
விதிப்பு அகராதிகள்
Prescriptive Dictionaries
1. மரபுத் தொடர் அகராதிகள்
Dictionaries of Idioms
2. மரபு வழக்கு அகராதிகள்
Dictionaries of Set Expressions
3. பழமொழி அகராதிகள்
1. பயிற்று அகராதிகள்
Pedagogical Dictionaries
2. வரிவடிவ அகராதிகள்
Orthographical Dictionaries
3. ஒலிப்பு அகராதிகள்
Orthoepical Dictionaries or

1. கிளைமொழி அகராதிகள்
Dialect Dictionaries
2. சொற்றொகைகள்
Glossaries
3. நூல் அகராதிகள்
Exegetic/Text Dictionaries
4. சொல்லடைவுகள்
Indices
5. சொற் பொருள் குறிப்பு அகராதிகள்
Concordances
6. குறுக்க விளக்க அகராதிகள்
Dictionaries of Abbreviations

Dictionaries of Proverbs

4. மேற்கோள் அகராதிகள்
Dictionaries of Quotations
5. ஒருபொருட் பன் மொழி அகராதிகள்
Ideological Dictionaries or Dictionaries of Synonyms
6. எதிர்ச்சொல் அகராதிகள்
Dictionaries of Antonyms
7. ஒலிக்குறிப்பு அகராதிகள்
Dictionaries of Onamatopeic Words
8. பொருட்புல அகராதிகள்
Systematic Dictionaries

Dictionaries of Pronunciation

4. எதுகை மோனை அகராதிகள்
Reverse/Rhyme Dictionaries

சொற்பிறப்பியல் அகராதிகளிலேயே ஒப்பியல் பண்பும் அடங்கி நிற்கும். ஆனால், சில அகராதிகள் சொற்பிறப்பு குறித்து ஏதும் சுட்டாமல் ஒப்பியல் பண்பிற்கு மட்டுமே முதன்மை தரும். இத்தகு அகராதிகள் ஒப்பியல் அகராதிகள் [Comparative dictionaries] எனப்படும். தமிழில் இவ் விருவகை அகராதிகளும் உள்ளன.

பள்ளாஸ் (Pallas) என்பவர் 1786—91 ஆம் ஆண்டுகளில் உலக மொழிகளின் ஒப்பியல் சொற்றொகை, அகராதி ஆகியவற்றைத் தொகுத்து உள்ளார். இதுவே இன்றுள்ள ஒப்பியல் அகராதிகளுள் தொன்மையானது. இந்தியாவிலும், ஆசியாவிலும் உள்ள மொழிகளின் ஒப்பியல் அகராதி ஒன்றை ஹன்டர் என்பவர் 1868இல் இலண்டனில் வெளியிட்டுள்ளார். கால்டுவெலின் திராவிட ஒப்பிலக்கணத்தில் சொற்பிறப்பியல் ஒப்பியல் கூறுகள் அமைந்துள்ளன[6] .காட்டு:

sukti, a curl.Tam., suttru, Can. suttu, Tel.
chuttu, anything round, as a ring, a coil,
a round about way, Root, suttru, to go round.

வடமொழி வேர்களைத் தமிழில் விளக்கும் 'தாது மாலை' என்னும் அகராதியை நீர்வேலிச் சங்கர பண்டிதர் யாழ்ப்பாணத்தில் 1908 இல் வெளியிட்டுள்ளார். மார்க் கோலின்சு[7] பதிப்பித்த (1919-1926) திராவிட ஆய்வு நூலில் சொற்பிறப்பியல்,ஒப்பியல் கூறுகள் இடம் பெற்றுள்ளன. காட்டு;

S. ustra 'a camel;'
Ta. ottai; Ma. otte; Te. onte;
Ka. otte, onte.

சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்ப் பேரகராதியே தமிழ் அகராதிகளுள் சொற்பிறப்பியல்,ஒப்பியல் பண்புகளைக் கொண்ட ஒரே அகராதியாகும். இவ் வகராதியில், பகர அடைப்புகளுள் உடன் பிறப்பு மொழிச் சொற்களையும் ஒவ்வோர் அகராதி அலகையும் (lexical unit) அடுத்து அவ் வலகுக்கு மூலமான சொல்லையும் காணலாம். காட்டுகள்:

முறையிடுதல்: [T.M. morayidu, K. moreyidu]

மூக்கம் — murkha

அண்மைக்காலத்து வழக்குகளுக்கும் இவ் வகராதி மூலம் சுட்டுகிறது. காட்டு :

டம்ளர் — E. tumbler.

சென்னைப் பல்கலைக்கழக அகராதியின் சொற்பிறப்பியல் ஒப்பியல் நெறிமுறைகளும் முடிவுகளும் பொருத்தமற்றவை என ஞானப்பிரகாசரும்[8] பிறரும்[9] கருதினர். இவ் வகராதி வெளிவந்த சில ஆண்டுகளுக்குள் ஞானப்பிரகாசரது 'சொற் பிறப்பு ஒப்பியல சொல்லகராதி' தோன்றிற்று. இவ் வகராதி யில் ஒரு தமிழ்ச் சொல் எந்த வேரிலிருந்து எப்படிப் பிறந்து உருவாகிறது என்பதைக் காட்டியிருப்பதோடு அச்சொல் மற்ற இந்திய, ஐரோப்பிய மொழிகளிலும் ஒத்த நிலையில் வழங்கப் படுகிற அவ்வம் மொழியுருவங்களும் தரப்பட்டுள்ளன. காட்டு:

அஃகுள் ahk-ul, n [id. + —ul³ 'bending inwards'; சுருங்கியுள்ளது] Arm-pit; கமுக்கட்டு

M. akkulam, 'arm-pit'. Cf. S. aksa, kaksa, 'inner recess'; L. axilla, ala, 'arm-pit' Also Cf. S. ag, ank, ang, to move torturously, anc 'to bend, curve'. Note. The S. aksa, eye, is perhaps related to ahk-ul, as a cavity or curved thing? Cf. S, caksu, p. akhi.

தமிழ்ச் சொற்களின் வேரிலிருந்து உலக மொழிகளின் சொற் கள் தோன்றிப் பல்வேறு வடிவங் கொண்டன என்னும கருத் தினர் ஞானப்பிரகாசர். இவரது அகராதியை அடுத்து இராம கிருஷ்ணையா என்பவர் 1944 இல் திராவிட உடன் பிறப்பு மொழிச் சொற்களைத் தொகுத்துத் தனி நூலாக வெளியிட் டார். இதில் ஒப்பியல் பண்பு இடம் பெற்றுள்ளது. இவரைத் தொடர்ந்து ரா.பி. சேதுப்பிள்ளை முதலானோர் திராவிட ஒப்பியல சொற்றொகை ஒன்றை 1959 இல் வெளியிட்டனர். இதே ஆண்டில் 'திராவிட பாஷா சாம்யமுலு' என்னும் பெய ரில்சின்ன சீதாராமசாமி சாத்திரி ஒரு திராவிட ஒப்பியல்அகரா தியை வெளியிட்டார். இதே காலகட்டத்தில வையாபுரிப் பிள்ளை தமது 'சொற்களின் சரிதம்' என்னும் நூலை வெளி யிட்டார். இதுகாறும் இத்துறையில் தோன்றிய நூல்களின்- குறிப்பாகத் தமிழ்ப் பேரகராதியின்- துணையோடு எமனோ பரோ இருவரும் திராவிடச் சொற்பிறப்பியல் அகராதி ஒன்றை வெளியிட்டனர். சொற் பிறப்பியல், ஒப்பியல் நோக்கில் வெளி வந்தவற்றுள் இதுவே சிறந்ததாகக் கருதப்படுகிறது. இவ்வக ராதியின் ஒரு பதிவு காட்டாகக் கீழே தரப்பட்டுள்ளது.

Ta. akku (akki--) to be reduced, shrink, be dejected, become colsed (as a flower); ? alku (alki—) to shrink, diminish, lessen; alkal deficiency, poverty. Ka. akkudisu to become small, wane

1968-இல் வெளிவந்த 'சில தமிழ்ச் சொல்லாராய்ச்சி' என்னும் சிவராஜ பிள்ளையின் நூலும் சொற்பிறப்பியல் துறையில் குறிப்பிடத்தக்க பணியாகும். ''காழ்'' என்னும் சொல்லின் பொருள் வளர்ச்சியைப் படம் மூலமாகவும் விளக்கிச் சொற் பொருள்கள் பெருகுவதன் ஏதுக்களை இந்நூலுள்(பக். 74-76) நன்கு ஆசிரியர் காட்டியுள்ளார். பசும் பொற்கிழாரின் 'சொல் விளக்கம்' என்னும் நூலும் குறிப்பிடத்தக்கது. யாழ்ப்பாணத் தில் 1970-72 ஆம் ஆண்டுகளில் டேவிட் என்பார் தமிழ்மொழி யின் சொற்பிறப்பியல், ஒப்பியல் அகராதியினை வெளியிட்டு உள்ளார். ஞானகிரியார் 1972 இல் தமிழிலிருந்து ஆங்கிலத்தில் புகுந்த சொற்களின் சொற்பிறப்பை விளக்கி ஓர் அகராதி படைத்துள்ளார். இதில் ஒரு பதிவு வருமாறு:

Child, n, A Sax. cild, child, Tm. kula, 'young', tender; kula-ku, child; and suf. -du; hence, kul-d > cul-d > chul-d > chyld > child.

தேவநேயப் பாவாணரது 'வேர்ச்சொற் கட்டுரைகள்' முதலியன கருதத்தக்கவை. தமிழ்ச் சொற்பிறப்பியல் அகராதி ஒன்றை உருவாக்கும் நோக்கில் தமிழக அரசு செந்தமிழ்ச் சொற் பிறப்பியல் அகர முதலித் திட்ட இயக்ககம் ஒன்றை நிறுவி, தேவநேயப் பாவாணரை இதன் இயக்குநராக நியமித்தது. பன் னிரண்டு தொகுதிகளாக இச்சொற்பிறப்பியல் அகராதி வெளி யிடப்படும் எனத் தெரிகிறது. 1979ஆம் ஆண்டின் தொடக் கத்தில் அருளி என்பவர் 'தகுதி' என்பதன் வேர்ச் சொல்லை ஆராய்ந்து அப்பெயரிலேயே ஒருநூலையும் வெளியிட்டுள்ளார். இவ்வாறாகச் சொற்பிறப்பியல், ஒப்பியல் துறையில் அகரா திகள், சொற்றொகைகள் சிலவும், கட்டுரைகள், நூல்கள் சிலவும் வந்துள்ளன.

## தற்கால விளக்க அகராதிகள்

இவற்றைப் பொது அகராதிகள் எனவும், சிறப்பு அகரா திகள் எனவும் இரண்டாகப் பகுக்கலாம். பொது அகராதிகள் மொழியின் எல்லாச் சொற்களுக்கும் பொதுவாகப் பொருள்

வரையறை செய்யும் பாங்கின. சிறப்பு அகராதிகள் இவ்வாறு இல்லாமல் மொழியின் சொற்களுள் சிறப்பாகக் குறிப்பிட்ட ஏதேனும் ஒரு பகுதிக்கு மட்டும் விளக்கம் அளிப்பதில் நாட்டம் கொண்டவை ஆகும்.

### பொது அகராதிகள்

இவற்றை இரு வகைகளாக வகைப்படுத்தலாம்: 1. தகுமொழி விளக்க அகராதிகள்(Standard Descriptive Dictionaries), 2.மீவிளக்க அகராதிகள் (Overall Descriptive Dictionaries). தகுமொழி விளக்க அகராதிகள், ஒரு மொழியில் உள்ள கிளை மொழிகளையும் திசை வழக்குகளையும் விலக்கி, அம்மொழியின் தகுமொழிச் (Standard language) சொற்களுக்கு மட்டுமே பொருள் விளக்கம் செய்யும். மீ விளக்க அகராதிகள், ஒரு மொழியின் தகுமொழிச் சொற்களுக்கு மட்டும் அன்றிக் கிளை மொழிகள், திசை வழக்குகள், குறுமொழிகள், கொச்சை வழக்குகள், துறை வழக்குகள் முதலிய எல்லா வழக்குச் சொற்களுக்கும் இனம் சுட்டிப் பொருள் விளக்கம் செய்யும். தமிழில் இவ் விரு வகையான அகராதிகளும் உள்ளன.

#### தகுமொழி விளக்க அகராதிகள்

பதினேழாம் நூற்றாண்டில் தோன்றிய ‘அகராதி மோனைக் ககராதி எதுகை’யைத் தமிழில் வந்த முதல் தகுமொழி விளக்க அகராதியாகக் கொள்ளலாம. இவ் வகராதியில் அருஞ்சொற்களுக்கு மட்டுமே பொருள் விளக்கப் பட்டுள்ளது. இதனையடுத்து, இந்நூற்றாண்டில் தோன்றிய ‘பத்துச்சொல் அகராதி’ இங்குக் கருதத்தக்கது. இதில் திவாகரம், சூடாமணி முதலிய நிகண்டுகளில் உள்ள சொற்கள் விளக்கம் பெறுகின்றன. அண்ணாசாமி பிள்ளை 1850இல் தொகுத்த ‘ஒருசொல் பல்பொருள் விளக்கம்’ 19 ஆம் நூற்றாண்டில் எழுந்த தகுமொழி விளக்க அகராதி ஆகும். இது நிகண்டுகளின் பதினோராம் தொகுதி போல் பெயர் உடையதாயிருக்கிறது. இதில் ஒரு சொல்லுக்குப் பொருளாகக் கொடுக்கப்பட்டிருக்கும் சொல்லுக்கும் இன்னொரு சொல்லால் விளக்கம் தரப்பட்டுள்ளது.

காட்டு:

வரி = சுணங்கு = தேமல்
எழுத்து = அக்கரம்
பாட்டு = இசைப்பாட்டு
வாரிதி = கடல்

இறை = குடியிறை
நெல் = சாலி.

19ஆம் நூற்றாண்டில் யாகப்பப் பிள்ளை வெளியிட்ட 'கடின சொற்களின் அகராதி'யும் இவ் வரிசையில் இடம் பெறத் தக்கதாகும். 20ஆம் நூற்றாண்டில் சுன்னாகம் குமாரசாமி பிள்ளை வெளியிட்ட 'இலக்கியச் சொல் அகராதி' குறிப்பிடத்தக்கது. இது கலித்தொகை, இராமாயணம், சிந்தாமணி, நிகண்டுகள் முதலிய இலக்கியங்களில் உள்ள இன்றியமையாப் பெயர்ச் சொற்களை விளக்குகிறது. இதன் காலம் 1914. மேற்குறித்தவை தவிர வேறு தகுமொழி விளக்க அகராதிகள் இருப்பதாகத் தெரியவில்லை.

### மீவிளக்க அகராதிகள்

17ஆம் நூற்றாண்டில் தோன்றிய வைணவ விளக்கவுரை அருஞ்சொல அகராதி முதல் மீவிளக்க அகராதியாகத் தோன்றுகிறது. 13, 14ஆம் நூற்றாண்டுகளின் பேச்சுவழக்குச் சொற்களை அறிந்து கொள்ள இந் நூல் பெரிதும் உதவும்[10]. ஐரோப்பியர் தொகுத்த அகராதிகளும் அவர்களது வருகைக்குப் பின் தமிழர்கள் தொகுத்த அகராதிகளும் பெரும்பான்மை மீ விளக்க அகராதிகள் எனலாம். சதுர்அகராதியில்அரண்மனை என்பது 'அரன்மனை'எனக் குறிக்கப்பட்டுள்ளது இராமய்யன் அம்மானையிலும் 'அரன்மனை' இடம் பெற்றுள்ளது. மக்கள் எப்படி ஒலித்து வந்தார்களோ அப்படியே பதிவு செய்ய வேண்டும் என்னும் நோக்கில் பெஸ்கி இவ்வாறு எழுதியிருப்பார் எனத் தெரிகிறது. இது இலக்கியத் தமிழோடு பேச்சுத் தமிழையும் அகராதியில் சேர்த்தனர் என்பதைப் புலப்படுத்தும். பதினேட்டாம் நூற்றாண்டில் தோன்றிய பெப்ரீஷியஸ் தமிழ் —ஆங்கில அகராதியிலும் மீவிளக்கப் பண்பு அமைந்துள்ளது. காட்டுகள்:

நேத்தி —neat, proper, genteel, curious, elegant
பசாரி —a whore, a bad and quarrelous woman.
பசாரியாட்டம், பசாரித்தனம் -
the quarrelsomeness of a woman

நேர்த்தி என்னும் சொல் பேச்சு வழக்கில் நேத்தி என வழங்கும். இதனை பெப்ரீஷியஸ் அகராதி பதிவு செய்துள்ளது; பசாரி போன்ற வழக்கில் உள்ள அயல்மொழிச் சொற்களையும் இவ் அகராதி சேர்த்துள்ளது[12]. ராட்லர் அகராதியில்

மீ விளக்கப் பண்புக்கு ஒரு காட்டு வருமாறு:

டப்பு Sub. 1. a copper coin, a dub;
2. a falsehood.

வின்சுலோ அகராதியில் ஒரு காட்டு:

அரிபெட்டி, S. A sieve or Cullender, சல்லடை.

சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்ப் பேரகராதியில் காட்டு.

இடுக்கு வார் கைப்பிள்ளை— எடுப்பார் கைப்பிள்ளை

இவ்வாறு மீவிளக்க அகராதிகள் பெரும்பான்மையாகத் தமிழில் உள்ளன.

**சிறப்பு அகராதிகள்**

சிறப்பு அகராதிகள் எண்ணிறந்தனவாகப் பல்கும் நீர்மையன. எனினும், இன்றியமையாச் சில வகைகள் மட்டுமே இங்கு ஆராயப்படுகின்றன. இவ்வகராதிகளை முப்பெரும் பிரிவுகளாகப் பகுக்கலாம்: 1. வரைவில் சேர்க்கை அகராதிகள் (Dictionaries of free combinations), 2. மரபுச் சேர்க்கை அகராதிகள் ( Dictionaries of set combinations ), 3. விதிப்பு அகராதிகள் ( Prescriptive Dictionaries ).

**வரைவில் சேர்க்கை அகராதிகள்**

மொழியில் அம்மொழி பேசுவோரின் கருத்து வெளிப்பாட்டு விருப்பத்திற்கு இயைய ஓர் ஒழுங்குடன் சொற்கள் சேர்க்கப்படுகின்றன. இந்தச் சொற்சேர்க்கையானது பேசுவோரின் விருப்பத்திற்கேற்பத் தொடர் தோறும் வேறுபட்டுச் செல்லலாம். இவ்வாறு ஒரு கட்டுமின்றிச் சேர்க்கப்படும் சொற்சேர்க்கை பெரும்பாலும் அடைமொழி நீர்மையிலோ (attributive ), அல்லது முற்றுச்சொல் நீர்மையிலோ ( completive ) அமைகின்றன. இத்தகு சொற்சேர்க்கை வரைவில் சேர்க்கை எனப்படும். இச்சேர்க்கைப் பண்பு கொண்ட அகராதிகள் உள்ளன. இவை பலவகைப்படும். இவற்றைக் கீழே காணலாம்.

**கிளைமொழி அகராதிகள்** (Dialect Dictionaries)

இவை ஒரு மொழியில் உள்ள பல்வேறு கிளைமொழிகளை அடிப்படையாகக்கொண்டு மொழி வேறுபாட்டினை விளக்கும் அகராதிகள் ஆகும். இவ்வகையில் பெஸ்கி அடிகளது 'Vulgaris Tamulicae linguae dictionariun Tamulico-Latinum' என்னும்

தமிழ்க் கிளை மொழிகளை விளக்கும் தமிழ் இலத்தீன் அகராதியே முதலாவதுஆகும். இதன் இரண்டாவதுபதிப்பு 1882-இல் வெளிவந்தது. பின்னிணைப்புத் தொகுதி 1884-இல் வெளிவந்தது. முதற் பதிப்பு 1827-இல் வந்ததாகத் தெரிகிறது. இவரே வட்டார வழக்கு அகராதி ஒன்றையும் தொகுத்துள்ளதாகத் தெரியவருகிறது[14]. இதுபற்றி ஏதும் அறிய இயலவில்லை.

இவ்வகையில் போப் தொகுத்த 'A Compendious Tamil-English Dictionary' யின் மூன்றாவது பகுதி தமிழ் மொழியின் வட்டார வழக்குகளை விளக்கும் கிளைமொழி அகராதியாகும். இவை தவிர வேறு அகராதிகள் இத்துறையில் தோன்றியதாகத் தெரியவில்லை.

**கலைச்சொல்லகராதிகள்** (Glossaries)

இவை கலைச்சொற்கள், துறை வழக்குகள் முதலியவற்றை அகராதி அலகுகளாகக் கொண்டவை. இவ்வகையில் தமிழில் ஏராளமான அகராதிகள் தோன்றியுள்ளன. தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம் அரசியல், தாவரவியல் போன்ற பல துறைகளின் ஆங்கிலக் கலைசொல்லுக்கு நேரான தமிழ்ச்சொல் அமைத்துப் பல கலைச் சொல்லகராதிகளை வெளியிட்டுள்ளது. சக்திவேல் மானிடவியலுக்கும் அருணபாரதி மொழியியலுக்கும் தமிழ்நாடு அரசு சட்டத்தமிழுக்கும் இராமலிங்கனார் ஆட்சித் துறைத் தமிழுக்கும் என்று இன்னோரன்னோர் பல துறைகளுக்குக் கலைச்சொல்லகராதிகள் தொகுத்து வெளியிட்டுள்ளனர்.

**நூல் அகராதிகள்** (Text-dictionaries)

திட்டமான இலக்கண ஆராய்ச்சிக்கு நூல் அகராதிகள் இன்றியமையாதவை. பல ஆயிர வரிகளை உடைய நூல் முற்றிலும் மனப்பாடம் செய்து கொள்வதும், உரிய நேரத்தில் தேவையான சொற்களை நினைவுகூர்ந்து கூறுவதும் இன்றுள்ள கல்வி முறையில் இயலக்கூடியதன்று[15]. எனவே இத் தேவையை நிறைவேற்றும் முறையில் நூல் அகராதிகள் தோன்றலாயின. ஒரு குறிப்பிட்ட நூல் அல்லது ஒரு குறிப்பிட்ட ஆசிரியரின் நூல்(கள்) அல்லது, ஒரு குறிப்பிட்ட காலத்தில் தோன்றிய நூல்கள், அல்லது ஒரு குறிப்பிட்ட வகையைச் சார்ந்த நூல்கள் ஆகியவைகளுக்குச் செய்யப்படும். ஒரு நூலிற்காணும் சொற்களைத் தொகுக்கும் பழக்கம் ஆங்கிலேயர் தொடர்பால் தமிழகத்தில் ஏற்பட்டது எனலாம். ஒவ்வொரு நூலிலும் வரும் சொற்களை மட்டுமோ அல்லது கருத்துகளை மட்டுமோ

நூலில் அவை பயின்று வந்துள்ள இடக்குறிப்புடன் தரும் அக ராதி சொற்பொருள் குறிப்பு அகராதி (Concordance) ஆகும். இவ்விரு வகையுள் சொற்கள் கொடுக்கப்பட்டிருப்பது சொற் குறிப்பு அகராதி (verbal concordance) ஆகும். கருத்து கொடுக்கப்பட்டிருப்பது பொருள் குறிப்பு அகராதி (Real Concordance) எனப்படும். ஒவ்வொரு நூலிலும் காணப்படும் பெயர்கள், அருஞ்சொற்கள் ஆகியவற்றை வரும் இடங்களுடன் தொகுக்கப் பெறுவது சொல்லடைவு (Index) ஆகும். ஜி. யூ. போப் திருக்குறளுக்கு அகராதியும் (Lexicon) சொற் பொருள் குறிப்பு அகராதியும் (Concordance) 1886இல் தொகுத்து வெளி யிட்டார். இதுவே தமிழில் வந்த முதல் நூல் அகராதியாகும். இவ்வாறே இவர் நாலடியாருக்கும் திருவாசகத்திற்கும் நூல் அகராதிகள் வெளியிட்டுள்ளார். உ.வே.சா. பதிப்புகளில் இடம் பெற்றுள்ள அருஞ்சொல் அகராதி முதலியன சொல் அடைவை யும் இவரது பதிப்பில் ஒவ்வொரு பாவின் கீழ் வரும் ஒப்புமைப் பகுதிகள் சொற்பொருள் குறிப்பு அகராதியையும் ஒத்தவை எனலாம். வா. மார்க்க சகாயஞ் செட்டியார் 1924இல் வெளி யிட்ட திருக்குறள் சொற்குறிப்பு அகராதி கலித்தொகைப் பதிப்பில் இடம் பெற்றுள்ள அரும்பதம் முதலியவற்றின் அகராதியை ஒத்தது ஆகும். முதன் முதலில் திருக்குறளின் சொற்கள் முழுவதையும் திரட்டிச் சொலலடைவை வெளியிட் டவர் சாமி. வேலாயுதம் பிள்ளை ஆவர். காலம் 1952. வி. ஐ. சுப்பிரமணியத்தின் புறநானூற்றுச் சொல்லடைவும், எஸ் வி. சுப்பிரமணியத்தின் அகநானூற்றுச் சொல்லடைவும் சிலம்புச் சொல்லடைவும், புதுவை பிரெஞ்சு இந்தியக் கலைக் கழகத்தின் பழந்தமிழ் நூற் சொல்லடைவும் குறிப்பிடத்தக் கவை. இத்துறையில் மிகுதியான நூல்கள் தோன்றியுள்ளன. பைபிளுக்குச் சொல்லடைவும் சொற்பொருள் குறிப்பு அகராதி யும் எனப் பல வந்துள்ளன.

இத்தகு அகராதிகள் பழைய இலக்கியங்களைச் செம்மை யாகப் பதிப்பிக்கவும் மொழி வரலாற்றை அறிந்து கொள் ளவும் வரலாற்று முறைப் பொருள் அகராதியை உருவாக்கவும் பெரிதும் பயன்படும். கேரளப் பல்கலைக்கழகமும் அண்ணா மலைப் பல்கலைக் கழகமும் இத்துறையில் பல நூல்களை வெளியிட்டுள்ளன.

**குறுக்க விளக்க அகராதி** ( Dictionaries of Abbreviation )

கி.மு., கி.பி., ஐ.நா., இ-ள்., எ-று., போன்ற குறுக்கங்கள் தமிழில் வழங்கி வரினும் இவற்றை விளக்கும் அகராதி இது வரை தோன்றவில்லை.

### மரபுச் சேர்க்கை அகராதிகள்

மொழியில் நிலைத்து விளங்கும் சொற்சேர்க்கை மரபுச் சேர்க்கை எனப்படும். பலசொல் அகராதி அலகுகளான இம் மரபுச்சேர்க்கையில் ஒரு சொல்லை நீக்கிவிட்டு அதற்குப் பதிலாக வேறு ஒரு சொல்லை அமைக்க முடியாது. அமைப்பின் பொருள் சிறப்பு அழியும். மண் குதிரை என்னும் மரபுச்சேர்க்கையைப் பொன்குதிரை என்றோ மண் கழுதை என்றோ வழங்கினால் பொருட்சிறப்பு அழியும். மரபுச் சேர்க்கையில் உள்ள சொற்களிலிருந்து சில சமயங்களில் நேரடியாகப பொருள் பெற முடியாது. அவை சேர்ந்து வேறு பொருளை உணர்த்தும். மண் குதிரை என்னும் மரபுச்சேர்க்கைக்கு மண்ணாலான குதிரை என்று பொருள் இல்லை; நம்ப இயலாத பொருள் என்றே பொருள். மரபுச் சேர்க்கையில் ஒருசொல் பொருளற்றதாக ஆகிவிடவும் வாய்ப்பு உண்டு. எடுத்துக்காட்டு: கரும்பலகை. இப்போது கருமை தவிர பிற வண்ணங்களிலும் கரும்பலகைகள் இருப்பதைக் காணலாம். மேலும் மரபுச் சேர்க்கைச் சொல்லுக்கு ஒரு பொருட் பன்மொழி உண்டு. காட்டு: விலைமகள் — —பரத்தை. இத்தன்மைத்தாகிய மரபுச் சேர்க்கைச் சொற்களைக் கொண்ட அகராதிகளைப் பின்வருமாறு பகுக்கலாம்: 1. மரபுத் தொடர் அகராதி(Dictionary of Idioms and phrases), 2. பழமொழி அகராதி(Dictionary of proverbs), 3. மேற்கோள அகராதி (Dictionary of Quotations), 4.ஒருபொருட் பன்மொழி அகராதி ( Ideological dictionary or Dictionary of Synonyms ) 5. எதிர்ச்சொல் அகராதி ( Dictionary of Antonyms ), 6. ஒலிக் குறிபபு அகராதி ( Dictionary of onamatopoeic words ), 7. பொருட்புல அகராதி ( Systematic Dictionary ).

### மரபுத் தொடர் அகராதி

இவ்வகையில் முதன் முதலாக யாழ்ப்பாணப் புத்தக சங்கத்தாரால் 1841இல் நூல் ஒன்று வெளியிடப்பட்டுள்ளது. இது ஆங்கிலம் - தமிழ் முறையில் அமைந்தது ஆகும். இதனையடுத்து 1881இல் சென்னையில் ஆங்கிலம்—தமிழ் மரபுத் தொடர்களைக் கொண்ட நூலைக் கிறித்தவ சங்க அச்சகம் வெளியிட்டது. 1900இல் இராமசாமி தீட்சிதர் தமிழ் மரபுத் தொடர் அகராதியை மொழி பெயர்ப்புக்கு உதவும் நோக்கில் தயாரித்து வெளியிட்டுள்ளார். தமிழ்ப பாதுகாப்புக் கழகம் 1939, 1953 ஆகிய ஆண்டுகளில் முறையே உவமை அகர வரிசை, மரபுத்தொடா அகர வரிசை ஆகிய நூலகளை வெளியிட்டுள்ளது. 1977இல் பூந்துறையான் ளெளியிட்டுள்ள ‘மரபுத்

தொடர்களும் சொற்றொடர்களும்' என்னும் அகராதியே இத்துறையில் இதுகாறும் வந்துள்ள அகராதிகளுள் பெரியது ஆகும். மேற்குறித்தவை தவிர இத் துறையில் பிற தோன்றியதாகத் தெரியவில்லை.

### பழமொழி அகராதி

பெர்சிவல் 1842—இல் வெளியிட்ட பழமொழியகராதி இவ்வகையில் முதலாவதாகும்.

தமிழ்ப் பழமொழிகளுக்கு ஆங்கில மொழி பெயர்ப்புள்ள இவ்வகராதி திருட்டாந்த சங்கிரகம்என்னும் பெயரில் 1873இல் சற்று விரிவாக வந்துள்ளது. இவ்வகராதியே மேலும விரிந்து 6000 பழமொழிகளைக் கொண்டதாய் 1874இல் சென்னையில் வெளியிடப்பட்டது. 1858இல் தமிழ்-பிரெஞ்சு முறையில் பழமொழிகளைக் கொண்ட அகராதி ஹேகென் (Haeghen) என்பவரால் தொகுத்து வெளியிடப்பட்டுள்ளது. 1872இல் சுப்பராயலு நாயகர் என்பவரால் 'உவமைச்சொல் அகராதி' என்னும் பெயரில் பழமொழியகராதி ஒன்று வெளியிடப்பட்டது. ஜென்சென் 1887இல் வெளியிட்ட பழமொழி அகராதியில் 3644 பழமொழிகள் பல வகைகளாகப் பகுக்கப்பட்டுள்ளன. இவற்றிற்கு விளக்கமும் மொழிபெயர்ப்பும் அடைவும செய்யப்பட்டுள்ளன. 1894இல லாஸரஸ் வெளியிட்ட பழமொழி அகராதி குறிப்பிடத்தக்கது. இதில் குறிப்புரையும் மொழிபெயர்ப்பும் இடம் பெற்றுள்ளன. அனவரத விநாயகம் பிள்ளை, நீலாம்பிகை அம்மையார் போன்ற பலரும் இவ்வகை அகராதியினை வெளியிட்டுள்ளனர். சைவ சித்தாந்த நூற் பதிப்புக் கழகம் சில பழமொழி அகராதிகளை வெளியிட்டுள்ளது. 1962இல் மாஸ்கோவிலிருந்து ஒரு பழமொழி அகராதி வெளிவந்துள்ளது.

### மேற்கோள் அகராதி

இவ்வகையில் தமிழில் மிகுதியாக அகராதி வரவில்லை. சிந்தனைக்களஞ்சியம்முதலிய ஒருசிலஅகராதிகளே வந்துள்ளன. இவையும் அகராதியியல் நெறியில் அமையவில்லை.

### ஒருபொருட் பன்மொழி அகராதி

இவ்வகையில் மணி அகராதி என்னும் பெயரில் அகராதியொன்று வெளிவந்துள்ளது.

### எதிர்ச்சொல் அகராதி

மு. சதாசிவம் இவ்வகையில் ஓர் அகராதி வெளியிட்டுள்ளார். வேறு அகராதி இவ்வகையில் தோன்றவில்லை.

### ஒலிக்குறிப்பு அகராதி

தமிழில் ஒரே ஓர் ஒலிக்குறிப்பு அகராதி உள்ளது. இதன் ஆசிரியர் மு. சதாசிவம்.

### பொருட்புல அகராதி

பொருட்புல அடிப்படையில் பாகுபாடு கொண்ட இரண்டு அகராதிகள் உள்ளன. 1908இல் வெளிவந்த சிவராமய்யாவின் தமிழ்-ஆங்கிலம்-தமிழ் அகராதியும் சதாசிவமும் சிவராமலிங்கமும் தொகுத்த பல்பொருள் ஆங்கிலத் தமிழ் அகரவரிசையும் (1962) இவ்வகையில் அடங்குவன.

### அடுக்கு மொழி அகராதி

மு. சதாசிவம் அடுக்குமொழிச் சொற்களை விளக்கும் அகராதி ஒன்றை வெளியிட்டுள்ளார்.

### எழுத்து வேறுபாட்டு அகராதி

ண - ன; ற - ர; ல - ழ - ள ஆகிய இன எழுத்துகளை வேறுபடுத்திப் பொருள் கூறும் புதுமுறை அகராதி ஒன்றை நடராசன் என்பவர் தொகுத்து வெளியிட்டுள்ளார்.

### சிலேடை அகராதி

சு. அ. இராமசாமிப் புலவர் சிலேடைச் சொற்களின் பொருள் விளக்கும் ஓர் அகராதியை உருவாக்கியுள்ளார்.

## விதிப்பு அகராதிகள்

இவ்வகை அகராதிகள் விதிப்பினை (Prescription) நோக்கமாகக் கொண்டவை. இவற்றை நான்கு வகைகளாகப் பகுக்கலாம்: 1. பயிற்று அகராதி, 2. வரிவடிவ அகராதி, 3. ஒலிப்பு அகராதி, 4. எதுகை மோனை அகராதி.

### பயிற்று அகராதி (Pedagogical Dictionary)

மொழியைப் பயிற்றும் நோக்கிற்காகப் பலநிலை (graded) அகராதிகள் தயாரிக்கப்படுவதுண்டு. இப்பயிற்று அகராதி வகையில் தமிழில் அகராதி ஏதும் இதுவரை தோன்றவில்லை.

**வரிவடிவ அகராதி** (Orthographical Dictionary)

இவ்வகராதி மொழியைக் கற்பிக்கும் நோக்கில் உருவாக்கப் படுவது ஆகும். இவ் வகையில் தமிழில் அகராதி ஏதும் இது வரை தோன்றவில்லை.

**ஒலிப்பு அகராதி** (Orthoepical Dictionary or Dictionary of Pronunciation)

மொழியில் சொற்கள் எப்படி எப்படி ஒலிக்கப்படுகின்றன என்பதை இவ்வகராதியில் காணலாம். அங்கெடெல் (Anketell) என்பவர் ஆங்கிலம்-தமிழ் ஒலிப்பு அகராதி ஒன்றை வெளி யிட்டுள்ளார். இதன் காலம் 1888 ஆகும், இதன் திருந்திய பதிப்பு 1898இல் வெளிவந்தது. மார்ட்டினெட் (Martinet) என்பவர் தமிழ்-பிரெஞ்சு ஒலிப்பு அகராதி ஒன்றினைத் தொகுத்துள்ளார். இதன் காலம் 1890-97 ஆகும். இவை தவிர வேறு அகராதிகள் இத்துறையில் தோன்றியதாகத் தெரியவில்லை.

**எதுகை மோனை அகராதி** (Reverse/Rhyme Dictionary)

1938இல் வெளிவந்த அப்பாய் செட்டியாரின் எதுகை அகராதி இத்துறையில் குறிப்பிடத்தக்கது.

## அகராதிப் பதிவின் பொது அமைப்பு

அகராதிப் பதிவு இரு பகுதிகளைக் கொண்டது : 1. சொல் விளக்கப் பகுதி (Lemma), 2. பொருள் விளக்கப் பகுதி (Explanatory Part)

**சொல் விளக்கப் பகுதி**

இப்பகுதியில் பொதுவாகப் பொருள் விளக்கத்திற்குரிய தலைச் சொல் (head-word), இதனுடைய ஒலிப்புமுறை, இலக் கணக் கூறு, சொற் பிறப்பு முறை, உடன் பிறப்பு மொழிகளின் ஒப்புமைச் சொல் அல்லது சொற்கள் ஆகியவை இடம்பெறும்.

**தலைச்சொல்**

பெயர்ச்சொல்லின் அடுக்கங்களுக்கும் (Paradigms) வினைச் சொல்லின் விகற்பங்களுக்கும் (Conjugations) ஏனைய வகைச் சொற்களுக்கும் அடிப்படையாக ஒரு வடிவம்(canonical forom) உண்டு. இவ் வடிப்படை வடிவமே அகராதியில் தலைச் சொல்லாக அமைக்கப்படும். மருந்துக்கு ; உண்டேன்; நல்லவை

போன்ற சொற்களுக்கு முறையே மருந்து, உண், நல் முதலியன அடிப்படைவடிவம். இவ்வடிப்படை வடிவத்தைத்தேர்ந்து அவற்றைத் தலைச் சொல்லாகஅமைக்கும் முறைதொடக்ககாலத்தமிழகராதி இயலில் காணப்படவில்லை. 17ஆம் நூற்றாண்டில் எழுந்த அகராதி மோனைக்ககராதி எதுகையில் 'அகல்வுற்று', 'செய்பொழில்', 'காண்போதல் உற்றார்' போன்றவை தலைச் சொற்களாக உள்ளன. 1862இல் வெளிவந்த வின்சுலோ தமிழ்-ஆங்கில அகராதியில் 'அசட்டை பண்ண', 'அசுமாற்றங் காட்ட', 'அபிமானக் குறைச்சல் பண்ணல்', 'அபிமானமுள்ள சிநேகிதன்' போன்றவை தலைச்சொற்களாக இடம் பெற்றுள்ளன. இத்தகு குறை கால அடைவில் நீங்கியது எனலாம். சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேரகராதியில் இத்தகு முறை இருப்பதாகத் தெரியவில்லை.

தலைச்சொல், தமிழன்றி வேறு சொல்லாயின் இதற்கு முன்னர் உடுக்குறியிட்டுக் காட்டும் முறை தமிழ் அகராதிகளில் காணப்பட்டது. இம்முறை 1779இல் தோன்றிய பெப்ரீஷியஸ் அகராதியில் இடம் பெற்றுள்ளது. வின்சுலோ அகராதியிலும் இம்முறையைக் காணலாம். சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்ப் பேரகராதியின் முதல் தொகுதியில் 506 பக்கங்கள் வரை இம்முறை பின்பற்றப்பட்டு வந்தது. பிறகு சொற்பிறப்புக் குறிப்பை நோக்கியே எளிதில் அறிந்துகொள்ள வாய்ப்பு இருக்கையில் உடுக்குறி தேவையற்றது என முடிவு செய்யப் பட்டுப் பின் இம்முறை நீக்கப்பட்டது குறிப்பிடத்தக்கது. ஒப்பு உருச்சொற்களை (Homonyms) வேறுபடுத்திக் காட்டும் முறையில் தலைச்சொல்லின் மேல் எண்ணிடும் நெறி தமிழ்ப் பேரகராதியில் இடம் பெற்றுள்ளது. காட்டுகள்:

பால்$^{1}$ , பால்$^{2}$ முதலியன. பிற அகராதிகளில் இத்தகு முறை இருப்பதாகத் தெரியவில்லை.

**ஒலிப்பு முறை**

அச்சான முதல் அகராதியாகிய புரோயன்சாவின் தமிழ்-போர்ச்சுகீசிய அகராதியில் தமிழ்ச் சொற்கள் போர்ச்சுகீசிய அகர நிரலில் அமைக்கப் பட்டுப் பொருள் விளக்கம் கூறப் பட்டுள்ளன. தமிழ் அகர நிரலைப் பின்பற்றாமல் தமிழ்ச் சொற்களுக்குப் போர்ச்சுகீசிய அகர நிரல் அமைத்தமைக் கான காரணத்தை ஆசிரியர் தமது முன்னுரையில் நன்கு விளக்கியுள்ளார். 'சுரம்' என்னும் தமிழ்ச் சொல்லைப் படிக்கும்போது churam, xuram, juram, suram எனப் பலவாறாகப் படிக்க ஏதுவாகும். போர்ச்சுகீசியர்களுக்கென்று உருவாக்கப்

பட்ட இவ்வகராதியில் போர்ச்சுகீசிய அகர நிரலில் தமிழ்ச் சொற்களை நிறுத்துவதால் சரியான ஒலிப்பை அவர்கள அறிந்து கொள்ள இயலும் எனக் கருதி அம்முறையில் அவ்வக ராதி அமைக்கப்பட்டது. அங்கெடெல் என்பார் ஆங்கிலம்-தமிழ் ஒலிப்பு அகராதியை உருவாக்கி 1888இல் வெளியிட்டார். தமிழ் பிரெஞ்சு ஒலிப்பு அகராதி மார்ட்டினெட் என்பவரால ஆக்கப்பட்டது. சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்ப் பேர கராதியில் எழுத்து பெயர்ப்பு (transliteration) தரப்பட்டுள்ளது. ஒலிப்பு முறை சுட்டும் நெறி தமிழ் அகராதியியலில் இன்னும் தோன்றவில்லை எனலாம்.

### இலக்கணக் கூறு

இலக்கணக்கூறு ராட்லர், வின்சுலோ அகராதிகளிலும தரங்கம்பாடி அகராதியிலும் தமிழ்ப் பேரகராதியிலும் குறிக் கப்பட்டுள்ளது. ஏனைய அகராதிகள் இதில் ஆர்வம் கொண் டனவாகத் தெரியவில்லை. இலக்கணக் கூறுகளுள் வினைச் சொல்லைக் குறிக்கும் முறையில் நேர்ந்த வளர்ச்சி குறிப்பிடத் தக்கது. இதனை இங்கு ஆராயலாம்.

நிகண்டுகளில் வினைச்சொற்கள் தொழிற் பெயர் வடிவில் இடம் பெற்றன. இம்முறையையே பின்பற்றிச் சதுர்அகராதியி லும் (கி.பி. 1732) பெஸ்கி பெயர் வடிவிலேயே வினைகளை அமைத்தார். எனினும், பொருள் கூறுமிடத்து ஏவல், வினை யெச்சம் என்று குறிப்பு அளித்துள்ளார். பெப்ரீஷியஸ் அக ராதி (கி.பி. 1779), கிரால் என்பவர் வகுத்த வினையடி வாய் பாட்டின் வழி வினையைக் குறித்துள்ளது. கிரால் முறை வரு மாறு:

**1. மென்மை வடிவு**

| எண் | வேர்ச் சொல் |
|---|---|
| I | செய்<br>ஆள், ஆளு<br>கொல், கொல்லு |
| II | அறி |
| III | ஆக்கு |
| IV | நகு |

**2. இடைமை வடிவு**

V { a { உண், உண்ணு / தின் } ; b { கேள், கேளு / கல் } }

**3. வன்மை வடிவு**

VI தீர்

VII நட

மேற்காட்டிய I முதல் VII எண் வரை காட்டப்பட்டுள்ள வினையடி வாய்பாடுகளின் எண் கொண்டு வினைப் பகுதி களைப் பெப்ரீஷியஸ் அகராதி விளக்குகிறது. இவ்வாய் பாடுகள் வினை விகற்பங்களின் போக்கினை அறிவிக்கும் ஒரு குறிப்பாக உள்ளன[17]. பெப்ரீஷியஸ் அகராதியில் வினைச் சொல் ஏவல் வடிவில் தரப்பட்டுள்ளது. இதனையடுத்து மேற் காட்டிய வாய்பாட்டுள் ஏற்ற எண்ணும் செயப்படு பொருள் குன்றிய/ குன்றா வினை என்னும் குறிப்பும் தரப்பட் டுள்ளன. காட்டு;

வரி, II v.t.

ராட்லர் (கி. பி. 1840), வினையின் நிகழ்கால வடிவத் தைக் காட்டி அதனோடு ஏனைய இறந்தகால, எதிர்கால இடை நிலை விகுதி வடிவங்களையும், இடைநிலை எச்ச விகுதி வடி வங்களையும் காட்டிச் சுருக்கக் குறிப்பு தந்துள்ளார். இதன் கீழ் ஏனைய வினை விகற்பங்களையும் தொடர் வடிவங்களை யும் சிறிது உள்ளடக்கி அமைத்துள்ளார். அன்றியும், அவ்விகற் பங்களைத் தனித்தும் அகராதி அடைவில் கொடுத்து அவ்விடங் களில் பொருள் சுட்டாது நிகழ்கால வினைவடிவங்களை நோக்குமாறு குறிப்புக் கொடுத்துள்ளார். கிராலின் வினையடி வாய்பாட்டை இவர் பின்பற்றவில்லை. காட்டு:

வரிகிறது; v.a. Pr. ரித்தேன் Fut. ரிவேன்.

Imp. ரி, Inf. ரிய.

வின்சுலோ (1862) வினைப் பகுதிகளை அடுத்து முக்கால முற்றுகள், நிகழ்கால வினையெச்சம் ஆகிய வடிவங்களையும் உடன் கொடுத்துள்ளார். அன்றியும், அதன் கீழ் அவ் வினைப் பகுதியோடு வரும் ஒரு சில வழக்குத் தொடர்களும் உடன் அமைக்கப்பட்டுள்ளன. காட்டு:

ஆழ்த்து, கிறேன், ஆழ்த்தினேன், வேன், ஆழ்த்த.

v. a. To sink into the earth or water, to immerse, plunge, involve,தாழ்க்க 2. To bind or build, கட்ட, செருக்காழ்த்தி விடல், Do not plunge into pride. (நன்னெறி).

சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்ப் பேரகராதி 'கிரால்' முறையில் கொடுக்கப்பட்டுள்ள 12 வினையடிகளையும் பன்னிரு வாய்பாடகவும், இப்பன்னிரு வாய்பாட்டில் அடங்காத வினைகளை 13 ஆம் வாய்பாடாகவும் கொண்டு பின்வருமாறு 1 முதல் 13 வரை எண்ணிட்டுக் காட்டியுள்ளது;

1. செய், 2. ஆள், 3. கொல், 4. அறி, 5. ஆக்கு, 6. நடு, 7. உண், 8. தின், 9. கேள், 10. கல், 11. தீர், 12,நட,13. தா, சா, காண் (இவை முதனிலை திரிந்தும் பிறவாலும் வேறுபடும் வினைகள்).

தமிழ்ப் பேரகராதியில் பெப்ரீஷியஸ் முறையைப் போல வினைப்பகுதியை மட்டும் காட்டாது - 'தல்' | 'த்தல்' சேர்த்துக்காட்டப்பட்டுள்ளது.பெப்ரீஷியஸ்அகராதியைப்பார்த்துத் தமிழ்ப் பேரகராதி செயப்படுபொருள் குன்றிய | குன்றா வினை என்னும் குறிப்பு சுட்டுதலை மேற்கொண்டதாகத் தெரிகிறது[18]. தமிழ்ப் பேரகராதியிலிருந்து ஒரு காட்டு:

வரி 2 - தல் vari- 4 v. tr.

**சொற்பிறப்பு முறை முதலியன**

சொற்பிறப்பு முறையைக் கூறும் பகுதியும் உடன் பிறப்பு மொழிகளின் ஒப்புமைச் சுட்டலும் பொருள் விளக்கத்திற்கு முன்போ பின்போ மேற்கத்திய அகராதியியலில் அமைக்கப்பட்டுள்ளன. தமிழிலும் இவ்விரு முறைகளும் உள்ளன. இவை தமிழ்ப் பேரகராதியில் பொருள் விளக்கப் பகுதிக்கு முன்னர் அமைக்கப்பட்டுள்ளன. காட்டு:

வரி2 - vari -, 4v. tr. வரி1 [T. vrayu].

வின்சுலோ அகராதியில் பொருள்விளக்கப் பகுதியின் இறுதியில் இவை அமைந்துள்ளன. காட்டு:

ஆலிங்கனம்,

...............

...............

ALINGANA.

சொற்பிறப்பு முதலியன சுட்டும் பகுதி தமிழ் அகராதியியலில் அருகிய வழக்கு ஆகும்.

**பொருள் விளக்கப் பகுதி**

தலைச் சொல்லின் பொருள் விளக்கும் இப் பகுதியில் பொருள் வரையறை (lexicographic definition), படம் (picture) மேற்கோள் அல்லது பொருட்சூழல் (context), வழக்குப் புலக் குறிப்பு (label) முதலியன இடம் பெறும்.

**பொருள் வரையறை**

அகராதியில் பொருள் வரையறை 1. அறுதியுடையதாக (specific) இருக்க வேண்டும்; குன்றக் கூறல் (underspecificity), மிகைபடக் கூறல் (overspecificity) ஆகிய குற்றங்கள் நேராதவாறு போதுமான அறுதியுடையதாக இருக்க வேண்டும். 2. தலைச் சொல்லினும் எளிய சொல்லால்/சொற்களால் பொருள் வரையறை அமைய வேண்டும். 3. பொருள் வரையறையில் இடம் பெறும் சொல்/சொற்கள் தலைச்சொல்லாக அவ்வகராதியில் இருத்தல் வேண்டும். 4. பொருள் மயக்கம் தோன்றாதவாறு வரையறை செய்யப்பட வேண்டும். 5.தலைச் சொல்லில் இடம் பெற்றுள்ள சொல்/சொற்கள் மீண்டும் (circularity) பொருள் விளக்கத்தில் இடம் பெறக் கூடாது[19]. இவ்வடிப்படையில் தமிழ் அகராதியியலைக் கூர்ந்து ஆராயின் மிகப் பல அகராதிகள் குறையுடையனவாகவே உள்ளன என்பது தெளிவாகும். காட்டாகத் தமிழ்ப் பேரகராதியின் பின்வரும் பதிவை நோக்கலாம்:

மெட்டு - 1. கௌரவம் Honour
2. இரீதி Fashion, style
3. பாட்டின் இராகப் போக்கு Tune of a song, rhythm.

இம் மூன்று பொருள்களுள் இரண்டாவது பொருள் எளிதில் விளங்கவல்லது அன்று. அருகே உள்ள ஆங்கிலச் சொற்களால் பொருளை அறிந்து கொள்ளும் நிலை உள்ளது. மேலும், 'இரீதி' என்னும் தலைச்சொல்லை நோக்கிப் பொருள் தெளியலாம் என முனைந்தால் அச்சொல்லுக்குப் 'பித்தளை' என்னும் ஒரே ஒரு பொருள் மட்டும் இவ்வகராதியில் தரப்பட்டுள்ளது. இத்தகு நிலை தமிழ் அகராதியியலில் பரவலாகக் காணக் கிடக்கிறது.

**பொருள் விளக்கும் படம்**

கருத்துப் படங்கள் வாயிலாக மட்டுமன்றிக் கண்ணுக்குப் புலனாகும் படத்தின் வாயிலாகவும் அகராதியியலில் பொருள்

விளக்கும் முறை உள்ளது. இம்முறை மிகுதியாகத் தமிழ் அகராதியியலில் இடம் பெறவில்லை. எனினும், இராமநாதனின் (1909) தமிழ் அகராதி, எதிராஜுலு நாயுடுவின் (1915) தமிழ் அகராதி முதலியன சொற்பொருள் விளக்கத்திற்கு உதவும் வகையில் படங்களைக் கொண்டுள்ளன.

### மேற்கோள் அல்லது பொருட்சூழல்

பொருள் மயக்கம் தோன்றாமல் இருக்கவும் சொல் வழக்கைத் தெளிவாக அறியவும் வழி கோலுவதற்குப் பொருள் வரையறையை அடுத்துப் பொருட் சூழல் குறிப்பது அகராதியியல் நெறியாகும். இலக்கிய ஆட்சியையோ பேச்சு வழக்கு ஆட்சியையோ பொருட்சூழலுக்குக் கொள்ளலாம். ஐரோப்பியர் தொகுத்த அகராதிகளில் பெரும்பான்மை பேச்சு வழக்கு ஆட்சியும் சிறுபான்மை இலக்கிய ஆட்சியும் உள்ளன. 'ஆலி' என்னும் வினைக்கு வின்சுலோ அகராதி 'களிக்க' எனப் பொருள் கூறி 'ஆலிக் குமந்தணர் வாழ்கின்றதில்லை' என்பதனைச் சுட்டி அடைப்புக்குள் 'திருப்பல்லாண்டு' எனக் குறித்துள்ளது. இவ்வகராதியே 'ஆலை' என்னும் சொல்லுக்குப் பொருள் கூறுமிடத்து 'ஆலையில்லாவூருக்கிருப்பைப் பூச்சருக்கரை' எனப் பேச்சுவழக்கைக் காட்டுகிறது. 1910-20 ஆம் ஆண்டுகளில் வந்த சங்க அகராதியே முதன் முதல் விரிந்த அளவில் இலக்கிய மேற்கோள்களைக் காட்டிய அகராதியாகும். இன்றுள்ள நூல்களுள் தமிழ்ப் பேரகராதியே மேற்கோள் சுட்டும் நெறியில் முன் நிற்கிறது எனலாம். இது இலக்கிய ஆட்சி, மக்கள் வழக்கு ஆகிய இரண்டிற்கும் முதன்மை தந்துள்ளது.

### வழக்குப் புலக்குறிப்பு

ஒருசொல் எத்துறையைச் சார்ந்தது, எந்தப் பகுதி மக்களால் வழங்கப்படுகிறது முதலியவற்றை அறிந்து கொள்ளத் துணை செய்யும் குறிப்பு அகராதியில் இடம் பெறுவதுண்டு. இது வழக்குப் புலக்குறிப்பு எனப்படும். இது மூவகைப்படும்: (1) தகுதிப் புலக்குறிப்பு (Status label), (2) வட்டாரப் புலக் குறிப்பு (Regional label), (3) துறைப்புலக் குறிப்பு (Subject label). தகுதிப் புலக் குறிப்பு என்பது பேச்சு வழக்கு (Colloquial), குறுமொழி வழக்கு (Slang), அருகிய வழக்கு (archaic) வீழ்ந்த வழக்கு (obsolete) முதலியவற்றின் இனம் சுட்டும். வட்டாரப் புலக் குறிப்பு என்பது ஒரு குறிப்பிட்ட சொல் எந்த வட்டாரத்தில் ஒரு குறிப்பிட்ட பொருளில் வழங்குகிறது எனச் சுட்டும். இசைத் துறை, தாவரவியல் துறை போன்ற துறைகளில் வழங்குதலைக் கூறுவது துறைப் புலக் குறிப்பாகும்.

தமிழ் அகராதியியலில் இவ்வழக்குப் புலக்குறிப்பு சிறப்பாகத் தமிழ்ப் பேரகராதியில் தான் இடம்பெற்றுள்ளது எனலாம். காட்டுகள்:

துறை வழக்கு: ஆகாயச் சக்கரம் - (Pros.) சித்திரக் கவிவகை.

வட்டார வழக்கு: அன்னியாயக்காரன் - வாதி. Nan.

தகுதி வழக்கு: அந்தி மந்தி - மாலை மயங்கற் பொழுது. Colloq.

**சொல் வைப்பு முறை**

தமிழ் அகராதியியலில் அகர நிரலில் சொல் வைப்பு முறை அமைந்துள்ளது. இவ்வகர நிரல் முறையில் பின்வரும் இரு வரிசைப்படியும் சொற்களின் வைப்பு முறை உள்ளது: 1. மெய்யெழுத்தையடுத்து உயிர் மெய் எழுத்துகளை அமைத்தல், 2. உயிர் மெய் எழுத்துகளை அடுத்து மெய்யெழுத்துகளை அமைத்தல். மேற்குறித்தவற்றுள் முதல் நெறியைத் தமிழ்ப் பேரகராதி கொண்டுள்ளது. இரண்டாவது நெறியை வின்சுலோ முதலிய அகராதிகள் கொண்டுள்ளன. தமிழ் நெடுங்கணக்குஅட்டவணையில் மெய்யெழுத்து இறுதியாகஉள்ளதால் உயிர்மெய்யை அடுத்து மெய் நிரலை அமைக்கும்முறை ஏற்பட்டிருக்கலாம். மெய்யிலிருந்துதான் உயிர்மெய் தோன்றுகிறது. எனவே மூலமாகிய மெய் முதலிலும் அதிலிருந்து தோன்றிய உயிர்மெய் பின்னும் அமைவதே முறை எனக் கருதி இந்நெறியைப் பின்பற்றும் நிலை ஏற்பட்டிருக்கக் கூடும். எனவே, தமிழ் அகராதியியலில் சொல் வைப்பு முறையில் ஒருமைப்பாடு இல்லை என்பதும் இப்போது வந்து கொண்டுள்ள அகராதிகளிலும் இவ்விரு வகை வைப்பு முறைகளும் உள்ளன என்பதும் கருதத்தக்கவை.

**பொருள் வைப்பு முறை**

ஒரு சொல்லுக்குப் பல பொருள்கள் இருக்கும் நிலையில் அப்பொருள்களையும் அகர நிரலில் அமைப்பது பல்வகைப் பொருள் வைப்பு முறைகளுள் ஒன்றாகும். இம்முறையைச் சதுர் அகராதி பின்பற்றியுள்ளது. சொற்பொருளைக் கால நிரலில் அமைத்தல், சொல்லுக்குரிய முதன்மைப் பொருளை முன்னும் அதிலிருந்து வளர்ந்த பொருளைத் தருக்கரீதியில் பின்னும் வைத்தல், சொற்பொருளின் பயிற்சி மிகுதிக்கு ஏற்பப் பொருள்களை அமைத்தல் முதலிய பல பொருள்வைப்பு முறைகள் உள்ளன. இப் பொருள் வைப்பு முறை குறித்துத் தமிழ்ப் பேரகராதியினர் ஆராய்ந்து பின்வரும் நெறிகளைக் கைக்கொண்டனர்:[20]

1. வரலாற்று முறையில் முடிந்த இடங்களில் எல்லாம் பொருள் விளக்கம் செய்யப்பட்டுள்ளது.

2. வரலாற்று முறையில் பொருள் வைப்பு இயலாதபோது தருக்கரீதியில் பொருள்களை ஒன்றோடொன்று இயைபு படுத்தி அம்முறையில் பொருள்கள் அமைக்கப் பட்டுள்ளது. இவ்விடத்தும் பயிற்சி மிகுதியின் அடிப் படையில் வைப்பு முறை மாற்றப்பட்டுள்ளது.

3. தமிழ் மூலம் அல்லாத சொற்களின் பொருள்களை அமைக்கையில் மூல மொழியில் அச்சொற்கள் கொண் டுள்ள பொருள்கள் முதலில் அமைக்கப்பட்டுள்ளன. இவ் விடத்துக்காலநிரல் கருத்திற்கொள்ளப் பட வில்லை.

பொருள் வைப்பு முறையில் மிகப்பல அகராதிகள் கருத்து செலுத்தியதாகத் தெரியவில்லை.

இதுகாறும் கூறிவற்றால், தமிழ்ப் பேரகராதியே பேரளவு அகராதியியல் நெறியில் நடக்கிறது எனத் தெளியலாம். இவ் வகராதி வெளிவரக் காலக் கழிவு ஆனதைக் கேலி செய்து ஊழியன் ஏடு ஒரு கருத்துப் படம் (ப 108 காண்க.) வெளி யிட்டுள்ளமை இங்கு நினைக்கத்தக்கது. இவ்வகராதியைத் திறனாய்வு செய்து தேவநேயப்பாவாணர் தமிழிலும் ஆங்கிலத் திலுமாக இரு நூல்களை எழுதியுள்ளதும் கருதத்தக்கது.

இன்றைய காலத்தின் தேவையை நிறைவு செய்ய மேலும் பல அகராதிகளின் தோற்றம் இன்றியமையாதது. ஆக்சு போர்டு பல்கலைக்கழகம் வெளியிட்டுள்ள வரலாற்று முறைப் பொருளகராதி போன்று, பூனா டெக்கான் கல்லூரி வெளி யிட்டு வரும் வடமொழி வரலாற்று முறைப் பொருள் அகராதி போன்று, தமிழில் ஓர் அகராதி தோன்ற வேண்டும். அப்போது தான் மொழி வரலாற்றையும், பண்பாட்டு வரலாற்றையும் நன்கு அறிந்து கொள்ள இயலும். தமிழைக் கற்க விழையும் அயல் மொழியினருக்கு இப்போதுள்ள அகராதிகள் பெரிதும் பயன்படும் பாங்கில் இல்லை. இவை வெறும் குறிப்பு நோக் கீட்டுக் கருவியாகவே உள்ளன; நடைமுறைப் பயன்பாட்டுக்கு உதவும் நெறியில் இவை அமையவில்லை. ஹார்ன்பியின் அகராதியைப் போன்று மொழி கற்போர் பயன்கொள்ளும் வகையில் ஓர் அகராதி தோன்ற வேண்டும்[21].

# தமிழ் அகராதி.




சென்னை அரசாங்கத்தார் பல ஆண்டுகளாகத் தமிழ் அகராதி ஒன்றைத் தயாரச்செய்து வருகின்றார்கள். அது முற்றுப்பெற இன்னும் எத்தனை பல ஆண்டுகள் ஆகுமென்பது எவருக்குந் தெரியாது. அவ்வகராதி வெளியீட்டிற்காக ஒரு கூட்டத்தையும் அரசாங்கத்தார் நியமித்திருக்கின்றனர். அதன் பொருட்டு ஏராளமான பணங்களைப் பைபையாகக் கொண்டுபோய் அகராதியென்னும் பெருவாய்கொண்ட மிடாவில் கொட்டுகின்றனர். அங்கிருந்து சிலர் பணங்களை முட்டைகட்டிக்கொண்டு போகின்றனர். பயனைக்காணவில்லை.

— நன்றி : **ஊழியன்** 17-11-1925 ப. 7

## கலைக்களஞ்சியங்கள்

நிகண்டுகளில் சொற்பொருள் கூறும் அகராதிப் பண்பும் சொல்லால் குறிக்கப்படும் பொருள் (Thing) பற்றிக் கூறும் கலைக்களஞ்சியப் பணபும் உள்ளன எனலாம். காட்டாகப் பின்வரும் திவாகர நூற்பாவைக் கொள்ளலாம்[22].

**பொருளின் பொலிவும் சொல்லின் செல்வமும்**
**தொடையுந் தொடைக்கண் விகற்பமும் துதைந்து**
**உருவக முதலாம் அலங்காரம் உட்கொண்டு**
**ஓசை பொலிவுற் றுணர்வோ ருளங்கட்கும்**
**மாகட லமிழ்தம்போற் பாடுதல் மதுரகவி.**

இதனைக் கருதியே 'நிகண்டுகள்' இக்காலத்திலுள்ள வெறும் அகராதிகள் போல் சொற்களுக்குப் பொருள் மாத்திரம் கொடுக்கும் நூல்களாக இல்லாமல், அக்காலத்திலுள்ள அறிவின் களஞ்சியங்களாகவே இருக்க வேண்டுமென்று ஆக்கப் பெற்றன

கலைக்களஞ்சியங்கள்
ENCYCLOPAEDIAS

- பொதுக்கலைக் களஞ்சியங்கள்
  General Encyclopaedias
  - தகவல் தொகுப்புக் கலைக்களஞ்சியங்கள்
    Thesaurus Encyclopaedias
  - கருத்து பரப்புக் கலைக்களஞ்சியங்கள்
    Propagandist Encyclopaedias
- சிறப்புக் கலைக்களஞ்சியங்கள்
  Resricted/Special Encyclopaedias
  - தகவல் தொகுப்புக் கலைக்களஞ்சியங்கள்
    Thesaurus Encyclopaedias
  - கருத்து பரப்புக் கலைக்களஞ்சியங்கள்
    Propagandist Encyclopaedias

என்பர்[23]. எனவே, நிகண்டுகள் அகராதி, கலைக் களஞ்சியம் இவற்றின் தோற்றத்திற்கு அடிப்படை எனலாம்.

சொற்களுக்குரிய பொருளை நிகண்டுகளின் மூலம் தெரிந்து கொண்ட பழங்காலத்து மாணவர்கள் இலக்கியங்களில் சொல்லப்பட்டுள்ள பெயர்கள், கதைகள், வரலாறுகள், பழக்கவழக்கங்கள் முதலியவற்றையும் வாழ்க்கைக்கு வேண்டிய மற்ற அறிவுச் செய்திகளையும் தாம்தாம் பாடங் கேட்கும் ஆசிரியர் வாயிலாகத் தெரிந்து கொண்டனர் பல காலமாக உலகின் பல பகுதிகளில் நிலவிய இந்தக் கல்வி முறை அண்மைக்காலத்தில் பெரிய மாறுதல்களுக்கு உட்பட்டது. இப்புதிய கல்வி முறையில் வேண்டிய செய்திகளை உடனடியாக எளிதில் அறிந்து கொள்ள ஒரு வழி கண்டாக வேண்டும் என்னும் நெருக்கடி ஏற்பட்டது. வெவ்வேறு நாடுகளில் வெவ்வேறு கால கட்டங்களில் ஏற்பட்ட இந் நெருக்கடி தமிழகத் தமிழ்ப் பயிற்சியைப் பொறுத்தவரை 19 ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் மிகுதியாக உணரப்பட்டது[24]. இந்த உணர்ச்சியின் விளைவாகக் கலைக்களஞ்சியம் போன்ற நூலகள் எழுந்தன.

அபிதான கோசம், தமிழ்க் கலைக்களஞ்சிய முன்னோடி எனலாம். இலக்கியப் பயிற்சிக்குத் துணைசெய்யக்கூடிய புராண இதிகாச இலக்கியச் செய்திகளைக் கொண்டு இலக்கியக் களஞ்சியமாக இது உள்ளது. இதன் காலம் 1902. இதனையடுத்து வடமொழி, தமிழ் இலக்கியங்களோடு தொடர்புடைய பொருளை மட்டும் விளக்கும் சிறப்புப் பெயர் அகராதி (1906) தோன்றியது. 1934இல் தோன்றிய அபிதான சிந்தாமணியே இலக்கியச் செய்தியோடு அறிவியல் துறைப் பொருள்களையும் முதன் முதலாகச் சேர்த்து விளக்கம் தந்தது. தமிழின் முதல் கலைக்களஞ்சிய முயற்சியாக இதனைக் கொள்ளலாம். தொடர்ந்து தோன்றிய வேறு சிறப்புப் பெயர் அகராதி, தொகையகராதி, புலவர் அகராதி, இலக்கிய அகராதி போன்றவை கலைக்களஞ்சியப் பண்பு கொண்டவையாக விளங்கின. 1916 ஆம் ஆண்டு விவேக போதினி இதழில் பிரிட்டானியக் கலைக்களஞ்சியம் போலத் தமிழிலும் ஒரு கலைக்களஞ்சியம் கொணரப் பெத்தாச்சி செட்டியார் என்பவர் பொருளுதவி செய்ய முன்வந்துள்ளார் என ஒரு குறிப்பு உள்ளது[25]. ஆனால் இக் கலைக்களஞ்சியப் பணி நடந்ததாகத் தெரியவில்லை.

சென்னை பெரம்பூரிலிருந்து 'தமிழ்க் களஞ்சியம்' (Tamil Cyclopedia) என்னும் பெயரில் 1917ஆம் ஆண்டில் மாத இதழ் வெளிவந்தது. இன்றுள்ள கலைக்களஞ்சியம் என்னும்

பொருளில் 'களஞ்சியம்' என்னும் சொல்லை இவ்விதழ்தான் முதன் முதல் பயன்படுத்தியதாகத் தெரிகிறது. இவ்விதழில் 'ஆங்கில பாஷையில் பிரசுரமாய்ப் பிரபலமாயிருக்கும் சேம் பர்ஸ் சைக்ளோபீடியா ஆப் இங்கிலீஷ் லிடரேசர் (Chambers Cyclopedia of English Literature) போக்கைப் பின்பற்றி எழுதப் பெற்று வருகிறது. விஷய அடக்கம்: 1. தமிழ் இலக்கிய இலக்கண வியாஸங்கள், 2. அகத்தியர் முதற் கொண்டு தற்கால தமிழாசிரியர் ஈறாக சரித்திரம், 3. அகத்தியம் முதற் கொண்டு தற்கால தமிழ் நாவல்கள் உட்பட ஆராய்ச்சியும் சங்கிரகமும்' என்று குறிக்கப் பட்டுள்ளது[26]. கலைக்களஞ்சியப் பணியை இதழ் வாயிலாகச் செய்த ஒரே முயற்சி இதுதான் என்பது குறிப்பிடத்தக்கது. இவ்விதழ் சில காலம் வந்து இடையில் நின்று விட்டதாகத் தெரிகிறது.

தமிழ் வளர்ச்சிக்கழகம் முறையான முதல் கலைக்களஞ் சியத்தைத் தொகுத்து வெளியிட்டுள்ளது. இதன் 10 தொகுதி கள் 1954 முதல் 1968 வரை வெளிவந்தன. இக் கழகமே 10 தொகுதிகளைக் கொண்ட குழந்தைகள் கலைக் களஞ்சி யத்தையும் வெளியிட்டுள்ளது நாடக கலைக்களஞ்சியம், குழந்தை உள்ளக் களஞ்சியம், இஸ்லாமியக் கலைக்களஞ்சியம் போன்ற பல தோன்றியுள்ளமை குறிப்பிடத்தக்கது.

கலைக்களஞ்சியங்களைப் பொதுக்கலைக்களஞ்சியங்கள், சிறப்புக் கலைக்களஞ்சியங்கள் என இருவகையாகப் பகுக் கலாம். பொதுக் கலைக்களஞ்சியங்கள் பொதுவாக எல்லாத் துறைகளையும் பற்றிய செய்திகளைக் கொண்டிருக்கும். சிறப்புக் கலைக்களஞ்சியங்கள் ஏதேனும் ஒரு குறிப்பிட்ட துறை யினைச் சார்ந்தவையாக இருக்கும்.

**பொதுக் கலைக்களஞ்சியங்கள்**

தகவல் தொகுப்புக் கலைக்களஞ்சியங்கள், கருத்துப் பரப்புக் கலைக்களஞ்சியங்கள் எனப் பொதுக்கலைக்களஞ்சியங் களை இரண்டாகப் பாகுபடுத்தலாம். கருத்துப் பரப்புப் பொதுக்கலைக்களஞ்சியம் இதுகாறும் தமிழில் தோன்றியுள்ள தாகத் தெரியவில்லை.

தமிழ் வளர்ச்சிக்கழகம் வெளியிட்டுள்ள கலைக்களஞ்சியம், குழந்தைகள் கலைக்களஞ்சியம், ஸ்ட்ராவுட் தொகுத்த மாக் மில்லன் சிறுவர், சிறுமியர் கலைக்களஞ்சியம் ஆகியன தகவல் தொகுப்புக் கலைக்களஞ்சிய வகையைச் சார்ந்தவை.

**சிறப்புக் கலைக்களஞ்சியங்கள்**

இவற்றையும் தகவல் தொகுப்புக் கலைக்களஞ்சியங்கள் எனவும் கருத்துப் பரப்புக் கலைக்களஞ்சியங்கள் எனவும்

இரண்டாகப் பகுக்கலாம். குழவி உளவியல் பற்றிய 'குழவி உள்ளக் கலைக்களஞ்சியம்' (1950), தேர்ந்தெடுத்த 1000 பொருள் பற்றிய 'சதாங்கம்' என்னும் கலைக்களஞ்சியம (1956), பாபநாசம் தொகுத்த 'நாடக கலைக்களஞ்சியம்' (1964) ஆகியன சிறப்புத் தகவல் தொகுப்புக் கலைக்களஞ்சியங்கள் ஆகும்.

பிரான்சு நாட்டில் 18ஆம் நூற்றாண்டில் ரூசோ, வால்டேர் அலெம்பர்ட், டர்கே, கியூனி போன்றோர் சமுதாயமறுமலர்ச்சி பற்றிய தமது புரட்சிகரமான நோக்குகளைக் கலைக்களஞ்சியம் ஆக்கி வெளியிட்டனர். இது பிரெஞ்சு புரட்சிக்கும் ஐரோப்பிய நாடுகளில் அறிவுப் புரட்சிக்கும் அடிகோலியது. இத்தகு பணியைச் செய்தவர்கள் 'கலைக்களஞ்சியக்காரர்கள்' என வழங்கப் பட்டனர். இவ்வாறு கருத்துப் பரப்பும் நோக்கில் தமிழில் 'பெரியார் களஞ்சியம்' வெளியிடப்பட்டுள்ளது எனலாம்.

**தொகுப்புரை**

1. நிகண்டுக் காலத்திலேயே தோன்றத் தொடங்கிய குறிப்புநோக்கீட்டு உணர்ச்சியின வளர்ச்சியாக அகராதிகள் தோன்றின.

2. நிகண்டுகளில் காணப் பெறும் சொற் பொருள் கூறும் பண்பும் கலைக்களஞ்சியப் பண்பும் முறையே அகராதிகள், கலைக்களஞ்சியங்கள் எழ அடிப்படையாயின.

3. தமிழில் தகுமொழி விளக்க அகராதிகள் சிலவும் மீவிளக்க அகராதிகள் பலவும் உள்ளன.

4. சொற்பிறப்பியல், ஒப்பியல் அகராதிகள் தமிழில் சில உள்ளன.

5. பலவகையான சிறப்பு அகராதிகள் தமிழில் தோன்றி யுள்ளன.

6. வரலாற்று முறைப் பொருளகராதி, குறுக்க விளக்க அகராதி முதலியன தமிழில் இல்லை. விதிப்பு முறை அகராதி கள் சரிவரத் தோன்றவில்லை. பல்வகைப்பட்ட பொது அகராதிகளும் சிறப்பு அகராதிகளும் இப்போது இருப்பினும இன்றைய தேவையை நிறைவு செய்யும் வகையில் மேலும் பல அகராதிகள் தோன்ற வேண்டியுள்ளன.

7. இன்றுள்ள அகராதிகளுள் சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேரகராதியே பேரளவு அகராதியியல் நெறியில் அமைநதுள்ளது.

8. கலைக்களஞ்சியப் பணி இதழ் வாயிலாகவும் மேற் கொள்ளப்பட்டுள்ளது.

9. பொது, சிறப்புக் கலைக்களஞ்சியங்கள் தமிழில் உள்ளன. இவையெல்லாம் தகவல தொகுப்புக் கலைக்களஞ் சியங்களாக விளங்குகின்றன. ஆனால், ஒரே ஒரு கலைக்களஞ் சியம் - பெரியார் களஞ்சியம்-மட்டுமே கருத்துப் பரப்புக்கலைக் களஞ்சியமாக விளங்குகிறது.

# முடிவுரை

'தமிழ் அகராதியியல் வளர்ச்சி வரலாறு' என்னும் இவ் வாயவின் பயனாகப் பின்வருவன பெறப்படுகின்றன:

1. சொற்பொருள் கூறும் துறை நூல்கள் தொடக்க காலத்தில் 'உரிச்சொல்', 'உரிச்சொற் பனுவல்' என வழங்கி வந்தன. 'நிகண்டு' என்னும் சொல் இறையனார் களவியல் உரை, திவாகரம், பிங்கலம் ஆகியவற்றில் இடம் பெற்றிருப் பினும் 16ஆம் நூற்றாண்டைச் சார்ந்த சூடாமணி நிகண் டில்தான் முதன் முதல் 'சொற்பொருள் கூறும் நூல்' என்னும் பொருளில் ஆளப்பட்டது. பிறகு 'நிகண்டு' என்பது பெருக வழங்கி நிலைத்தது. இப் பொதுப் பெயரா லேயே இன்றளவும் யாப்பு நடையில் அமைந்த சொற் பொருள் கூறும் நூல்கள் வழங்கப்படுகின்றன.

2. 'அகராதி' என்னும் சொல் முதன் முதலில் திருமந்திரத்தில் தான் இடம் பெற்றுள்ளது. அடுத்து 16ஆம் நூற்றாண்டில் தோன்றிய அகராதி நிகண்டில் இச்சொல் நிகண்டுக்கு அடையாக அமைந்தது. 17ஆம் நூற்றாண்டில் எழுந்த அக ராதிமோனைக் ககராதி எதுகை, பத்துச்சொல் அகராதி ஆகியவற்றில் இச்சொல் இடம் பெற்றிருப்பினும் 18ஆம் நூற்றாண்டில் சதுர் அகராதியில்தான் இச்சொல் இன்று வழங்கும் பொருளில் அறிமுகமாகியது. இதனையடுத்து இச்சொல் பெருக வழங்கி நிலைத்தது.

3. 'தமிழ்க் களஞ்சியம்' என்னும் பெயரில் 1917இல் ஒரு மாத இதழ் தொடங்கப் பெற்றது. இவ்விதழ்தான் முதன் முதல் இன்று வழங்கும் கலைக்களஞ்சியம் என்னும் பொருளில் 'களஞ்சியம்' என்னும் சொல்லை ஆண்டது. தமிழ் வளர்ச் சிக் கழகம் 'கலைக்களஞ்சியம்' என்னும் சொல்லை 1947 ஆம் ஆண்டுக்குப் பிறகு படைத்து ஆளத் தொடங்கியது. இவ் வழக்கே பெருக வழங்கி நிலைத்தது.

4. தமிழ் வரலாற்றில் சொற்பொருள் கூறும் துறைக்கு அடி கோலிய முதல் நூல் தொல்காப்பியம் ஆகும். சொல்லின் இலக்கணம், பொருளின் இலக்கணம், பலசொல் ஒரு பொருள், பொருட்பன்மை, எதிர்ப்பொருள், சொல் வழக்கு வரையறை, அகர நிரல், பொருள் சுட்டல், மரபு சுட்டல், ஒலிப்பு முறை காட்டல், சொற்களின் மூல வரலாறு குறித்தல் போன்ற மொழிப்பொருளியல், அகராதியியல் கூறுகளுள் சில தொல்காப்பியத்தில் உள்ளன.

5. நிகண்டுகளின் தோற்றத்திற்குத் தொல்காப்பியம் அடிப்படை.

6. இன்றுள்ள நிகண்டுகள் தவிர வேறு நிகண்டு(கள்) இருந்திருக்க வேண்டும் எனக் கருதுவதற்கு அடிப்படைகள் உள்ளன.

7. நிகண்டன் கலைக்கோட்டுத் தண்டனார் என்னும் புலவரின் பெயர், அவர் சார்ந்த சமயத்தாலும் பிறந்த ஊராலும் அமைந்தது. இவருக்கும் நிகண்டுக்கும் தொடர்பில்லை.

8. இறையனார் அகப்பொருள் உரையும், நன்னூல் விருத்தியுரைகளும் இடுகுறியாற் பெயர் பெற்ற நூல்களுக்குக் காட்டு தருமிடத்துக் குறிக்கும் 'நிகண்டு' என்பது விளங்கவில்லை.

9. முதன் முதலில் 'நிகண்டு' என்பது வடமொழியில் வேதத்திற்கு அங்கமாய், வைதிகச் சொற்களின் பொருளை உணர்த்தும் கருவி நூல்களுக்கே வழங்கி வந்தது. நாளடைவில் இது சொற்பொருள் உணர்த்தும் எல்லா நூல்களுக்கும் வழங்கத் தலைப்படலாயிற்று. புராணம், பிரபந்தம் முதலிய பெயர்களைப் போல இந் நிகண்டு என்னும் வடமொழிப் பெயரும் தமிழ் உலகில் மிகுதியாக வழங்கி நிலை பெற்று விட்டது. நிகழ்ந்தது, நீண்டது என்னும் தமிழ்ச் சொற்களின் திரிபே நிகண்டு எனக் கருதுவது வலிந்து கோடலாகத் தோன்றுகிறது.

10. திவாகரப் பொருட்பாகுபாட்டுக்குத் தொல்காப்பியம் அடிப்படையாகவும் ஏனைய நிகண்டுகளின் பொருட்பாகுபாட்டுக்குத் திவாகரம் அடிப்படையாகவும் விளங்குகின்றன.

11. நிகண்டுகளின் பொருட்புலப்பாகுபாடு பீட்டர் மார்க் ரோஜெட்டின் சொற்கருவூலப் [Thesaurus] பாகுபாட்டை ஒத்துள்ளது.

12. நிகண்டுகளில் வினைச் சொற்கள் தொழிற்பெயர் வடிவில் செயல் பற்றிய பெயர்த்தொகுதியில் அமைக்கப்பட்டுள்ளன.

13 நிகண்டுகளில் ஆசிரியம், வெண்பா, கலித்துறை, விருத்தம் முதலிய யாப்புகள் அமைந்துள்ளன.

14. நிகண்டுகளிலேயே அகர நிரல், குறிப்பு நோக்கீட்டு முயற்சிகள் தோன்றத் தொடங்கி விட்டன.

15. அகராதி நிகண்டில் முதன் முதலாக முதல் எழுத்து வரை அகர நிரல் அமைக்கப்பட்டது; பொதிகை நிகண்டில் இது முதலிரு எழுத்துகளுக்கு விரிந்தது.

16. நிகண்டுகளின் பதினோராம் தொகுதியாகிய ஒருசொல் பல்பொருள் பெயர்த் தொகுதி பொருள் கூறும் முறையில் அகராதியை ஒத்துள்ளது. அன்றியும் ஒருபொருள் பல் பெயர்த் தொகுதியில் கூறப்பட்ட சொற்களுக்கு அடைவாகவும் விளங்குகிறது. எனவே, இத்தொகுதியே மிகுதியாகப்பயிலப்பட்டது.

17. நிகண்டுகள் அனைத்துள்ளும் சூடாமணி நிகண்டே மிகுதியாகப் பயிலப்பட்டது. இதனால் இதற்குப் பிற நிகண்டுகளைக் காட்டிலும் மிகுதியாகப் பதிப்புகள் தோன்றியுள்ளன.

18. ஒருபொருள் பல்பெயர்த் தொகுதி, ஒருசொல் பல்பொருள் பெயர்த் தொகுதி, பல்பொருள் கூட்டத்து ஒருபெயர்த் தொகுதி ஆகிய முப்பெரும் பிரிவுகளைக் கொண்டு 'பூரண நிகண்'டாகத் திவாகரம், சூடாமணி நிகண்டு போன்றவை விளங்குகின்றன. சில நிகண்டுகள் மேற்குறித்த பிரிவுகளுள் ஏதேனும் ஒன்றையோ அல்லது இரண்டையோ கொண்டுள்ளன.

19. நிகண்டுகளில் காணப்பெறும் சொற்பொருள் கூறும் பண்பும் கலைக்களஞ்சியப் பண்பும் முறையே அகராதிகள், கலைக்களஞ்சியங்கள் எழ அடிகோலின.

20. சொற்பிறப்பியல், ஒப்பியல் அகராதிகள், தகுமொழி விளக்க அகராதிகள், மீவிளக்க அகராதிகள், ஒருமொழி, பன்மொழி அகரா்திகள், கிளைமொழி அகராதிகள், கலைச் சொல்லகராதிகள், நூல் அகராதிகள், மரபுத் தொடர் அகராதிகள், பழமொழி அகராதிகள், மேற்கோள் அகராதிகள், ஒருபொருட் பன்மொழி அகராதிகள், எதிர்ச்சொல், ஒலிக்

குறிப்பு, அடுக்குமொழி அகராதிகள், பொருட்புல அகராதிகள், எழுத்து வேறுபாட்டு அகராதிகள், சிலேடை அகராதிகள், எதுகை மோனை அகராதிகள் முதலிய பலவகை அகராதிகள் தமிழில் உள்ளன. வரலாற்றுமுறைப் பொருளகராதி, பயிற்றுமுறை அகராதி, வரிவடிவ அகராதி போன்றவை தமிழில் இல்லை.

21. அகராதியில் வினைச்சொற்கள் தொழிற்பெயராகவும் ஏவலாகவும் அமைந்துள்ளன. வினை விகற்பப் பகுப்பு அகராதியில் உள்ளது.

22. கலைக்களஞ்சியப் பணி இதழ் வாயிலாகவும் தமிழில் மேற்கொள்ளப் பட்டுள்ளது.

23. தமிழில் பல்வகைப்பொது, சிறப்புக் கலைக்களஞ்சியங்கள் உள்ளன. தமிழ் வளர்ச்சிக் கழகமே முறையான முதல் தமிழ்க் கலைக்களஞ்சியத்தை வெளியிட்டது.

24. தொல்காப்பியம் தொடங்கிப் பதினாறாம் நூற்றாண்டு வரை சொற்பொருள் உணர்த்தும் துறை செய்யுளில் அமைந்தது. அருஞ்சொற்கள் மட்டுமே பொருள் விளக்கத்திற்கு உரியனவாகக் கொள்ளப்பட்டன.

25. பதினேழாம் நூற்றாண்டு அகராதியியலில் சொற்பொருள் விளக்கம் செய்யுளாய் இல்லாவிடினும் ஏறத்தாழ நிகண்டு நடையிலேயே அமைந்திருந்தது ; எளிய சொற்களும் அகராதியில் இடம்பெறத் தொடங்கின.

26. பதினெட்டாம் நூற்றாண்டு, தமிழ் அகராதியியல் வளர்ச்சி வரலாற்றில் ஒரு திருப்பு முனையாய் அமைந்தது. சதுர் அகராதி பிற்கால அகராதிகளுக்கு வழிகாட்டியாய் விளங்கியது. மொழியில் உள்ள எல்லாச் சொற்களும் பொருள் விளக்கத்திற்கு உரியனவாகக் கொள்ளப்பட்டன. எளிய உரைநடை அகராதியியலில் இடம் பெற்றது. குறிப்பு நோக்கீட்டுக் கருவிகளாய் அகராதிகள் பயன்படலாயின.

27. பத்தொன்பதாம் நூற்றாண்டில் பதினெட்டாம் நூற்றாண்டைக் காட்டிலும் மிகுதியாக ஒருமொழி, பன்மொழி அகராதிகள் தோன்றின. ராட்லர், வின்சுலோ அகராதிகளும் மானிப்பாய், தரங்கம்பாடி அகராதிகளும் இக்காலத்தில் தோன்றியவற்றுள் குறிப்பிடத் தக்கவை.

28. இருபதாம் நூற்றாண்டில் அபிதான கோசம், சிறப்புப் பெயர் அகராதி, அபிதான சிந்தாமணி முதலிய கலைக் களஞ்சியமுயற்சிகளும் இவற்றைத் தொடர்ந்து முறை யான கலைக்களஞ்சியங்களும் தோன்றின. பலவகைப் பொது, சிறப்பு அகராதிகள் எழுந்தன.

29. இன்றுள்ள அகராதிகளுள் சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்ப்பேரகராதியே பேரளவு அகராதியியல் நெறியில் அமைந்துள்ளது. இன்றைய காலத்தின் தேவையை நிறைவு செய்ய மேலும பல அகராதிகளின் தோற்றம் இன்றியமை யாதது.

தமிழ் அகராதிகள் தொகை [quantity] யாலும், வகை யாலும் சிறந்து நிற்கின்றன. ஆனால், அகராதியியல் நெறி யாலும், தகுதியாலும் [quality] அவை சிறந்து விளங்கவில்லை. சுருங்கக்கூறின் தமிழ் அகராதியியல் இன்னும் பொற்காலத்தை எட்டவில்லை.



"Let us, in the interest of our discipline frankly admit that dictionary making has not gone much beyond amateure, adhoe and pedestrian enthusiasm."

—*D. P. Pattanayak*

# குறிப்புகள்

## இயல் 1. தமிழ் அகராதியியல் வரலாறு : அறிமுகம்

1 Vaiyapuri Pillai xxv
2 [1] தொல்காப்பியர் நூ. 783
3 [1] அருணாசலம் 21
4 இந்த ஆய்வேட்டில் இரண்டாம் இயலில் இது குறித்து விரிவாக விளக்கப்பட்டுள்ளது.
5 [2] தொல்காப்பியர் சொல். நூ. 390 இளம்பூரணர் உரை
6 அமிதசாகரர் 172, 182-183, 441, 442
7 Vaiyapuri Pillai xxvii
8 ஷை xxxvi
9 [1] அருணாசலம் 83
10 [1] சண்முகம் பிள்ளை 438
11 Vaiyapuri Pillai xxvii
12 சுந்தர சண்முகனார் 73
13 ஷை
14 [1] அருணாசலம் 83
15 Murray 11; Katre 5
16 சுந்தர சண்முகனார் 228
17 [1] அருணாசலம் 158
18 சுந்தர சண்முகனார் 442
19 அருணாசலம் 158
20 Katre 5
21 Vaiyapuri Pillai xxx
22 சுந்தர சண்முகனார் 284
23 ஷை 285-286
24 ஷை 287
25 Dhamotharan 40
26 சுந்தர சண்முகனார் —மு.வரதராசன் அணிந்துரை 5
27 சுந்தர சண்முகனார் 5

28 Vaiyapuri Pillai xxxv
29 ஷெ
30 ஷெ
31. 'Dr. John Bullokar's "English Expositor" (3rd edn. 1663) contains an index of "ordinary English" words defined in terms of a more "scholastick" nature. **Bashful** had **Verecund** as its corresponding learned equivalent ; **Howling** was the same as **Ululation.'** —Mathews 18; Quoted by Vaiyapuri pillai xxxv
32 சுந்தர சண்முகனார் 307
33 Dhamotharan 59-60
34 ஷெ 60
35 Meenakshisundaram 245
36 இன்னாசி 74
37 சுந்தர சண்முகனார் 300
38 இன்னாசி 269-279
39 சுந்தர சண்முகனார் 307
40 ஷெ 308
41 ஷெ
42 Dhamotharan 85
43 சுந்தர சண்முகனார் 308
44 ஷெ. 311
45 Vaiyapuri Pillai xxxix
46 சுந்தர சண்முகனார் 313
47 ஷெ 314
48 Vaiyapuri Pillai xxxviii
49 சுந்தர சண்முகனார் 317-318

## இயல் 2. நிகண்டுகளுக்கு முற்பட்ட காலம்

1 Vaiyapuri Pillai xxv
2 'A word has both a grammatical and a lexical aspect' —Carrol 46
3 [5] தொல்காப்பியர் நூ. 641 தெய்வச்சிலையார் உரை
4 'Ullmann's view is strikingly similar to this [Teyvacci laiyar's] interpretation. According to him, "their [words] semantic make-up has two components; one lexical, their meaning proper, the other syntatic, their membership in one of parts of speech categories'. —Annamalai 3

5 'இலக்கணம் அறிதற்கு முன்னரே நிகண்டறிக வென்றாம், அறியும் முறை அதுவாதலான்.'
[1] பவணந்தி முனிவர் நூ. 460 சங்கர நமச்சிவாயர் உரை

6 [1] Ullmann 70
7 [2] Ullmann 6-7
8 [1] Ullmann 69
9 Annamalai 5
10 [6] தொல்காப்பியர் நூ. 484 நச்சினார்க்கினியர் உரை
11 [4] தொல்காப்பியர் நூ. 484 சேனாவரையர் உரை
12 எடுத்துக்காட்டு :
பல் — 1. எயிறு, 2. யானை, பன்றி முதலியவற்றின் கொம்பு, 3. நங்கூரநாக்கு, 4. சக்கரம், வாள் முதலியவற்றின் பல் போன்ற கூர், 5. சீப்புப் பல்.
13 எடுத்துக்காட்டு :
பால்[1] — 1. குழவி குட்டி முதலியவற்றை ஊட்டத் தாய் முலையினின்று சுரக்கும் வெண்மையான திரவப்பொருள், 2. மரம் முதலியவற்றிலிருந்து வடியும் திரவப் பொருள், 3. அம்மை முத்திலிருந்து கசியும் திரவப் பொருள், 4. வெண்மை, 5. சாறு.
பால்[2] — 1. பகுதி, 2. பிரித்துக் கொடுக்கை, 3. பாதி, 4. பக்கம், 5. வரிசை, 6. குலம், 7. திக்கு.
குறிப்பு : பால்[1], பால்[2] ஆகியவை ஒப்பு உருச் சொற்கள்.
14 [1] தொல்காப்பியர் நூ. 535, 782, 866, 882
15 Annamalai 14
16 இராமசாமி 59
17 Zgusta 42
18 Vaiyapuri Pillai xxv
19 தொல்காப்பியர் அருஞ்சொற்கள் எனக் கருதும் சொற்களுள் இன்றைக்கு எளிய சொற்களாகத் தோன்றும் 'தீர்தல்', 'தீர்த்தல்', 'பழுது', 'முழுது', 'செழுமை' ஆகியவையும் இடம் பெற்றுள்ளன என்பது குறிப்பிடத்தக்கது. இவை அவர் காலத்தில் அருஞ்சொற்களாக இருந்திருக்கக் கூடும். அவர் அருஞ் சொற்களுக்குப் பொருள் கூறுவதோடு சொற்களுக்கு அரும்பொருளும் கூறியுள்ளார் எனலாம்.

20 No fish ever discovered water and no monolingual speaker ever understood the unique qualities of his own language.

—Fisher i

21 Meenakshisundaram 53

22 தொல்காப்பியர் நூ. 877

23 Vaiyapuri Pillai xxvi

24 'A modern lexicographer does not attempt to fix the language or sit in stern judgment on it. He is a recorder, not a regulator; he describes usage, he does not prescribe. The people who speak and write the language, who use and abuse it, who give birth to new words and let old words die—they are both the lawmakers and the judges'.

—Watt 263

'A dictionary reflects usage ; it does not prescribe it. It is an authority only in so far as it accurately reflects usage.

—Kierzek and Gibson 239

'...many dictionary users persist in regarding these books [dictionaries] not as careful descriptive records but rather as authoritative prescriptive compilations intended to preserve the "purity" of the language. They believe that the dictionary editor should be a censor and excluder and that the mere fact of a word's entry in a dictionary confers legitimacy of approval. But this is to misunderstand not to condemn certain words and phrases by banishment, but to explain by labelling (slang, informal, substandard) and other means the social and linguistic appropriateness of each entry... The authority of a good dictionary rests upon its accuracy in recording the language as actually used in various ambiences, not upon its adherence to some ideal "pure" state of the language.'

—**Encyclopedia Americana** Vol IX 85

'A dictionary is a history, not a law book. ...*Time* magazine phrased it beautifully in reviewing a newly published dictionary; "When he set out in 1746 to

write the first great English dictionary, Samuel Johnson intended his definitions to be laws that would firmly establish meanings. But usage thumbs its nose at laws; the dictionary nowadays is more a Social Register of words than a Supreme Court of language'.

—Ornstein and Gage *112*

25 பின்வரும் தொல்காப்பிய நூற்பாத் தொடர்களைக் காண்க :

ஒரு பொருள் குறித்த வேறுபெயர்க் கிளவி (525)

வினை வேறு படூஉம் பல்பொரு ளொருசொல்
வினை வேறு படாஅப் பல்பொரு ளொரு சொல் என்று
ஆயிரு வகைய பலபொரு ளொரு சொல் (535)

ஒருசொற் பலபொருட் குரிமை தோன்றினும்
பலசொல் ஒரு பொருட் குரிமை தோன்றினும் (782)

ஒருபொருள் குறித்த வேறுசொல் லாகியும்
வேறு பொருள் குறித்த ஒருசொல் லாகியும்
இரு பாற் றென்ப திரிசொற் கிளவி (882)

26 நிகணடுக் குறிப்புகளின் அடிப்படையில் 16 ஆம் நூற்றாண்டுக்கு முற்பட்டுச் சில நிகண்டுகள் இருந்திருக்க வேண்டும் என வையாபுரிப் பிள்ளை குறிப்பிடுகிறார். இதே குறிப்புகளைத் 'திவாகரருக்கு முந்திய நிகண்டுக் குறிப்புகள்' என்னும் தலைப்பில் 9ஆம் நூற்றாண்டுக்கு முற்பட்டவை என மு. அருணாசலம் கூறுகிறார்.

காண்க : Vaiyapuri Pillai xxvii;
[1] அருணாசலம் 36-48

27 நாராயணசாமி ஐயர் 50-51; சிங்கார வேலு முதலியார் 974

28 சுந்தர சண்முகனார் 48-52

29 [1] அருணாசலம் 37

30 'உருவு நுகர்ச்சி குறிப்பே பாவனை
உள்ள வறிவிவை யைங்கந்த மாவன'

—சாத்தனார் 30:189-190

31 ஷெ 27 : 167

32 [3] வையாபுரிப் பிள்ளை 1426

33 சஞ்சீவி 28

34 **நிலகேசி** 666

35 வேங்கடசாமி 150
36 அமிதசாகரர் 4
37 ஷெ 4
38 [1] அருணாசலம் 39
39 அமிதசாகரர் 182-183
40 'உடன்படல் உவமை ஒத்தல் நுட்பம்
சமன் பாதி மிகுதி தலைப்பாடு தனிமை என
நிகழ்ந்த ஒன்பானும் நேரென் கிளவி'
—திவாகரர் 274
41 'நேர் சமம் ஈதல் பாதி
நெடில் உடன்பாடு நுட்பம்'
—மண்டல புருடர் 11:15
42 அமிதசாகரர் 441
43 ஷெ
44 ஷெ
45 [1] அருணாசலம் 41
46 பெருந்தேவனார் 399 உரை
47 திவாகரர் 314-315
48 சுந்தர சண்முகனார் 180
49 திவாகரர் 301
50 பிங்கல முனிவர் 217
51 புத்த மித்திரனார் பொருட்படலம் 14 உரை
52 [7] தொல்காப்பியர் நூ. 1003 நச்சினார்க்கினியர் உரை
53 [1] அருணாசலம் 46-47
54 **இறையனார் அகப்பொருள்** 26
55 [1] தொல்காப்பியர் நூ. 89 இளம்பூரணர் உரை
56 கல்யாண சுந்தரையர் 7
57 [1] அருணாசலம் 48
58 ஷெ 48
59 **ஈடு** 1, 4, 5; 2, 2, 6; 4, 6, 7; 9 ஆம் தொகுதி 10ஆம் பாடல்.
60 Vaiyapuri Pillai xxvii

## இயல் 3. நிகண்டுக் காலம்

1 Vaiyapuri Pillai xxvi
2 சுப்பிரமணிய அய்யர் 326-328
3 குமாரசுவாமிப் பிள்ளை 475
4 [1] பவணந்தி முனிவர் நூ.460 சங்கர நமச்சிவாயர் உரை

5 சுந்தர சண்முகனார் 13
6 Ramanuja Tatachariar - Publishers' Preface i
7 யாஸ்கர் — இராமானுச தாதாசாரியர் முகவுரை 5
8 ராகவன் 440
9 [1] அருணாசலம் 20
10 திவாகரர் ''பதிப்புரை'' 4
11 சுந்தர சண்முகனார் 13
12 'இந்தப் பெயர் [உரிச்சொற் பனுவல்] மிகுந்த பொருட்செறிவு உடையது. அறிவுப் பொருண்மையை எல்லாம் பெயர்ச் சொல்லாக்கினால், அவ் வறிவை விளக்குவதற்குத் துணையாயிருக்கக் கூடிய நிகண்டு உரிச்சொல் போன்றதாகும். இது ஒரு நுட்பமான கருத்து. இன்று சட்டத்தில் Substantive Law and Adjectival Law என்றிருக்கும் இருவிதப் பிரிவினையை ஒப்ப இது உள்ளது. சட்ட தத்துவங்களும், கொள்கைகளும் அவைகளைப் பயன்படுத்தும் விதிகளடங்கிய சட்டத்தை Substantive Law (பெயர்ச் சொல் சட்டம்) என்று சொல்வர். அந்தச் சட்டத்தை அமுல் செய்வதற்குச் செயல் முறை விதிகளடங்கிய சட்டத்திற்கு Adjectival Law (உரிச்சொல் சட்டம்) என்று கூறுவர்.'

—சுப்பிரமணிய அய்யர் 329

13 பிங்கல முனிவர் 2
14 இது கி.பி. 1775இல் ஏடு பெயர்த்து எழுதப் பட்டதாகக் குறிப்பிடப்பட்டிருக்கும் உரிச்சொல் நிகண்டின் ஒரு பழைய பனையோலைச் சுவடியில் உள்ள ஒரு பாடலின் பகுதியாகும்.

—சுந்தர சண்முகனார் 320

15 சொக்கலிங்கம் 4
16 **இறையனார் அகப்பொருள்** 4
17 [1] பவணந்தி முனிவர் நூ. 49 உரை
18 'ஆறங்கம் : மந்திரம், வியாகரணம், **நிகண்டு**, சந்தோ பிசிதி, **நிருத்தம்,** சோதிடம்'

—திவாகரர் 292

19 [1] அருணாசலம் 15-17
20 Vaiyapuri Pillai xxvii
21 [1] சண்முகம் பிள்ளை 438
22 [1] அருணாசலம் 30
23 Annamalai 19
24 [1] அருணாசலம் 28
25 ஷை
26 ஷை
27 [1] சண்முகம் பிள்ளை 1-2
28 [1] வையாபுரிப் பிள்ளை 158
29 ஷை 159-160
30 ஷை 161

31 டிை 164
32 [1] அருணாசலம் 33
33 வையாபுரிப் பிள்ளை 177
34 [1] அருணாசலம் 34
35 [2] வையாபுரிப் பிள்ளை 82
36 Vaiyapuri Pillai xxxiii; சுந்தரசண்முகனார் 22; [1] அருணாசலம் 18
37 [2] அருணாசலம் xxiii

## இயல் 4. அகராதிக் காலம்

1 இளந்திரையன் 90-91
2 Zgusta 198
3 'An encyclopaedia is concerned with the **who, what, when, where, how** and **why** of things. For example, the article on RADAR tells us **what** radar is, **who** developed it, as well as **when** and **where.** It also describes **how** radar operates and **why** it is important in everyday life.'

—Jones 216

4 Zgusta 200
5 Meenakshisundaran 7
6 Caldwell 577
7 Collins 101
8 Gnana Prakasar Preface iii
9 நாராயணன் 60; தேவநேயன் 25-36
10 Vaiyapuri Pillai xxxv
11 Meenakshisundaram 251
12 டிை 264
13 Zgusta 140
14 சுந்தரசண்முகனார் 308
15 சுபபிரமணியம் 20
16 Knowlton and Thani Nayagam Preface 15
17 [2] சண்முகம் பிள்ளை 9
18 டிை 11
19 Zgusta 252-259
20 Vaiyapuri pillai viii
21 Manavalan and Sundaramoorthy 1-15
22 திவாகரர் 287
23 சுப்பிரமணிய அய்யர் 328
24 இளந்திரையன் 91
25 குப்புச்சாமி ஐயர் 189
26 **தமிழ்க் களஞ்சியம்** 1 : 1

# மேற்கோள் நூல்கள்

ANNAMALAI, E.

"Tamil Theory of Meaning" in Seminar on Grammatical Theories in Tamil.
Annamalainagar : Annamalai University, 1966. Typescript.

CALDWELL, Robert.

A Comparative Grammar of the Dravidian or South Indian Family of Languages.
Madras : University of Madras, 1976.

CARROL, Brendon J.

Systems and structures of English.
Madras : Oxford University Press, 1973. 4th impression.

COLLINS, Mark.

Dravidic Studies.
Madras : University of Madras, 1974.

DHAMOTHARAN, A.

Tamil Dictionariers : A Bibliography.
Wiesbaden : Steiner, Beitrage Zur sirdasienforchug, 1978.

*Encyclopedia Americana.*

New york : Americana Corporation, 1969. Vol, 9, pp. 316–317.

FISHER, John H.

A Linguistic Guide to Language Learning: Foreword.
New york : The Modern Language Association of America, 1966.

GNANA PRAKASAR, Rev. S.

An Etymological & Comparative Lexicon of the Tamil Language.
Cunnakam (Ceylon) : Tirumakal Press, 1938, Vol. 1, Part 1.

JONES, Morris I.

"Encyclopedia." The World Book Encyclopedia.
Illinois : Field Enterprises Educational Corporation, 1964. Vol. 5, pp. 216-222.

KATRE, S.M.

Lexicography.
Annamalainagar : Annamalai University, 1965.

KIERZEK, John M. and GIBSON, Walker.

The Macmillan Handbook of English.
New York : The Macmillan Company, 1960. 4th edn.

KNOWLTON, Edgar C. and THANI NAYAGAM, Xavier S. (Tr.)

"Preface," Tamil-Portuguese Dictionary.
Ambalacatta: 1679.

MANAVALAN, A.A. and SUNDARA MOORTHY, E.

"A case for a Learner's Tamil-English Dictionary,"
Annals of Oriental Research-28 : 2, 1979. pp. 1-15.

MATHEWS, Mitford M.

A Survey of English Dictionaries.
London : Oxford University Press, 1933.

MEENAKSHISUNDARAM, K.

The Contributions of European Scholars to Tamil.
Madras : University of Madras, 1974.

MEENAKSHISUNDARAN, T.P.

A History of Tamil Language.
Poona: Deccan College, 1965.

MURRAY, James A.H.

The Evolution of English Lexicography.
London : Oxford University Press, 1900.

ORNSTEIN, Jacob and GAGE, William W.
The ABC'S of Languages and Linguistics.
New York: Chilton Books: 1964,

RAMANUJA TATACHARIAR, Agnihotram ed.
Yaska's Nirukta and Nighantu (with Transliteration and Translation into Tamil-pt. I).
Thanjavur: Saraswati Mahal Library, 1973.

1 ULLMANN, S.
The Principles of Semantics.
Blackwell : Oxford University Press, 1957.

2 ————.
Meaning and Style.
Basil Blackwell : Oxford University Press, 1973.

VAIYAPURI PILLAI, S.
"History of Tamil Lexicography," Tamil Lexicon.
Madras : University of Madras, 1936. Vol. 1 pp. xxv-xiv.

WATT, Willam W.
An American Rhetoric.
New York: Holt, Rinehart & Winston, 1960. Rev edn.

ZGUSTA, Ladislav, et al
Manual of Lexicography.
The Hague : Mouton and Company, 1971.

அமிதசாகரர்.
**யாப்பருங்கலம்** (விருத்தியுடன்).
மே.வீ. வேணுகோபாலப்பிள்ளை (ப.ஆ.)
சென்னை: அரசினர் சுவடி நூலகம், 1960.

1 அருணாசலம், மு.
**திவாகரர்.**
திருச்சிற்றம்பலம (மாயூரம்): காந்தி வித்தியாலயம், 1975.

அருணாசலம், மு.
**தமிழ் இலக்கிய வரலாறு.**
(பதினாறாம் நூற்றாண்டு மூன்றாம் பாகம்).
திருச்சிற்றம்பலம்: காந்தி வித்தியாலயம், 1976.

ஆண்டிப் புலவர்.
**ஆசிரிய நிகண்டு**
வீ. சொக்கலிங்கம் (ப. ஆ.)
தஞ்சாவூர்: சரசுவதி மகால் நூலகம், 1975.

இராமசாமி, க.
''தொல்காப்பியரின் மொழிப் பொருட்சிந்தனைகள்''
**புலமை**-4:1, 1978. பக். 50-63.

இளந்திரையன், சாலை.
**புதுத் தமிழ் முதல்வர்கள்** : கலைக்களஞ்சியம்.
சென்னை: தமிழ்ப் புத்தகாலயம், 1972.

**இறையனார் அகப்பொருள்** (உரையுடன்).
சென்னை: கழகம், 1969.

இன்னாசி, சூ.
**சதுரகராதி ஆராய்ச்சி.**
மதுரை: மதுரை காமராசர் பல்கலைக்கழகம், ஆ. இ.

கல்யாண சுந்தரையர், எஸ். (ப.ஆ.)
**தமிழ் நெறி விளக்கம்** (மூலமும் பழைய உரையும்).
(டாக்டர் உ.வே.சா. குறிப்புரையுடன்).
சென்னை: 1947.

குப்புச்சாமி ஐயர், வி. (ப.ஆ.)
**விவேகபோதினி** - 9:4&5.
சென்னை: கார்டியன் அச்சகம், 1916. ப.189.

குமாரசுவாமிப் பிள்ளை, சுன்னாகம் அ.
''நிகண்டு கற்றல்''
**செந்தமிழ்** - 16:10,1918. பக். 475-478.

சண்முகம் பிள்ளை, மு.
**கலைக் களஞ்சியம்**: நிகண்டு.
சென்னை: தமிழ் வளர்ச்சிக் கழகம், 1959.
தொகுதி-6, பக். 437-440.

